உ

கணபதி துணை.

ஸ்ரீ திரிபுரசுந்தர்யைநம:

---

வியாசமுநிவரருளிய

பதினெண் புராணங்களிலொன்ருகிய

# தேவீபாகவதம்.

---

## பூர்வபாகம்.

---

ஸ்ரீகாஞ்சிப்புரம் ஸ்ரீமத் ஏகாம்பர சிவயோகிகள்

மாணுக்கர்

ஆலாலசுந்தரம்பிள்ளையவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு


சென்னை

வித்வசிரோமணி அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம்பதிப்பு.

---

1930.




[இதன் விலை ரூபா. 5

ஓம்.



எமது விலாசம்,


கா. ஏகாம்பரம் பிள்ளை

19, சண்டாலஸ் ரோட்,

வேப்பேரி, சென்னை.

பரவைமணவாளர்சீர்பரவும்
ஸ்ரீலஸ்ரீகா. ஆலாலசுந்தரம் பிள்ளை அவர்கள்
அச்சிட்டுள்ள புத்தகங்கள்.

## தேவி பாகவதம்.

இது பதினெண்மகா புராணங்களில் ஒன்றாய் எல்லாப் புராணங் கட்கும் மகுடமாயுள்ளது. பராசக்தியின் மகிமை நிறைந்திருக்கும் பெருமையுடையது. சமஸ்கிருதத்திலிருக்கும் இப்பெரிய நூலை கல்வி யறிவுடைய மங்கையரும் எளிதில் வாசித்துசக்தியினுடைய அருமை பெருமைகளை யறிந்து பக்தி யுடையராய் சம்பத்துடன் வாழ 18,000 சுலோகங்களையும் தமிழில் வசன ரூபமாக வாசிப்போர்க்கு இன்ப முண்டாகத் தக்கதாய்ச் செய்யப்பட்டுள்ளது. இதில் சிவகுடும்பிணி யாகிய ஸ்ரீ தேவியினது உபாசனு கிரம விசேடங்களையும் தேவி மந் திரபேதங்களையும் மந்திர சித்தி பிரயோஜனங்களையும் பிரசித்தியைக் கொடுக்க வல்ல காயத்திரி சம்மந்தமான சகல மஹிமா விசேடங்களை ப்பற்றியும் விரிவாக எடுத்து கூறும் நூல்.

இது டிம்மி 8-பக்கங் கொண்ட 200-பாரத்திற்கு மேற்பட்டுள் ளது. பூர்வபாகம், உத்தரபாகம் என இரண்டு புத்தகமாக காலிகோ பயிண்டு செய்துள்ளது. விலை ரூ. 9—0—0

## பெரிய புராணம் மூலமும் சித்தாந்த போத ரத்னுகரமென்னும் பொழிப்புரை விசேட உரையும்.

| | | | |
|---|---|---|---|
| 1. திருமலைச்சருக்கம் | 2 | 4 | 0 |
| 2. தில்லைவாழ்ந்தணர் சருக்கம். | 2 | 0 | 0 |
| 3. இலைமலிந்த சருக்கம் | 2 | 8 | 0 |
| 4. மும்மையால் உலகாண்ட சருக்கம் | 1 | 8 | 0 |
| 5. திருநின்ற சருக்கம் அப்பர்சுவாமிகள் புராணம் (இல்லாமல்.) | 1 | 4 | 0 |
| 6. ௸ 1. 2. 3. சருக்கங்களும் சேர்ந்தது | 6 | 8 | 0 |
| 7. ,, 4. 5. ,, ,, ,, | 2 | 8 | 0 |
| 8. ,, 1. 2. 3. 4. 5. ,, ,, ,, | 8 | 4 | 0 |
| 9. பத்தராய்ப் பணிவார் சருக்கம் | 0 | 4 | 0 |
| 10. காரைக்காலம்மையார் புராணம் மூலமும்-உரையும் | 0 | 4 | 0 |
| 11. திருஞான சம்பந்தர் புராணம் ,, ,, ஏறக்குறைய 225-பாடல் வரையில் | 1 | 0 | 0 |
| 12. குலச்சிறைய நாயனுர் புராணம் ,, ,, | 0 | 2 | 0 |

13. திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் (திருவியலூர் உய்யவந்த தேவ நாயனுர், திருக்கடைவூர், உய்யவந்த தேவநாயனுர்) மூலமும் சித்தாந்த போத ரத்நாகர உரையும் ராயல் 8-பக்கங்கள் கொண்டது. இவ்விரண்டும் விரிவான உரையுடன் விலை ரூ 2 0 0

## காஞ்சிப்புராணம். மூலமும்-உரையும்.

இது பதவுரை, பொழிப்புரை, விசேட வுரையாகவும் அச்சிட் டுள்ளது ராயல் 8-பக்கங்கள் கொண்டது.

நாட்டு நகரப் படலம் மட்டும் விலை ரூ 1 8 0
3-ம் பாகம் விலை ரூ 1 8 0

IMPERIAL PRINTING HOUSE, PERIAMET MADRAS.

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை. மூலமும்-உரையும்

ஸ்ரீ சிதம்பர சுவாமிகளால் திருப்போரூர் முருகப்பெருமான் மீது பாடியுள்ளது. டிம்மி 8-பக்கங்கள் கொண்டது. இரண்டாம் பதிப்பாக அலங்காரம் வரையில் அச்சிட்டிள்ளது. விலை ரூ- 1 8 0

## காமாக்ஷிலீலாப்பிரபாவம் அல்லது காமாக்ஷி விலாசம்.

இது மார்க்கண்டேயபுராணத்திலுள்ளது -தமிழில் நூதனமாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. காஞ்சி க்ஷேத்திரத்திலுள்ள ஒவ்வொரு க்ஷேத்திரத்தின் மகிமைகளையும் இடங்களையும் தெரிந்துக்கொள்வதற்கு ஓர் கண்ணாடிபோன்றது -வசனரூபமாக எளியதமிழ்மொழியில் எழுதி வுள்ளது- விலை ரூ- 0 6 0

| | | | |
|---|---|---|---|
| பார்வதியார் பனுவல் திரட்டு | 0 | 2 | 0 |
| முருகர்தோத்திரப்பாக்கள் 108-சிவஸ்தல புராணங்களி லிருந்து திரட்டியது | 0 | 2 | 0 |
| தணிகை அநுபூதி | 0 | 0 | 6 |
| வள்ளி காந்தன தோத்திரமஞ்சரி | 0 | 8 | 0 |
| காஞ்சி தேவாரப்பதிகங்கள் | 0 | 2 | 0 |
| ஸ்ரீ தாயுமானவர் பாடலில் „வேதமுடனாகமம்" என்ற திருப்பாசுரத்திற்கு உரை | 0 | 1 | 0 |
| காஞ்சிபுரம் திருநெறிக்காரைக்காட்டுப் புராண வசனம் | 0 | 1 | 0 |
| கந்தப்புராணக்கதைகளும் அவைகளுணர்த்தும் உண்மைநூற் கருத்தும் (விரிவான) வசனரூபமானது. விலை ரூப. | 0 | 8 | 0 |

## கிறிஸ்தவமும் தமிழும்

திரு. மயிலை, சீனி, வெங்கடசாமி அவர்கள் எழுதிய புதிய நூல்கள்.

இந்நூல் தமிழ்மொழிச் சரித்திரத்தின் ஒரு பகுதி, இதுவரை எழுதப்படாதது. முதல் முதலாக இப்பொழுது வெளி வருகிறது ஒவ்வொருவரும் அவசியம் வாசிக்க வேண்டியவை. பலபடங்களுடன் கூடியது.

கிறிஸ்தவ உலகம் தமிழ் மொழியில் செய்துள்ள மாறுதல்களையும் அபிவிருத்திகளையும் தொகுத்தும் விரித்தும் கூறுவது இந்நூல். விலை. ரூ. 1 0 0

## பௌத்தமும் தமிழும்

இதில் எழுதப்பட்டுள்ள பற்பல விஷயங்களில், தமிழ் நாட்டி லிருந்த பௌத்தப் பெரியார்களின் வரலாறுகளும் புத்த தேவர்மீது பண்டைத் தமிழாசிரியர் இயற்றிய சுவை ததும்பும் பாக்களும், மணி மேகலைத் தெய்வத்தின் பண்டையவரலாறுகளும், தமிழ் நாட்டிலிருந்த பௌத்த திருப்பதிகளின் வரலாறுகளும், பௌத்தர் தமிழ் மொழிக் குச்செய்த தொண்டுகளும், ஒவ்வொருவரும் அவசியம் படித்தின்புற வேண்டிய பாகங்கள் அடங்கியுள்ளது. படங்களுடன் ரூ. 1 8 0

விலாசம் :—

சுந்தர விலாஸ்புத்தக சாலை.

3/19, ரண்டால்ஸ் ரோட், வேப்பேரி, சென்னை.

உ

ஸ்ரீ காமாக்ஷியம்மன் துணை



எனது விலாசம்.—

**கா. ஏ. வல்லிநாதன்.**

சுந்தர விலாஸ் புத்தகசாலை

3/19 ரண்டால்ஸ் சாலை, வேப்பேரி. சென்னை,

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை. மூலமும்-உரையும்

ஸ்ரீ சிதம்பர சுவாமிகளால் திருப்போரூர் முருகப்பெருமான் மீது பாடியுள்ளது. டிம்மி 8-பக்கங்கள் கொண்டது. இரண்டாம் பதிப்பாக அலங்காரம் வரையில் அச்சிட்டுள்ளது. விலை ரூ- 1 8 0

## காமாக்ஷிலீலாப்பிரபாவம் அல்லது காமாக்ஷி விலாசம்.

இது மார்க்கண்டேயபுராணத்திலுள்ளது -தமிழில் நூதனமாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. காஞ்சி க்ஷேத்திரத்திலுள்ள ஒவ்வொரு க்ஷேத்திரத்தின் மகிமைகளையும் இடங்களையும் தெரிந்துகொள்வதற்கு ஓர் கண்ணாடிபோன்றது -வசனரூபமாக எளியதமிழ்மொழியில் எழுதிவுள்ளது- விலை ரூ- 0 6 0

| | | | |
|---|---|---|---|
| பார்வதியார் பனுவல் திரட்டு | 0 | 2 | 0 |
| முருகர்தோத்திரப்பாக்கள் 108-சிவஸ்தல புராணங்களி விருந்து திரட்டியது | 0 | 2 | 0 |
| தணிகை அநுபூதி | 0 | 0 | 6 |
| வள்ளி காந்தன் தோத்திரமஞ்சரி | 0 | 8 | 0 |
| காஞ்சி தேவாரப்பதிகங்கள் | 0 | 2 | 0 |
| ஸ்ரீ தாயுமானவர் பாடலில் „வேதமுடனுகமம்" என்ற திருப்பாசுரத்திற்கு உரை | 0 | 1 | 0 |
| காஞ்சிபுரம் திருநெறிக்காரைக்காட்டுப் புராண வசனம் | 0 | 1 | 0 |
| கந்தப்புராணக்கதைகளும் அவைகளுணர்த்தும் உண்மைநூற்கருத்தும் (விரிவான) வசனரூபமானது. விலை ரூபா. | 0 | 8 | 0 |

## கிறிஸ்தவமும் தமிழும்

திரு. மயிலை, சீனி, வெங்கடசாமி அவர்கள் எழுதிய புதிய நூல்கள்.

இந்நூல் தமிழ்மொழிச் சரித்திரத்தின் ஒரு பகுதி, இதுவரை எழுதப்படாதது. முதல் முதலாக இப்பொழுது வெளி வருகிறது ஒவ்வொருவரும் அவசியம் வாசிக்க வேண்டியவை. பலபடங்களுடன் கூடியது.

கிறிஸ்தவ உலகம் தமிழ் மொழியில் செய்துள்ள மாறுதல்களையும் அபிவிருத்திகளையும் தொகுத்தும் விரித்தும் கூறுவது இந்நூல்.

விலை. ரூ. 1 0 0

## பௌத்தமும் தமிழும்

இதில் எழுதப்பட்டுள்ள பற்பல விஷயங்களில், தமிழ் நாட்டிலிருந்த பௌத்தப் பெரியார்களின் வரலாறுகளும் புத்த தேவர்மீது பண்டைத் தமிழாசிரியர் இயற்றிய சுவை ததும்பும் பாக்களும், மணிமேகலைத் தெய்வத்தின் பண்டையவரலாறுகளும், தமிழ் நாட்டிலிருந்த பௌத்த திருப்பதிகளின் வரலாறுகளும், பௌத்தர் தமிழ் மொழிக்குச்செய்த தொண்டுகளும், ஒவ்வொருவரும் அவசியம் படித்தின்புற வேண்டிய பாகங்கள் அடங்கியுள்ளது. படங்களுடன் ரூ. 1 8 0

விலாசம் :—

சுந்தர விலாஸ்புத்தக சாலை.

3/19, ரண்டால்ஸ் ரோட், வேப்பேரி, சென்னை.

IMPERIAL PRINTING HOUSE, PERIAMET MADRAS.



ஸ்ரீ திரிபுரசுந்தர்யை நம:

# தேவீ பாகவதம்,

---

# பிரகடனம்.

---

"ஸ்ரீமத் பாகவதம், புண்யம் நானுக்கியான கதான்விதம்,
த்வைபாயன முகோத்பூதம் பஞ்சலக்ஷண சம்யுதம்"

---

இந்நூல், "சிவமெனும் பொருளும் ஆதிசத்தியொடு சேரினெத்தொழிலும் வல்லதாம், இவள் பிரிந்திடி னியங்குதற்கு மரிதரிதென மறையிரைக்குமால்" என்ற பிரமாணப்படி சிவத்தையசைப்பித்து எல்லாத்தொழிலையுஞ் செய்விக்கவல்ல பிரதம சத்தியாகியும், வித்தை எனவும், சர்வஜ்ஞை எனவும், சமுசாரபந்தத்தைச் சேதிப்பதில் நிபுணை எனவும், தியானுஸ்பதத்தை யடைவிக்கச் செய்வதில் வல்லபை எனவும் உத்கோஷிக்கும் வித்தியாசொருபிணியாகியும் விளங்கும் பராசத்தியாகிய பகவதியினுடைய மகிமாதி சயங்களைக் கூறும் புராணரூபமாயுள்ளது.

புராணம், "சர்க்கஸ்ச ப்ரதிசர்க்கஸ்ச வம்ஸோ மந்வந்தராணிச, வம்ஸாநு சரிதஞ்சைவ புராணம் பஞ்சலக்ஷணம்," என்று கூறும் ஐந் திலக்கணங்களையும் உடைத்தாயிருக்க வேண்டுமாதலால், சிருட்டியாதி நிமித்தம் சாத்வீக, ராஜச தாமசமென்னுந் திரிகுண சத்தி சொரூபமாய் விளங்கும் பகவதியினது திருமேனிகளினுடைய வியல்பு கூறும் சர்க்கமும், சிருட்டியாதி முத்தொழிலியற்றும் பிரமனாதி மும்மைத் தேவ்ருற்பத்தி கூறும் பிரதி சர்க்கமும், சோமசூரியாக்னிகளால் சனித்தவர்களான அரசர்களுடைய பரம்பரைகளைக் கூறும்வம்சமும், சுவாயம்பு முதலிய பதினான்கு மநுக்களுடைய காலவளவை முதலியன கூறும மன்வந்தரமும், அம்மனுக்களுடைய வம்சசரித்திரங்கள்கூறும் வம்சாநு சரிதமுமாகிய ஐந்தினையும் விரிவாயெடுத்து கூறியுளது இப்புராணம்,

இது, பன்னிரண்டு ஸ்கந்தங்களாகவும், (ருகஅ) அத்தியாயங்களாகவும் பதினெண்ணுயிரஞ் சுலோகங்களாகவும் வகுக்கப்பட்டுள்ளது.

இதுகாறும் கணபதி, ஸ்கந்த, சிவ விஷ்ணுவாதியர்களுடைய மகிமாதிசயங்களைக் கூறும் புராணமுதலிய பல வடமொழியின்கணுள்ள நூல்கள் பலகாளாய்ப் பலமுறையாக வெளிப்பட்டு வருகின்றனவே யன்றி தேவீ சம்பந்தமாயுள்ள பெருநூல்களி லொன்றேனும் வெளிப்பட்டதின்று.

தேவி எத்தன்மையளெனின், "பரந்தபராபரையாதி பரனதிச்சை பரஞானங்கிரியை பரபோகரூபக், தருங் கருணையுருவாகி விசுத்தா சுத்தத் தநுகரண புவனபோகங்கடாங்க, விரிந்த வுபாதானங்கண்மவி யொன்றுய் விமலமாயைந்தொழிற்கும்வித்தாய்" எனவும், "சங்கையினு ளுமணைத்துஞ் செய்தாற்போ னுடனைத்தும், நங்கையினுற் செய்தளிக்கு நாயகன், எனவும், "குவளைக்கண்ணி கூறன் காண்க, அவளுந் தானுமுடனே காண்க, பரமானந்தப் பழங்கடலதுவே" எனவும், சிவப்பிரகாசம், திருக்களிற்றுப்படியார் திருவாசக முதலியவற்றிற்கூறிப் போந்த திருவாக்குகளான் சிவபெருமானு ரியற்றியருளும் பஞ்சகிருத்திய சத்தியாப் அவற்றிற்குக் காரணியாயிருப்பவளெனவும், அவ்விறைவர், காரணியாகிய அச்சத்தியைக் கொண்டே ஆன்மாக்களுக்கு அனுக்கிரகமுறைமையைப் புரிகின்றவரெனவும் அவ்வனுக்கிரகம் போக யோகப் பிரதமானதாற் போகானுக்கிரகத்தின் பொருட்டு அவ்வருணைக்கியை ஒரு கூருகத் திருமேனியிற் படைத்தவரெனவும், அவள் கூற்றிலே தன்னையும், தன் கூற்றிலே அவளையும் காண்டலாகிய யோகானுக்கிரகத்தின் பொருட்டு அவளுந் தானுமுடனுயிருத்தலாகிய திருமேனியைப் படைத்தவரெனவும், இத்திருமேனியைக் காணப்பெற்ருர் நானென்பதற்று, தானகவே இருத்தலாகிய பரமானந்தத்தில் மூழ்கியிருத்தற்பொருட்டு மனவாக்குக் கெட்டாததாகிய அவளது அருட்டிருமேனியைப் படைத்தவரெனவும் வெளிப்பட்டன.

இங்ஙனமான அருஞ்சிறப்பு வாய்ந்த பகவதியினுடையசம்பந்தமாகிய வடமொழியிலுள்ள பாகவதத்தை, தென்மொழியில்

வல்லவர் மகிழவும் எஜீனயோரும், கல்விநலம் வாய்க்கப்பெற்ற பெண்டிரும் முறையே கற்று தேவியினுடைய திருவருளுக் குரியராகவும் அவளது பொன்னடியைக்கருதி தமிழில் எளியநடையாய் மொழிபெயர்க்கலாயிற்று.

பாகவதம்—பாகவதமென்ருல் யாவரும் விஷ்ணு பாகவதமென்று கிரஹிப்பரேயன்றி (தேவீபாகவதம் வழங்கி வாராமையால்) தேவீபாகவதமென்று கிரஹிக்கவறியார் எனவும்;

அன்றியும் சிலர், விஷ்ணுமூர்த்தி பகவானுதலால் அவருடைய அவதாராதி லீலைகளைக்கூறும் நூலுக்குப் பாகவதமெனப் பெயர்வந்தது என்று கூறுவர், அது நிலைபெருது, ஏனெனில், பகவானென்கிற நாமம் சிவனுருக்கும், பிரமனுக்கும், அருகனுக்கும், சூரியபகவானென்று சூரியனுக்கும், அக்னிபகவானென்று அக்னிக்கும் வியாசபகவானென்று வியாசருக்கும், சூதபகவானென்று சூதருக்கும், இன்னம் பல தேவர்களுக்கும் பல இருடிகள் முதலானவர்களுக்கும் ஏற்றப்பட்டு உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் வழங்கிவருதலால் யாவரும் பகவான்களேயாவர்; ஆகையால் விஷ்ணுமூர்த்தியே பகவானென்கிற நாமமுடையவரென்பது யாங்ஙனம் பொருந்தும் எனவும்

பகவதி சப்தம் புன்லிங்கமன்று, ஸ்திரீலிங்க மாகையால்அந்த சப்தம் தேவிக்கே வுரித்தெனவும், இவ்வுண்மைதோன்றவே வியாசர், சிவ விஷ்ணு வாதியருக்கு புராணங்கள் வகுக்கும்பொழுது சிவபாகவதம், விஷ்ணுபாகவதம், பாத்மபாகவதம் ஆக்னேய பாகவதம் ஆதித்ய பாகவதம் என்றுகூருது சிவபுராணம் விஷ்ணு புராணம், பாத்யபுராணம், ஆக்னேயபுராணம், ஆதித்யபுராணம் எனவகுத்து தேவீசம்பந்தமான இந்த நூலை "தத்துபாகவதம் ப்ரோக்தம் நது தேவீபுராணகம்" எனவே தேவீபுராணமென்று கூறக்கூடாது (தேவீ) பாகவதமென்றே கூறவேண்டுமெனவும்;

இவ்வாறே மஹாபுராண உப புராணங்களில் பல விடங்களிலும் (பராசரோக்தம் ப்ரவரம் ததா பாகவ தாஹ்வயம்) (புராண

பாகவதம தவுர்க்கம் நந்திப்ரோக்தம் ததைவச) (சைவம் பாகவதம் தவுர்க்கம்,) (சைவமாதி புராணஞ்ச தேவீபாகவதந்ததா) (பிராஹ்மஞ்ச வைஷ்ணவம் பாத்மம் சைவம் பாகவதம், ததா) என கூர்மகருட பாத்மாதிகளில் ஆங்காங்கு கூறப்பட்டிருக்கின்றது எனவும்,

மஹாபுராண உபபுராணபிரதி பாதகமாயுள்ளது இத்தேவீ. பாகவத மொன்றே எனவும்

வேத காயத்திரியானது, திரிபாதையாய்ப் பிரதி பாதிக்கப் பட்டிருக்கிறது, அதற்குரிய ருஷி, சந்தஸு, பீஜம், நியாசம் தியானமுதலியன எதில் முறையாகக் கூறப்பட்டுள்ளனவோ அது பாகவதமா மென்பது பிரமாணமாகலான் அவைகளைக் கூறுவதாகிய இத்தேவீபாகவதமே பாகவதமாகுமன்றி இம்முறைமைகளைக் கூறுத விஷ்ணுபாகவதமென வழங்கும் பாகவதம் எங்ஙனம் பாகவதமாகுமெனவும்;

இப்பொழுது விஷ்ணு பாகவதமென்று வழங்கு நூலில் வருகின்ற சரித்திராதிகளெல்லாம் இப்பாகவதத்தில் நான்காவது ஸ்கந்தத்தில் கிருஷ்ணுவதாராதி பிரச்னம், கிருஷ்ணுவதார காரணம், கிருஷ்ண சன்ம கதனம் கிருஷ்ண லீலாப்ராரம்பம் என்றற்றொடக்கத் தனவாகிய கிருஷ்ணமூர்த்தியினுடைய விஷயங்களும், வசுதேவாத் யவதாரகாரணம், கம்சகிருத தேவகீ சப்த சுத வதம், என்றற் றொடக்கத்தனவாகிய சரித்திர விசேஷங்கள் பலவும் இவையன்றி வேறு சிலவும் வருகின்றன, இவற்றையெல்லாம் "பம்மா போத" ரென்பவராற் சங்கிரகித்துப் பெருநூலாக்கி விஷ்ணுபாகவதமென்கிற பெயராற்பிரசுரஞ் செய்யப்பட்ட தெனவும்;

தேவீபாகவத விஷ்ணு பாகவதங்களுடைய உண்மையுணர்ந்த பண்டிதோத்தமர்கள் வடமொழி பாகவத பீடிகையில் பிரசுரஞ் செய்திருக்கின்றனர். அதில் இதுபற்றிய விஷயங்கள் இன்னும் பலவுள அவையெல்லாம் கண்டு விரிக்கிற் பெருகுமென விடுத்தாம்.

உ

சிவமயம்.

ஸ்ரீ காமாக்ஷி தேவியை நமஃ

# முக்கிய குறிப்பு.



இப்புத்தகத்தைப் படிக்க ஆரம்பிப்பதற்கு முன்பு கனவான்கள் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயம் என்னவெனின், இப்புத்தகத்தில் விஷயங்கள் சிறிதும்விடப்படாமல் பூர்த்தியாயிருப்பினும் அச்சுப்பிழையின் காரணமாகச் சில பக்கங்களிலும், சுலோக எண்களிலும், தவறான எண்கள் தரப்பட்டுள்ளன. அப்படி யிருப்பினும் நூலின் விஷய பக்கங்கள் முற்றிலும் பூர்த்தியாயுள்ளன, என்பதை அறிந்து கொள்ளவும்.

தவறாகத் தரப்பட்டுள்ள பக்க எண்கள்.

| ஸ்கந்தம். | பக்கம். | விஷயம் முடியும் விதம். |
|---|---|---|
| 3 | 52-57 | வண்ணம்—அநுக்கிரகவார்த்தை |
| 4 | 22-25 | சிந்தனையுடை—யவரிடத்தில் |
| 5 | 70-73 | முன்னின்று பகரிக்—கின்றவனும் |
| 5 | 48-ம் பக்கம் இருக்க வேண்டியதற்கு 36-என்றது தவறு. | |
| 6 | 128-137 | நாயகனுக்க்—கொள்வாள். |

தவறாக தரப்பட்டுள்ள சுலோக எண்கள்.

| ஸ்கந்தம். | பக்கம். | தவறான சுலோகஎண்கள். | சரியான சுலோகஎண்கள். |
|---|---|---|---|
| 1 | 17 | 24—36 | 34—36 |
| 1 | 32 | 53—52 | 51—52 |
| 1 | 75 | 1—11 | 1—13 |
| 2 | 32 | 15—48 | 15—38 |
| 2 | 47 | 18—41 | 11—18 |
| 3 | 21 | 24—39 | 34—38 |
| 3 | 52 | 37—43 | 37—49 |
| 3 | 61 | 21— 3 | 21—33 |
| 3 | 72 | 64—97 | 64—79 |
| 3 | 102 | 32—41 | 32—57 |
| 3 | 125 | 1— 7 | 1—29 |
| 3 | 143 | 1— 5 | 1—11 |
| 3 | 164 | 26—44 | 29—44 |
| 3 | 167 | 42—69 | 62—69 |
| 3 | 169 | 20—25 | 20—35 |
| 3 | 172 | 1—26 | 1—37 |
| 4 | 8 | 18—22 | 18—28 |
| 4 | 17 | 1—19 | 1—16 |
| 4 | 56 | 1— 6 | 1— 8 |
| 4 | 112 | 18—33 | 18—37 |

# அத்யாய சூசனை.

## முதல் ஸ்கந்தம்.



## இரண்டாம் ஸ்கந்தம்



## மூன்றும் ஸ்கந்தம்.

நான்காம் ஸ்கந்தம்,



ஐந்தாம் ஸ்கந்தம்.

ஆறும் ஸ்கந்தம்.



ஏழாம் ஸ்கந்தம்.

எட்டாம் ஸ்கந்தம்.

தேவீபாகவத அத்யாயசூசனை முற்றிற்று.

---

உ

கணேசாயைநம:

# தேவீபாகவதம்.

## பூர்வபாகம்.

### முதல்ஸ்கந்தம்.

பராசத்திவணக்கம்.

யாமாராத்ய விரிஞ்சிரஸ்ய ஜகத : ஸ்ரஷ்டா ஹரி : பாலக :
ஸம் ஹார்த்தா கிரிசஸ்வயம் ஸமபவத் தியேயா சயாயோகிபி :
யாமாத்யாம் ப்ரகிருதிம் வதந்தி முநய ஸ்தத்வார்த்த விஜ்ஞாபராம்
தாம்தேவீம் பிரணமாமிவிஸ்வஜநநீம் ஸ்வர்க்காபவர்க்கப்ரதாம்.
யாஸ்வேச்சா யாஸ்ய ஜகத ; ப்ரவிதாயசிருஷ்டிம்
ஸம்பிராப்ய ஜன்ம சததா பதிமாபசம்பும்
உக்ரைஸ்தவோபி ரபியாம் ஸமவரப்யபத்நீம்
ஸம்பு : பதம் ஹ்ருதிததே பரிபாதுஸாந :

பிரம விஷ்ணு ருத்ரர்கள் எந்தப்பராசத்தியைப் பூசித்து இவ்வுலகிற்குமுறையே படைத்தல்காத்தல் அழித்தலாகிய அதிகாரங்களைப் பெற்றார்களோ, பரமயோகிகளால் எந்த ஆதிசத்தி சொரூபமான்து எப்பொழுதும் தியானிக்கத்தகுந்ததோ, தத்வார்த்த முணர்ந்த மஹருஷிகள் எந்தப்பராசத்தியை முதற்காரணமாகக் கூறுகின்றனரோ, அங்ஙனமான போகமோக்ஷங்களைத்தரும் பிரபஞ்சமாதாவாகிய அம்பிகையை நமஸ்கரிக்கின்றேன்.

எந்த அம்பிகை தனதிச்சாசாமார்த்தியத்தினல் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கின்றனளோ, எந்தத்தாக்ஷாயணி பர்வதராஜ புத்திரியாயவதரித்து உக்ரமான தபோபலத்தினல் பரமசிவனைப் பதியாகவடைந்தனளோ, எந்தப்பார்வதியைப் பரமசிவன் பத்தினியாகக்கொண்டு அவளதுபாதத்தை இருதயத்தில் வைத்துக்கொண்டனரோ அப்படிப்பட்டதேவி நம்மைக்காப்பாற்றுக.

ஸர்வ சைதன்ய ரூபாந்தாமாத்
யாம் வித்யாஞ்ச தீமஹீ
புத்திம்யாந: ப்ரசோதயாத்.

ஸதாசிவகுடும்பின்யைநம:

# முதலாம் அத்தியாயம்.

## சவுனகர் வினா.

---

காரணபரசித்ரூபா காஞ்சீபுர ஸீம்நி காமபீடகதா
காசனவிகரதி கருணா காஸ்மீர ஸ்தபககோமளாங்கலதா.

(௧-௩) சூதமுனிவரே! நீர்சுபகரங்களான புராணங்களுள் அடங்கிய சம்ஹிதைகளைக் கற்றுணர்ந்தவரா யிருக்கின்றபடியால் நீரேமஹா புண்யபுருஷர், மஹானுபாவர், மஹாபாக்கியசாலி, சத்யவதீபுத்திராகிய வியாசமுனிவர்முகமாய்ச் சம்ஹிதைகளேயன்றிபஞ்சலக்ஷணமுள்ளதாகியும், அதிகரகசியத்துடன் கூடினதாயும், ஜ்ஞானப்பிரதமாகியும், திவ்ய (மனசுக்குரம்ய) மாகியும் இருக்கின்ற சகலபுராணங்களையுங் கற்றுணர்ந்தவர். *

---

* சகலபுராணங்களென்றது-உபபுராணங்களை. இம்மூன்று சுலோகங்களால் முறையே சவுனகமுனிவரையுள்ளிட்ட முனிவர்களெல்லாம் சூதமுனிவரைப் போதகாசிரியராகக் கொண்டனராகையான் அக்கொள்கைதோன்ற மஹாபுண்யபுருஷர், மஹானுபாவர், மஹாபாக்யசாலி என ஒவ்வொரு பதங்களையும் உபசர்க்கத்துடன் புகழ்ந்தும் (எனவே - அடைமொழியினால் சொல்லப்படுபொருளை வேறொருபொருளைக் கொண்டுவலியுறுத்தியும்) அவர் அனுக்கிரஹசாமர்த்திய முடையவரென்பது தோன்றச் சகலபுராணங்களடக்கிய சம்ஹிதைகளைக் கற்றுணர்ந்தவரெனவுங் கூறினார்.

இவற்றுள் புராணங்களுள் அடங்கிய சம்ஹிதைகளை முன்னும், அதன்பின் பதினெண்புராணங்களையும், அதன்பின் உபபுராணங்களையும் உணர்ந்தவரென்றது என்னையோவெனின் - உபபுராணங்கள் புராணங்களை வலுயுறுத்துவன அப்புராணங்கள் சம்ஹிதைகளைத் தலைமையாகக் கொண்டு தழுவியிருப்பன. எனெனின் " ஸ்ருதிஸம்மிதாமிதி சகலஸ்ருத்யர்த்த சங்கிரஹாத்மிகாம்" என்பது பிரமாணமாகலான் அத்தலைமைபற்றி அங்ஙனங் கூறியதென்க. ஆயின் சம்ஹிதைகளையும் புராணோப புராணங்களையும் உணர்ந்தவரென்று கூறினாரேயன்றி வேதங்களை யோதியுணர்ந்தவரென்று கூறாதது என்னையெனின், புராணாதிகளையுணராது வேதமாத்திரம் உணர்ந்தவன் வேதத்தைத் துன்பஞ்செய்கிறவனென்றும், புராணங்கள் உணர்ந்தவன்வேதப்பொருளை யுணர்ந்தவனென்றுங் கூறியிருத்தலான் புராணங்களைக் கற்றுணர்ந்தவரென்று கூறவே வேதங்களையும் அறிந்தவரென்றே கொள்ளக் கிடக்கின்றன. புராணங்களின் சிறப்புத்தோன்ற வியாசமுனிவரால் சொல்லப்பட்டதெனவும், பஞ்சலக்ஷண முடையதெனவும், சகல ரகசியங்களுங் கூடினதெனவும்,சூதமுனிவர் சிறப்புத்தோன்ற புராணங்கள் உணர்ந்தவரெனவும் கூறியதென்க.

(௬-௯) (இத்தகைய சிறப்புவாய்ந்த தேவரீர்) எங்களுடைய புண்யசம்பந்தத்தினால், மனோகரமாகியும், விஸ்வசனம் (நம்பத்தகுந்தது) ஆகியும் புண்யரூபமாகியும், கலிதோஷத்தைப் போக்குவதாகியும், மிகவும் உத்தமமாகியுமுள்ள இவ்விடம் வந்தடைந்தீர். ஓசர்வஜ்ஞரே! தாபத்திரயமில்லாதவரே! மஹாபாக்யசீலரே! நீர் நீடூழி காலமிருக்கவேண்டும். இங்கிருக்குங் கூட்டத்தவராகிய முனிவர்களெல்லாரும் பெரும் புண்ணியத்தைத் தருவதாகிய புராணசம்ஹிதைகளைக் கேட்க விருப்பமுள்ளவர்களா யிருக்கின்றனர். ஆகையால் வேதத்துக்குச் சமானமாயுள்ள அப்புராணங்களைச் சொல்லவேண்டுமென்கிற கருத்துடன் கூறவேண்டும். *

(௭-௧௦) ஓ சூதமுனிவரே! சுரோத்திரேந்திரியத்துடன்கூடினவர்களாயும், அறுசுவையறிவதில் சமர்த்தர்களாயும் இருக்கின்ற எந்த மானிடர் † புராணங்களைக்கேட்கிறதில்லையோ, அவர்கள் தெய்வத்

* இம்மூன்று சுலோகங்களால் முறையே புண்ணியவசத்தால் நைமிசாரண்யங் கிடைத்ததுபோல் நீருங்கிடைத்தீரென வருகையைக்கூறி அவரை மகிழ்வித்தனரெனவும், நைமிசவனமும் முனிவராகிய நீருங் கிடைக்கப்பெற்ற புண்ணியத்தின்பயன் புராணங்கேட்பதே யாமெனத் தமது அநுக்ரஹசீலமுடைமையைப் புலப்படுத்தி அவரைக் கருத்துடையவராய்ச் சொல்லவேண்டுமென்று - கேட்டனரெனவும், உம்மால் எங்களுக்குக்கிடைக்கப்படுவதாகிய செவிச்செல்வம் எந்நாளு நீங்காதிருக்க வேண்டுமெனத் தமது அன்புடைமையைக் காட்டி அவரை நீடூழிகாலம் இருக்கவேண்டுமென்றுவாழ்த்தினரெனவுங் கொள்ளற்பாற்று.

* அவர்கள் வேறுசில கேட்கின்றார்களே என்பவரை மறுத்தற்கு' ஸகர்ணயோ ஸ்ருண்வந்தி தேப்யகர்ணா: கதஞ்சந:, என்றார். இதனால் அவர்கள் அர்த்தமில்லாத சொல்லைக் கேட்கின்றவர்கள் என்றபடி. அர்த்தமில்லாத சொல்லென்றது கேட்கப்படு நூற்பொருளமையாதசொல். அச்சொன்மாத்திரங் கேட்பராயின் பொருள்விளங்குவதும், கேட்கப்படு நூற்பொருளமைந்த சொல்லைக்கேட்பராயின் பொருள் விளங்காமையுமான செவியைப் படைத்தவர்கள். ஆகலான் இவர்கள் செவியுடையவர்களாயினுஞ் செவியில்லாதவர்களே. இதனை "கேட்பினுங் கேளாத்தகையவே கேள்வியாற் றோட்கப்படாதசெவி" எனவே கேள்வியால் துளைக்கப்படாத செவிகள் தம்புலமாகிய வோசைமாத்திரங் கேட்குமாயினுஞ் செவிடாந் தன்மையேயாம். ஏனெனின் ஓசைமாத்திரத்தான் இம்மைமறுமைப்பயனாகிய உறுதியடையாமையின் கேட்பினுங் கேளாத்தகையவேஎன்றார். கேள்வி என்பது உட்டுளையையுடைய காதினை மனத்தின்கண் நூற்பொருள் நுழைதற்கு வழியாக்குங் கருவி என்று கூறியிருத்தலாற்காண்க.

தினால் வஞ்சனை செய்யப்பட்டவர்களன்றோ (எனவே, கேட்கும் புண்ணியமாகிய ஊழ் இல்லை யென்றபடி) காதில்லாம லிருக்கிற சர்ப்பங்களே ஆகாயத்தின் குணமாகிய சப்தபேதங்களால் மிகவும் பிரமிக்கின்றன என்றால், மானிடயாக்கையைப் பெற்றவர்கள் சத்வாக்கியங்களைக் கேளாராயின் கேட்குங்காதுகளைப் படைத்தவராயினும், அவர்கள் எவ்வாற்றானுங் காதுகளைப்படையாதவர்களே. (சிறியோர்களுக்கு) அறுசுவைகளால் எப்படி ஜிஹ்வேந்திரியானந்தம் உண்டாகிறதோ அப்படியே பெரியோர்களுக்குச் சத்வாக்யங்களால் சுரோத்திரேந்திரியானந்தம் உண்டாகிறதென்று சொல்லப்படுகிறது.

ஆகையால், சவும்ய (சாந்தரான) ஓ சூதபகவானே! இம்முனிவர்களெல்லோரும் இக்கலியினது கொடுமையை எண்ணிப் பயந்தவர்களாய்ப் புராணங்களைக் கேட்கவேண்டுமென்கிற சிரத்தையோடு இந்நைமிசாரண்ணியத்தில் வசிக்கின்றார்கள். *

---

* இந்நான்கு சுலோகங்களுள் முதலாவது அநுக்கிரஹ சாமர்த்தியமுடைய உம்மை யாங்கள் அடையப்பெற்றும் புராணார்த்தங்களைக் கேளாதொழிவோமாயின் தொன்றுதொட்டுவரும் புண்ணியமில்லாதவரென்றும் அதனால் கேள்விகேட்கும் புண்ணியத்தைத் தெய்வங்கூட்டாதொழிந்தது என்றும் அறிஞரால் இழித்துரைக்கப்படும் பழிப்புரை கூறப்பெறுவோம். ஆகலின் அதுபெறாவண்ணஞ்செய்யவேண்டுமென்றுணர்த்த "வஞ்சிதா விதிநாஹதெ" எனவும், இரண்டாவது, நீர் கற்றுணர்ந்த கல்விகளெல்லாம் உணரும் அதிகார சீலமுடையவரா யிருக்கின்றோம். எம்பால் உம்முடைய சாஸ்திரத்தை மொழியீராயின் உமக்கு உலகின்கண் பிரகாசமின்றாம். ஆகலின் அவ் வப்பிரகாசம் உமக்கு உண்டாகாவண்ணஞ் சொல்லவேண்டுமென்றுணர்த்த "ஸுதியாம் வசோபி : ஶ்ரோத்திரேந்திரிய ஹ்லாத: ஸ்மிருத;" எனவும், மூன்றாவது, தொன்று தொட்டுவரும் புண்ணியமில்லாதவர்கள் என்கிற பழிப்புரைவருவதேயன்றி அர்த்தமில்லாத சொல்லைமாத்திரங் கேட்குஞ் செவியைப்படைத்தவர்கள்போல் இவர்களும் அவிவேகிகளென்று எங்களையாவரும் அநாதரணயஞ்செய்வார்களென்றுணர்த்த "ஸகர்ணயே நஸ்ருண்வந்தி தேப்யகர்ண: கதஞ்சன" எனவும், நான்காவது, யாவராலும் புகழுரையும் ஆதரணீயமும் உண்டாகவேண்டுமென்கிற எண்ணமேயன்றிக் கலிபீடா நிவாரணமும் உண்டாகவேண்டுமென்கிற ஆசக்தியையும் உடையவர்களா யிருக்கின்றோம் என்பதுணர்த்த "அதஸ் ஸர்வேத் விஜாஸ் ஸௌம்ய ச்ரோது காமாஸ் ஸமாஹிதா" எனவுங் கூறினர்.

(கக-கசு) இவ்வுலகின்கண் காலமாவது ஒருபாயத்தினற் கழிக்கவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கின்றது. (அதுபோலவே) மூர்க்கர்களுக்கு * வியசனத்தினுலும் பண்டிதர்களுக்குச் சாத்திர சிந்தனையினுலுங் கழிக்கப்படுகிறது. சாஸ்திரங்கள் விசித்திரமாயும், ஜல்பவாதங்களுடன் கூடினவைகளாயும், அநேகவிதமான அர்த்தவாதத்துடன் கூடினவைகளாயும், ஏதுக்களுடன் கூடினவைகளாயும், மிகவும் பெரிதானவைகளாயு முள்ளன. (அவைகளில்) வேதாந்தம் சாத்வீகமெனவும், மீமாம்ஸம் இராஜசமெனவும், தர்க்கம் தாமசமெனவும் ஏதுவாதங்களால் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. வேதாந்தாதிகளுக்குக் கூறியபடியே புராணங்களும் முக்குணங்களுடையன வென்றும் சர்க்கம் பிரதிசர்க்கமாகிய ஐந்திலக்கணங்களுடையன வென்றும் உம்மால் கதாரூபமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன.

(கரு-கசு) அவற்றுள், பாகவதம் மிகவும் புண்யத்தைத் தருவதாகியும், வேதத்துக்குச் சமானமாகியும், ஐந்தாம் வேதமென்னும்

---

* விசனமாவது, காமந்தக: "மிருகயாக்ஷோதி வாஸ்வாப: பரிவாதஸ் திரியோமத: தவுர்யத்ரிகம் வ்ருதாடாட்யா காமஜோதசகோகுண:" எனவருதலாற் காண்க. மிருகயா - வேட்டையாடுதல், அக்ஷ:- சொக்கட்டாடுதல், திவாஸ்வாப:-பகற்பொழுது தூங்கல், பரிவாத: -அபவாதங்கூறுதல்' ஸ்திரிய;-எப்பொழுதும் மோஹத்தினுல் பெண்களோடு கூடியிருத்தல், மத;-செருக்கடைந்திருத்தல், தவுர்யத்ரிகம் - ஆடலைப்பார்த்தல், பாடலைக் கேட்டல் வாத்தியங்களை வாசித்தல், வ்ருதாடாட்ய - எப்பொழுதும் வீணைச் சஞ்சரித்தல் இப்பத்தும் மூர்க்கரிலக்கணம். ஆடலென்பது பதத்தினர்த்தத்தைக் காட்டுவதாகிய அபிநயம். இதனுல் மூர்க்கர்களுக்கு இங்ஙனம் கூறிய வகையான் காலம்போவது போல் எங்கள் காலம்போகாது சாஸ்திர சிந்தனையிலேயே போகவேண்டுமென்று குறித்ததென்க.

* ஜல்பம் - பரபக்ஷத்தை நிராகரித்து சுபக்ஷஸ்தாபனஞ் செய்தல், வாதம்—பிராமாண்யபலத்தின் உண்மையை யறியவேண்டுமென்கிற விருப்பங்கொண்டு பரபக்ஷத்தாரோடு சம்பாஷித்தல் அர்த்தவாதம் " நியாயசித்தாந்தமஞ்சர்யாம் ஆகாக்ஷவாத : விரோதேகுணவாதஸ்யா. தநுவாதோவதாரிதே, பூதார்த்தவாத ஸ்துத்தாநா தர்த்தவாதஸ்திரிதாமத:" என்றபடி குணவாதம், அநுவாதம் பூதார்த்தவாதம் எனமூன்றுகிளையாகப் பிரிந்திருக்கின்றது. ‡ இதனுல் சாஸ்திரபுராணதிகள்முக்குண சம்பந்தமுடையனவாகியும் பஞ்சலக்ஷணங்களோடு கூடினவைகளாகியும் இருக்கின்றனவென்று குறிக்கப்பட்டன.

பெயருடையதாகியும், எல்லாலக்ஷணங்களோடு கூடினதாகியும்உள்ளது என்று உம்மால்முன்னங் கூறப்பட்டிருக்கின்றது. இந்தப் பரமாத்புதமாகிய பாகவதம் எண்ணியமாத்திரத்தில் முமூக்ஷுக்களுக்கு மோக்ஷப்பிரதமாகியும் அப்படியேதர்ம காமசிந்தனையுடையவர்களுக்குத்தர்மகாமப் பிரதமாகியும் இருக்கிறதென்றுஞ்சொல்லியிருக்கின்றீர்.

(கஎ-உ0) ஆகையால் யாங்களனைவரும் நூல்களிற்சிறந்து அறமுதலியன தரும் சுபகரமாகிய இந்த உத்தமமான பாகவதத்தைக் கேட்க ஆசையுடையவராயிருக்கின்றோம். ஓதர்மபரிசீலனரே! நீரொருவர்தாம் வியாசரால் உபதேசிக்கப்பட்ட புராணசம்ஹிதைகளை நன்றுபறிந்தவர், (அன்றியும்) * குருபக்தியிற்சிறந்தவர், (அதனால்) சத்வகுணங்களுக்கெல்லாம வாசஸ்தானமாக விருக்கின்றீர், ஓ சர்வஞ்ஞரே! உம்முடைய திருவாக்கினின்றும் வெளிப்பட்ட வேறுசில புராணங்களை யாங்கள் கேட்டவர்களாயிருந்தும்தேவர்கள்எங்ஙனம் அமிர்தபானம் செய்வதில் திருப்தியடைந்திலரோ அங்ஙனமே இப்பொழுது யாங்கள் சிறிதுந்திருப்தி யடைந்திலம். (எனவே தேவர்களுக்கு அமிர்தம் உண்பதில் நீங்காத விருப்பமுண்டாவது போல எங்களுக்குப் புராணங்களைக் கேட்பதில் நீங்காத விருப்பம் உண்டாகிறது.) ஓ சூதரே! அமிர்தபானஞ் செய்யுந்தேவர்களுக்கு அந்த அமிர்தபானத்தால் முக்தியென்பது ஒருஞான்றும் அந்தோ உண்டாவதேயில்லை. பாகவதமென்னும் அமிர்தத்தைப் பானம் செய்யு மக்கட்பிறப்பினர் அக்கணமே சங்கடத்தினின்றும் விடுபடுகின்றனர். (எனவே அமிர்தபானம் நரைதிரை மூப்பைப் போக்குவதேயன்றி முக்தியைத்தருவதன்று அதனால்) திக் (துச்சம்) பாகவதமென்னும் அமிர்தத்தை (ஸ்ராவம்) கேட்பது நரைதிரை மூப்பைத் தருவதாகிய தேகபந்தத்தை யொழித்து முக்தியை அக்கணமே தரும் அதிசயத்தை யுடைத்து.

(உக-உச) ஓசூதரே! யாங்கள் அமிர்தபானம் உண்டாம்வண்ணம் எண்ணிறந்த யாகங்கள் செய்தனம், அங்ஙனஞ் செய்தும் யாங்கள்

* குருபக்தி யுடையவர்க்கே குணசீலத்வமும் அதனால் தர்மசிந்தனையும் இவ்விரண்டு முடைமையான் சற்குருலாபமும் அந்தலாபத்தால் சாஸ்திரஞ்ஞானமும் உண்டாம் எனுமுறைமை விளங்கின.

ஒரு சிறிதும் சாந்தியடைந்தோமில்லை. (எனவே) யாகங்களால் எங்கள்மனம் உபசாந்தியடைந்த (சனனமரண துக்க நீங்கிய) தில்லை. யாகத்திற்குப் பலன் சொர்க்கத்தை யடைவதும் மீளவும் அச்சொர்க்கத்தினின்றும் அதப்பதனமாவதும் இயற்கை. இவ்வாறே இச்சமுசார சக்கரத்தில் மாறிமாறிச் சுழன்றிருப்பதே நிரந்தரமாயுள்ள செயல். இதனால் ஒருசிறிதுஞ் சாந்தியடைந்தோமில்லை. ஓ சர்வஜ்ஞரே! திரிகுணாத்மகமான இக்காலசக்கரத்திற் சுழன்றுகொண்டிருக்கின்ற ஆன்மாக்களுக்கு ஞானோதயமின்றி ஒருபொழுதும் முத்தியுண்டாவதேயில்லை. (எனவே) ஞானத்தினால் கன்மநிவர்த்தி யுண்டாமன்றி யாகாதி கிருத்தியங்களால் அஃதுண்டாவதில்லை. ஆகையால் எல்லாரசங்களோடு கூடினதாயும் புண்ணிய சொரூபமாயும் பரிசுத்தமாயும் முத்தியைத்தருவதாயும் ரகசியமாயும் முமுட்சுக்களுக்கு எப்பொழுதும் விருப்பமாயும் உள்ள பாகவதத்தைச் சொல்லியருளுடுமன்றார். (ஸ்லோகம் - உச)

முதல் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸகலாதிஷ்டான ரூபாயைநம:

## இரண்டாம் அத்தியாயம்.

## ஸ்கந்தசங்கியாதிகதனம்

---

(க - ரு) சூதர் கூறுகின்றார்:—ஓ முநிவர்களே! மஹான்களாகிய நீவிர் என்னைப்பார்த்து மஹா புண்யத்தைத்தருவதாயும், வேதங்களில் முறையிடப்பட்டதாயும்உள்ளதேவீபாகவதபுராணத்தைச் சொல்லுமென்று கேட்டதனால், யான் தந்யனாயினேன், மஹா பாக்யசாலியாயினேன், பரிசுத்தனுமாயினேன். ஓ அந்தணர்களே! மிகவும் மேன்மையுடையதாகியும் மனோகரமாகியும்முத்திப்ரதமாகியும் பிரமனாதியரால் சேவிக்கப்பட்டதாயும் தோத்திரஞ் செய்வதில் ஆசையுடையவர்களான முநிவர்களால் எப்பொழுதுந் தியானிக்கத் தக்கதாயுமுள்ள அந்தப்பராசத்தியின் பாதாரவிந்தத்தை வணங்கி அதிக ரசமுள்ளதாயும் உத்தமமாயும் எல்லா ரசங்களுக்கிருப்பிடமாயும் சகலவேதார்த்தசம்மதமாயும் சகல சாஸ்திரசம்மதமாயும் ஆகமங்களுக்குள் உத்தமமாயும் தேவியினுடைய நாமத்தி

னல் பிரசித்தி பெற்றதாயும் உள்ள ஸ்ரீதேவீபாகவத புராணோத்தமத்தை அன்புடன் விரிவாய்ச் சொல்லுகின்றேன். *

(௬) எனக்கு, எந்தப்பராசக்தியைவேதத்தில் வித்தைஎனவும், ஆதியானவளெனவும், சர்வஜ்ஞை எனவும்; சமுசாரபந்தத்தைச் சேதிப்பதில் நிபுணை எனவும், சர்வாத்மாக்களுடைய இருதய கமலத்தில் வீற்றிருப்பவளெனவும், துராத்மாக்களால் அறியப்படாதவளெனவும், முனிவர்களால் தியானஸ்பதத்தை அடைவிக்கச் செய்கின்றாளெனவுங் கூறப்படுகிறதோ அந்தப்பகவதி பிரத்தியக்ஷமாய் எழுந்தருளிவந்து எப்பொழுதும் நிர்மலபுத்தியைத் தருவாளாக! ‡

---

* "மஹாத்மபி என்றதனால் முனிவர் சிறப்பும், "மஹத்புண்யம்வேத விச்ருதம்" என்றதனால் புராணச் சிறப்பும், "தன்யோஹம் - அதிபாக்யோஹம் பாவிதோஹம்" என்பவைகளால் புராணத்தை எடுத்துக் கூறுவதனால் வரும் பிரயோசனமும் கூறியவாறு.

வேதார்த்தத்திற்கும் ஆகமத்திற்கூறும் ரகஸ்யத்திற்கும் விரோதமின்மையை எடுத்துக்கூறுவது இப்புராணமென்பது தோன்ற "ஸர்வஸ்ருத்யர்த்தம்" "ஸர்வசாஸ்திராணும் ஆகமானும் அநுத்தமம்" எனவும் வேதார்த்த சம்மதம் உள்ளது எதுவோ அதுவே தமக்குச் சம்மதமென்பது தோன்ற 'ஸம்ப்ரவக்ஷ்யாமி" எனவுங் கூறினர்.

யோகிகள் விரும்பும் முத்தியும், பிரமனாதியர்பெற விரும்பும், சிருஷ்டியாதி அதிகாரமும், முனிவர்கள் நிலைபெறவிரும்பும் மனனசீலமும் எண்ணியாங்களிப்பது தேவியினது பதகமலங்களே யாகலான்" ஸலலிதம் முக்திப்ரதம், யோகினும்" எனவும், " பிரம்ஹாத்யை ரபிஸேவிதம்" எனவும், "ஸ்துதிபரை: முநீந்த்ரை: தியேயம்" எனவும், தேவியினது பாதம்மனோவாக்கிறந்த விடத்துத் தோன்றுவதாகலான் தத்பதமெனவுங் கூறினர்.

‡ "வித்யை ஆத்யை சர்வஜ்ஞை" என்று சிவசத்தியின் ஜ்ஞானசத்தியையும், "பவபந்தவிச்சித்தி நிபுணை" என்று அச்சத்தியின் கிரியாசத்தியையும், "ஸர்வாஸ்ரயேஸம்ஸ்திதா" என்று அச்சத்தியின் இச்சாசத்தியையும், " துர்ஜ்ஞேயாஸ ச துராத்மபி:" என்று அச்சத்தி திரோதான சத்தியாயிருத்தலையும், "முநிபிர்த்யாநஸ்பதம்" என்று அச்சத்தி அநுக்கிரகசத்தியாயிருத்தலையும் விதந்தமைகாண்க. இதனானே சிவசத்தி. இச்சாசத்தி – ஞானசத்தி - கிரியாசத்தி - திரோதானசத்தி - அநுக்கிரகசத்தி எனப்பஞ்சசத்திகளாய் விவகரிக்கப்பட்டிருத்தல்காண்க.

அன்றியும்; இந்தப்பொருளடங்கிய " யாவித்யேத் யபிதீயதே ஸ்ருதிபதே சக்திஸ்ஸதா த்யாபரா, சர்வஜ்ஞா பவபந்தசித்தி நிபுணா சர்வாஸ்ரயே சம்ஸ்திதா துர்ஜ்ஞேயாசு துராத்மபிஸ்ச முநிபிர்த்யா நாஸ்பதம்பிராபிதா, பிரத்யக்ஷாபவதீஹஸா பகவதீபுத்திப்ரதாஸ்யாத் ஸதா" என்னும் இந்த சுலோகத்

(ரு) யாதொரு பராசக்தி திரிகுணாத்மகமாயிருக்கின்றதனது சத்தியினால் சேதனசேதனங்களாயுள்ள இந்தஜகத்தைச்சிருஷ்டித்துக் காக்கின்றனளோ, அப்படியேகற்பாந்தத்தில் இந்தஜகத்தைச் சங்கரித்துத் தானொன்றாகவே யிருந்துவிளையாடிக்கொண்டிருக்கின்றனளோ அங்ஙனமான உலகமாதாவாகிய பராசத்தியைமனதினால் தியானிக்கின்றேன். †

(௬) (ஏனென்றால்) இவ்வுலகங்களையெல்லாஞ்சிருஷ்டித்தவன் பிரமதேவனென்று வேதங்களைக் கற்றுணர்ந்தவராலும் பவுராணிகர்களாலும் பிரசித்தமாய் வழங்கப்பட்டிருக்கின்றன. அவர்களாலேயே அப்பிரமனும் விஷ்ணுவினுடைய நாபீகமலத்தில் உற்பத்தியானனென்றுங் கூறப்பட்டிருக்கின்றன. இவ்விசாரத்தால் இவர்க

---

தில் "யாவித்யா" என்று தொடுத்து "ஸர்வாஸ்ரயே ஸம்ஸ்திதா" என்று ஒரு முடிவும், "துர்ஜ்ஞேயா" என்று தொடுத்து "தியானஸ்பதம் ப்ராபிதா" என்று ஒரு முடிவுமாகக்கூறினமையான் அப்பராசத்தியை ஞானக்கிரியா சத்தியாகவே தியானித்து என்னுடைய மனவாக்குகளுக்கு வியஞ்சகமாயிருந்து வேதார்த்தங்களை யறியவும் சொல்லவும் செய்யவேண்டுமென்று வணங்கியதாமென்றுங் குறிப்பாற்கொள்ளக்கிடந்தன.

† முக்குண சம்பந்தமா யிருக்கின்றபிரகிருதிமாயாசக்திசிவசக்தியாகிய பராசத்தியன்றி இயங்குவதின் றாகலான் திரிகுணாத்மகமா யிருக்கின்றபிரகிருதிமாயையைத் தனதுசத்தி எனவும், இவ்வுலகமெல்லாந் தத்துவதாத்திகங்களாகிய சடரூபமாகவும், உயிர்வர்க்கங்களாகிய சித்ரூபமாகவுங் காணப்படுதலால் "அகிலம் ஜகதிதம் சதசத்ஸ்வரூபம்" எனவும், சிருட்டியாதி முத்தொழிலைச் செய்தல் பராசத்தியின் பகுதியனவாகவே கூறப்பட்டவாமாதிசத்திகளின் காரியங்களேயாகலான் "சிருட்வா பரிபாதிவிஸ்வம்" எனவும், முத்தொழிற்படுதல் பலமுறையாகலான் "கல்பாந்த சமயே" 'எனவும், இங்ஙனம் பலமுறையியற்றுதல் "ஐங்கலப்பாரஞ் சுமத்தல்சாத்தனுக்கு ஓர் விளையாட்டென்பதுபோல்" மிகவெளிமையாயியற்றுவதேயன்றி அத்தொழிலால் ஒரு சிறிதும் துன்பமுறாத லிலவாகலான் "ரமதே எனவும், சிருட்டியாதி காரியங்களுக்கேற்ற பப்பலசத்திகளாய்ப் பலபெயர்பெறினும்அவைகட்கெல்லாங் காரணசக்தி சிவசக்தி யொன்றேயாகலான் "ஏகா" எனவும், மக்கட்பிணியை யகற்றுந் தாய்போல் உயிர்களுக்கு மலநோயைச்சிருட்டியாதிகளாற்போக்கலான் 'விஸ்வஜனனீம், எனவும், பராசத்தி ஞானப்பிரதமாகலான் அச்சத்தியை ஞானத்தினால் வணங்கலே முறைமையாகலான் "மனஸாஸ்மராமி" எனவுங் கூறினர்.

ளெல்லாஞ் சிருட்டிக்குஞ் சுதந்தர மில்லாதவரென்றுவெளியாகின்றது. *

(எ) விஷ்ணுமூர்த்தியென்றுலோகற்பாந்தகாலத்தில்ஆதிசேஷனாகிய சயனத்தில்உறங்குகின்றாரெனவும், அவருடையநாபிக்கமலத்தில் பிரமன் உற்பத்தியாகின்றானெனவும், அந்த விஷ்ணுவுக்குஆயிரம்பணாமுடிகளையுடைய ஆதிசேஷன் ஆதாரமாயிருக்கின்றானெனவுங் கூறப்பட்டுள்ளனவன்றோ ஆகலான் அந்தமுராரி எப்படிப்பகவானென்று அழைக்கப்படுவர்.

(அ) ‡ பெருவெள்ளமாகிய கடனீரானது ஒருதன்மையாகிய ரசரூபமே. அந்தரசரூபமாகிய சலமானது (கடலென்கிற) பாத்திரமில்லாமல் ஒருபொழுதுமிருப்பதன்று. (அதுபோல்) தேவிசர்வான்மாக்களுடைய விஷயத்தில் சத்திரூபமாக விருக்கின்றாள். ஆகலான் அவ்வுலகமாதாவையே சரணமடைகின்றேன்.

---

* பராசத்தியே உலகத்தைப்படைத்தாளென்பது உண்மையாயின்பெரியோரெல்லாம் பிரசித்தமாய் உலகமெல்லாம் படைத்தவர் பிரமதேவர் என்றும், அவரைப்படைத்தவர் விஷ்ணுமூர்த்தி யென்றுங் கூறுவது என்னை என்னும் பூர்வபக்ஷிகளை மறுத்தற்கு "ஸ்வதந்த்ர நஹி ஸ்ருஜதே" என்றார். எனவேஇ வர்களெல்லாம் அவாந்தரகாரண ராவர் என்று சித்தாந்தங்கூறியதாகும். ஏனெனில் கர்த்தா எனப்படுவோர் பிறராற் படைக்கப்படாதவராயிருத்தல் வேண்டும். படைக்கப்படுவாராயின் அவர் கர்த்தாவாகார். அன்றியும் அவர் கரணத்தாற் படைப்பவரேயன்றி சங்கற்பமாத்திரத்தாற் படைக்கும் ஆற்றலில்லாதவர். அதனால் அவரத்தொழிற்குச் சுதந்தராராகார்என்றும் வலியுறுத்தினமை காண்க.

பராசத்தியை "மனசாஸ்மராமி" என்றுஞானத்தால்வணங்கிப்பின்னர் பிரமவிஷ்ணுக்கள் காரணராகார் அவர் தியானித்தற் குரியராகார்என்றெடுத்துக் கூறியது என்னையென்றாராயின், சிருட்டியாதி கிருத்தியங்களைச் செய்தல் பராசத்தியே இவர்களன்றெனவும், சங்கற்பமாத்திரையாற் படைத்தல் அச்சத்தியே, இவர்கள் காணத்தாற் படைப்பரெனவும், ஆதாரமில்லாதிருத்தல் அச்சத்தியே, இவர்கள் ஆதாரத்தையுடையவரெனவும், இக்காணத்தால் பிரமனாதியர் தியான்ப்பொருளாகாராகலான் இங்ஙனம் வணங்காதொழிந்தோமெனவும் விளக்கி, சங்கற்ப மாத்திரத்தால் யாவையும்படைப்பவராய்த் தானொன்றேயாயிருப்பவளே தியானப்பொருளாவாரென அறிவுறுத்தியவாறு காண்க.

‡ சலத்தினிடத்தில் சுவை எப்படிப்பிரிவில்லாம விருக்கின்றதோ அதுபோலவே பிரஹ்மவிஷ்ணுக்களேயன்றி எல்லாவுயிர்களுடைய அறிவிலுஞ்

(கூ) கமலாசனனாகிய பிரமன் முன்னொருகாலத்தில் விஷ்ணுமூர்த்தியையோகத்திலிருப்பவராகவறிந்து எந்தத்தேவியைத்தோத்திரஞ் செய்யத்தொடங்கினனோ அந்தத்தேவியை நான் வணங்குகிறேன்.

(க0) சகுணசொரூபியாயும் நிர்க்குணசொரூபியாயும் மாயாபந்தத்தையும் முத்தியையுந்தருபவளாயுள்ள அப்பராசத்தியைத்தியானித்து தேவிபாகவதமென்னும் புராணமுறைகள்யாவும்இவ்விடத்தில் சொல்லுகின்றேன் முநிவர்களே! கேளுங்கள்.

---

தொழிலினும் பிரிவில்லாமல் அநந்யமாய்ச் சிவசத்தியிருப்பதென்றுகுறித்தமைகாண்க. இதனால் முன்னர் பிரமனாதியர் அகாரணரென்றதை 'ஏகார்ணவஸ்யசலிலம்ரசரூபமேவ'' என்னும் உவமானத்தான்வலியுறுத்தியதென்க. எனவே பிரமனாதி எல்லாவுயிர்களுடைய அறிவு தொழில்கள் பலபுவனங்களில் பலவாக விரிந்திருப்பனவாகலான் அவையெல்லாம் (ஏகார்ணவஸ்யசலிலம்) பெருவெள்ளமாகிய கடனீர்போல்எனவும், அவ்வெள்ளத்தில் ஒரு பாகத்திற்றான் அந்தஜலத்திற் குரியரசமிருப்ப தென்பதின்றி முற்றுங்கலந்திருப்பதுபோல் சிலரிடத்திற்றான் சிவசத்தி கலந்திருப்பதென்பதின்றி யாவரிடத்துங் கலந்திருந்து அவரவரறிவு தொழில்களைச் செய்விக்கின்றபடியால்'ரசரூபம்போல்'' எனவும், எல்லாருடையதொழிலும் அச்சிவசத்தியின் செயலாக வெளிப்படவே அச்செயல் நிகழ்தற்கிடமாய் நின்ற பிரமனாதிஉயிர்களெல்லாம் கடல்போல் பாத்திரமென்னும் அளவை மாத்திரையே யானாரகலான் ''பாத்திரம்போல்'' எனவுங் கூறினர். இவ்விசாரத்தால் சிருட்டியாதிதொழிற்குரியவராகிய பிரமனாதியர் உருவங்களெல்லாம்கடல்போல்பாத்திரங்களெனவும், அவர் தொழில்களாகிய சிருட்டியாதிகளெல்லாம் அக்கடலிற்றங்கிய சலம்போலெனவும், அச்சலத்திற்றங்கிய ரசம்போல் சிவசத்தியாகிய ரசங்கலந்திருப்பதெனவுங்கொள்ளக் கிடந்தன. கொள்ளவேயாவரும் பாத்திரரூபம், அறிவுதொழில்கள்சலரூபம், அறிதற்சத்தி செய்தற்சத்திரசரூபம். பாத்திரத்தைவிட்டு சலமில்லைசலத்தைவிட்டு ரசமில்லை. அதுபோலும் பிரமனாதியரை விட்டு சிருட்டியாதி தொழில்களில்லை அச்சிருட்டியாதிகளைவிட்டுச் சிவசத்தியில்லை என்றபடி. முன்னர்''உறங்குகின்றவரைத் தியானிப்பது விதியன்றென்றதையும் விஷ்ணுவாதியர்களெல்லாந் தியானித்தற்குரியராகாரென்றதையும் இச்சுலோகத்தால் வலியுறுத்தியதெனக்கொள்க. அன்றியும் இங்கு உறங்குகின்றாரென்னாது யோகத்திலிருப்பவராக வறிந்து தேவியைத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினாரென்றதனால் திருமாலுந் தம்முடைய உள்ளத்தில் பராசத்தியையே தியானிக்கின்றாரென் றுணர்ந்து தாமும் அத்தேவியையே வணங்கவேண்டுமென்று தெளிந்துப் பின்றொடங்கினா ரென்பதே தேற்றமெனக்கொள்க.

(கக-கள) ஸ்ரீமத்பாகவதமென்றுசொல்லப்பட்ட இப்புராணம் உத்தமமாயும் புண்ணியரூபமாயுமுள்ளது. அது வியாசமுனிவரால் நன்றாகச் சோதிக்கப்பட்டுபதிணெண்ணாயிரஞ்சுலோகங்களாகவும் பன்னிரண்டு ஸ்கந்தங்களாகவும் முந்நூற்றுப்பதினெட்டுஅத்தியாயங்களாகவுஞ் செய்யப்பட்டது. முதல் ஸ்கந்தம்—இருபதுஅத்யாயம்- இரண்டாவதுஸ்கந்தம் - பன்னிரண்டுஅத்யாயம், மூன்றாவது ஸ்கந்தம் - முப்பது அத்யாயம், நான்காது ஸ்கந்தம் - இருபத்தைந்துஅத்யாயம், ஐந்தாவது ஸ்கந்தம் -முப்பத்தைந்தத்தியாயம், ஆறாவது ஸ்கந்தம் - முப்பத்தொன் றத்யாயம். ஏழாவது ஸ்கந்தம் - நாற்பது அத்தியாயம், எட்டாவதுஸ்கந்கம் - இருபத்துநான்கத்யாயம், ஒன்பதாவதுஸ்கந்கம் - ஐம்பது அத்யாயம், பத்தாவது ஸ்கந்தம் பதின்மூன்றத்யாயம், பதினொன்றாவது ஸ்கந்கம் - இருபத்துநான்கத்யாயம், பன்னிரண்டாவது ஸ்கந்தம் - பதினான்கத்யாயமெனவும், சுலோகசங்கியைகள்பதினெண்ணாயிரமெனவும் இவ்வகையாக இப்புராணம் மஹாத்மாவான வியாசமுனிவரால்கூறப்பட்டிருக்கின்றது.

## புராணலக்ஷணம்.

(கஅ-உகூ) புராணம்:—சர்க்கம், பிரதிசர்க்கம், வம்சம், மந்வந்தரம், வம்சானுசரிதம் என்றுசொல்லப்பட்டபஞ்சலட்சணங்களையுடையது.

சர்க்கமாவது:—நிர்க்குணசொரூபியாயும்எப்பொழுதும்நாசரகிதையாயும் சர்வவியாபகியாயும் யோகசாத்யையாயும்சர்வலோகங்களுக்கும் ஆதாரமாயுமிருக்கின்ற யாதொருசிவசக்திதுரியப்பொருளாயிருக்கின்றதோ அப்பராசத்திஒருகூற்றனேசாத்வீகம்இராஜசம் தாமசம் எனமூன்று சத்திகளாகிமுறையேசாத்வீகசத்திமஹாலக்ஷிமிஎன்றும், இராஜசசக்திசரஸ்வதிஎன்றும், தாமசசக்திமஹாகாளிஎன்றும் பெயர்பெறுமென்றும் அந்தமூன்று சக்திகளுடையதிருமேனிகள் சிருட்டியாதி நிமித்தம்கொள்ளப்படுமென்றும் அவர்கள் உற்பத்தியாதிகளைக் கூறுவதாகும்.

பிரதி சர்க்கமாவது:—உத்பத்தி திதி நாசமென்னு முத்தொழிலியற்றப் பிரம்ஹ விஷ்ணு ருத்திரர்களுடையஉற்பத்தியைக்கூறுவதாகும்.

வம்சமாவது:-- சோமசூரியாக்கினிகளால்உற்பத்தியான இரண்யகசிபு முதலிய அரசர்களுடைய வம்சத்தைக் கூறுவதாகும்.

மன்வந்தரமாவது:—சுவாயம்புமுதலிய பதினான்கு மநுக்களுடைய மந்வந்திரங்களின் மாறுபாட்டையும் அவர்களுடைய காலவளவைகளையும் எடுத்துக்கூறுவதாகும்.

வம்சாநுசரிதமாவது:—மேற்கூறியமநுக்களுடைய வம்சசரித்திரங்களை எடுத்துச் சொல்லுவதாகும். இவ்வைந்துமே புராணலக்ஷணங்களாமென்க.

இதுவேயுமன்றி வியாசமுனிவர் வேதசம்மதமாயும் ஐந்தாம் வேதமாயுமுள்ள மகாபாரதமென்கிறஇதிகாசமுஞ்செய்தனர்; அது ஒருலக்ஷத்து இருபத்தையாயிரங் கிரந்தங்களாம்.

(உஎ-ஙச) சௌனகர் சூதரைப்பார்த்துக் கூறுகின்றார்:- ஓ சர்வஞ்ஜரே! நீர் முற்றுணர்ந்தவராகையால் புராணங்களென்றவை எவை? எவ்வளவு சங்கியையோடு கூடினவை? அவற்றின் விரிவையுங்கேட்க வேண்டுமென்னும் அவாவுடையவர்களாக விருக்கின்றோம். ஆகையினால்அவற்றைவிரிவாயெங்களுக்குஎடுத்துச்சொல்லவேண்டும். நைமிசாரண்ய முனிவர்களாகிய யாங்களெல்லாம்கலிக்கு மிகவும் பயமுற்றனம். எங்களுக்குப் பிரமதேவர் மனோகரமாகிய சக்கிரத்தைகொடுத்து ஆக்ஞையொன்றுசெய்தனர். அஃதாவதுநீங்கள்யாவரும் புண்ணியக்ஷேத்திரத்தையுத்தேசித்து இச்சக்கரத்தின் பின்னேசெல்லுங்கள். இதுஎவ்விடத்தில்சிதறிவிழுகின்றதோ அந்தவிடந்தான் புண்ணியபூமி. அந்தவிடத்தில்ஒருபொழுதும்கலிதோஷம் அணுகமாட்டாது. ஆகையால் கிருதயுகம் வருமளவும் நீங்கள் யாவரும் அவ்விடத்திற்றானே தவஞ்செய்திருங்கள் என்றுகட்டளையிட்டனர். யாங்களெல்லாம் சகலதேசங்களையும் பார்க்கவேண்டுமென்கிற இச்சையினால்அவரால்சொல்லப்பட்டகட்டளையையங்கீகரித்து வேகமாய்ச் சுழன்று போகிற அச்சக்கரத்தின் பின்னால் சென்றுகொண்டிருந்தோம். சுழன்றுகொண்டேவந்த அச்சக்கரம் இவ்விடத்திற்சிதறிவிழுந்தது. நாங்கள் அதைப்பார்த்தோம். அதனால்இந்தக்ஷேத்திரம் நைமிசமெனப்பெயர்பெற்றது. இதுமகாபரிசுத்தமானது. இவ்விடத்தில் கலியின் பிரவேசமேயில்லை. அதனால்என்னுடும்முனிவர்களாலும் மகாத்மாக்களாகியசித்தர்களாலும் வசிக்குமிடமாகக் கொள்ளப்பட்டது. அன்றுமுதல்இம்முனிவர்களெல்லாம்

பசுவின் ,பிப் * .பிஷ்டபசுக்களால்யாகங்கள் செய்துவருகின்றார்கள். இப்படியே கிருதயுகம் வருமளவும் காலங்கழிக்கவேண்டியதாகவிருக்கின்றது.

(நடு-சு0) சூதமுனிவரே! நீவிர் எமது பாக்கியவசத்தால்இவ்வனத்தைவந்தடைந்தீர். ஆதலால் எவ்விதத்திலாயினும்இப்பொழுது வேதசம்மதமாயும் பரிசுத்தமாயுமுள்ள இப்புராணத்தைச்சொல்லியருளல்வேண்டும். மேதாவியரானநீர்எப்படிபோதகாசிரியத்தன்மையுடையவராக விருக்கின்றீரோ அப்படியே யாங்களனைவரும்கவலைகளனைத்தையும் விட்டொழிந்து மனமொருமைப்பட்டுகேட்கும்விருப்பமுடையவராக விருக்கின்றோம், ஆதியாத்மிகமுதலிய தாபத்திரயங்களினின்றும்விடுபட்டநீர் தீர்க்காயுளுடையவராயிருத்தல்வேண்டும், எந்தப்புராணத்தில்தர்மார்த்தகாமங்களுடையசிறப்பு,விதிபூர்வகமாகக் கூறப்படுகிறதோ அப்படிப்பட்ட புண்ணியமங்கள சீலம் வாய்ந்த புராணம் இப்புராணமேயாம். ஆகையால் அதை எங்களுக்குச்சொல்லியருளும்.(ஏனெனின்)பாகவதமென்னும்இக்கதைபரவித்யாசொருபமென்றும் இதனாலேயேமோக்ஷ முண்டாகுமென்றும் வியாசமுனிவரிடத்தில் கேட்டதாகக் கூறிகின்றீரல்லவா? சூதரே! ‡ த்வைபாயன முனிவராலே பரிசுத்தமானஎந்தப்புராணங்கள்கூறப்பட்டனவோ அந்தமனோகரமாகிய புராணங்களை யாங்கள்கேட்டுத்திருப்தியடைந்திலம் மேலுங்கேட்கவிருப்பமுடையவராயிருக்கின்றோம். எந்தப்பாகவதம் சகலகுணசமூகங்களுக்குமுக்கியமானபாத்திரமாயும் பரிசுத்தமாயும் எல்லாவுலகங்களுக்கும் மாதாவான அம்பிகையினுடையநாட்யம்போல்விசித்ரமாயும்மலசமூகமனைத்தையும் நசிக்கச்செய்வதாயும் இஷ்டகாமியங்களை நிறைவேற்றுவதற்குமூலமாயும் பகவதியினுடையநாமத்தோடுகூடினதாயுமுள்ளதோ அந்தப் பாகவதத்தைப் பிரகடனஞ்செய்யவேண்டும் என்று வினவினர்.

இரண்டாவது அத்யாயம்.

முற்றிற்று.

---

[ பிஷ்டம் - மா † த்வைபாயன முனிவர் - வியாசர்.

உ

ஸத்வரூபாயை நம:

மூன்றும் அத்யாயம்.

புராண சங்கியை வரலாறு.

---

(க) சூதமுனிவர் சவுனகாதிரை நோக்கிக்கூறுகின்றார்:—முனிவர்களே! சத்யவதீசுதரான வியாசரிடத்தில் எப்படிப் புராணங்களைக் கேள்வியுற்றேனோ அப்படியே பதினெண் புராணங்களுடைய பெயர்களை அக்ஷரசங்கியையாக உண்மையாய்க் கூறுகின்றேன் கேளுங்கள்.

(உ) மகாரத்தை முதற்கண்ணுடைய புராணங்களிரண்டு, பகாரத்தை முதற்கண்ணுடைய புராணங்களிரண்டு, ப்ரகாரத்தை முதற்கண்ணுடைய புராணங்கள் மூன்று, வகாரத்தை முதற்கண்ணுடைய புராணங்கள் நான்கு, அ-நா-ப-லிம்-க-கூ-ஸ்கா என்கிற அக்ஷரங்களைத் தனித்தனி முதற்கண்ணுடைய புராணங்களேழு. (ஆகப்பதினெட்டு)

மகாரத்திலிரண்டு என்றது மத்ஸியம், மார்க்கண்டேயம். பகாரத்திலிரண்டு என்றது பவிஷ்யம், பாகவதம். ப்ரகாரத்தில் மூன்று என்றது பிரம்ஹம், பிரம்ஹாண்டம், பிரஹ்மகைவர்த்தம். வகாரத்தில் நான்கு என்றது வாமனம், வாயவ்யம், விஷ்ணு, வராகம். அ, என்றது அக்னிபுராணம். நா, என்றது நாரதபுராணம் ப, என்றது பத்ம புராணம். லிம், என்றது லிங்கபுராணம். க, என்றது கருடபுராணம், கூ, என்றது கூர்மபுராணம். ஸ்கா, என்றது ஸ்கந்தபுராணம்.

இனி, முன்னர், வர்ணக்கிரம முறையாகக்கூறிய பதினெண் புராணங்களுடைய கிரந்தசங்கியைக் கூறுகிறேன்.

(ங-கஉ) முதலாவதான மத்ஸிய புராணம் - பதினாலாயிரங் கிரந்தம். மஹாத்புதகரமான மார்க்கண்டேயம்—ஒன்பதினாயிரங் கிரந்தம்! பவிஷ்யபுராணம் - ஐந்நூற்றை அந்தத்திலுடைய பதினாலாயிரங் (கச௫00) கிரந்தம். புண்ணியமான பாகவதம்-பதினெண்ணாயிரங் கிரந்தம். பிரம்ஹபுராணம் - பதினாயிரங் கிரந்தம்.

பிரம்மாண்ட புராணம் நூற்றையும் இரண்டாயிரத்தையும் அதிகமாகவுடைய பதினயிரம் (௧௨௧௦௦) கிரந்தம். பிரம்ஹ கைவர்த்தம். பதினெண்ணாயிரங் கிரந்தம். வாமன புராணம்-அறுநூற்றை முன்னேயுடைய பதினயிரங் (௧௦௬௦௦) கிரந்தம். வாயவ்ய புராணம்-ஆயிரமென்னும் எண்ணை முன்னேயுடைய இருபத்து நாலு (௨௪௦௦௦) கிரந்தம். பரமாத்புதமான விஷ்ணுபுராணம் - இருபத்து மூவாயிரங்கிரந்தம். வராகம் — இருபத்து நாலாயிரங் கிரந்தம். அக்கினிபுராணம் - பதினயிரங்கிரந்தம். சிறந்ததான நாரதபுராணம் - இருபத்தையாயிரங்கிரந்தம். பெரிதான பத்மபுராணம்-ஐம்பத்தையாயிரங் கிரந்தம். இலிங்கபுராணம் - பதினோராயிரங் கிரந்தம். விஷ்ணுப்ரதி பாதகமான காருடம்-ஒன்றொழிந்த இருபதினயிரங்கிரந்தம். கூர்மாவதாரத்திற் கூறப்பட்ட கூர்மபுராணம்-பதினேழாயிரங் கிரந்தம். ஆச்சர்யகரமான ஸ்கந்தபுராணம்-எண்பதோராயிரங் கிரந்தம். பாபரஹிதர்களான முனிவர்களே! யாம் இப்பொழுது புராணங்களுடைய பெயர்களும் அவற்றின் சங்கியைகளும் விஸ்தாரமாகக் கூறினோம்.

(௧௩-௧௬) ஓ முனி சிரேஷ்டர்களே! பதினெண் புராணங்களைக் கூறியபடியே உபபுராணங்களையும் இனிக்கூறுகின்றோம் கேட்பீர்களாக. சநற்குமாரம், நாரசிம்ஹம், நாரதீயம், சிவம், சிறந்த தூர்வாசம், காபிலம், மானவம், அவசநஸம், வாருணம், காளிகாக்யம், சாம்பவம், அழகானநந்திகேச்வரம், சௌரம், பராசராலே கூறப்பட்ட பாராசரீயம், ஆதித்யம், மாஹேச்வரம், பாகவதம், வாசிஷ்டம், ஆகிய இவைகளே உபபுராணங்களென்று மஹாத்துக்களாற் கூறப்பட்டன.

(௧௭-௨௪) சத்யவதீ புத்ரரான வியாச முனிவர் அஷ்டாதச புராணங்களையும் இயற்றி ஒப்பில்லாததான பாரதமென்னும் இதிகாசத்தையும் அப்புராணங்களுக்கு† உபப்ரமாணமாகச் செய்தருளினர். எல்லா மந்வந்தரங்களிலேயும் வரும் துவாபரயுகங்கடோறும் விஷ்ணுமூர்த்தியானவர் தர்மத்தை விரும்பி வியாசராயவதரித்து உயிர்களுடைய நன்மைகளைக்கருதினவராய் ஒவ்வொரு வேதத்தையும் சாகோப சாகைகளாயும் விதிப்படி புராணங்களையும் இடைவிடாமற் செய்கின்றார். அதுவுமன்றி இந்த வியாசரே கலியுகத்திற் றோன்றிய அந்தணர்களை அற்பாயுளுடையவர்களாகவும், அற்ப அறிவினை யுடையவர்களாகவும் அறிந்து யுகந்தோறும் புண்ணியமான ஸம்ஹிதைகளையும்ஸ்திரீ சூத்ரர் ‡ த்விஜ

† உபப்ராம்ஹணம்-அங்கமென்றுவது, அவற்றிற் கூறுத வினைய விஷயங்களைக் க்ரோடிகரித்து (ஏகிகரிக்கப்பட்டது) என்றுவது பொருள் கொள்க.
‡ த்விஜபந்து - பிராமண குலத்திற்பிறந்து அக்குலாச்சார தர்மங்களைக் கைவிட்டுப் பெயர் மாத்திர முடையவர்.

பந்துக்கள் ஆகிய இவர்கள் வேதத்தைக்கேட்கும் அதிகாரமில்லாதவர்களாதலால் அவர்களுடைய நன்மையைக்கருதி புராணங்களையுஞ் செய்துவருகின்றார். ஓ! முனிசிரேஷ்டர்களே! சுபகரமானதும் வைவஸ்வத மென்னும் பெயருடையதுமான ஏழாவது மந்வந்தரம் நிகழுங்காலத்தில் வருவதான இருபத்தெட்டாவது துவாபரயுகத்தில் சத்யவதீ புத்திரரும், தர்மஜ்ஞருட் சிறந்தவரும் எனக்கு ஆசிரியருமாகிய இவ்வியாசமுனிவர் அவதரிக்கின்றார். மேற்கூறிய மந்வந்தரத்தில் வரும் இருபத்தொன்பதாவது துவாபரயுகத்தில் அஸ்வத்தாமர் வியாசராக அவதரிப்பார். இம்முறையானே இருபத்தேழு வியாசர்கள் முன் அவதரித்துச் சென்றனர். அந்த வியாசர்களால் யுகந்தோறும் புராணமுஞ் சம்ஹிதைகளுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன என்றனர்.

(உங-கூ) முனிவர்கள் மஹாபாக்கியவந்தரான சூதமுனிவரைப்பார்த்து, ஓ சூதரே! முன் யுகங்களில் அவதரித்தவர்களான வியாசர்கள் ஒவ்வொரு துவாபரயுகத்திலும் புராணங்களை எப்படிக் கூறினார்கள்? அதைத் தெரிவிக்கவேண்டுமென்ன, சூதர், தயைகூர்ந்து முனிவர்களை நோக்கிக் கூறுகிறார்:— முதல்துவாபரயுகத்தில் பிரம்ஹதேவராலேயே வேதங்கள் வகுக்கப்பட்டன. இரண்டாவது துவாபரயுகத்தில் பிரஜாபதி என்பவர் வியாசருடைய காரியத்தைக் செய்தனர். (புராணங்களைச் செய்தனரென்றபடி) மூன்றாவது துவாபரயுகம் ஆதியாக இருபத்தெட்டாவது துவாபராந்தம் முறையே அவதரித்த வியாசர்கள் உசனர் (சுக்ராசாரியர்) பிரகஸ்பதி, சூரியன், இயமன், இந்திரன், வசிஷ்டர், சாரஸ்வதர், த்ரிதாமர், த்ரிவிருஷர், பரத்துவாஜர், அந்தரிக்ஷர், தர்மர், த்ரையாருணி, தனஞ்சயர், மேதாதி, ரதீ, அத்திரி, கவுதமர், உத்தமர், ஹரீயாத்மர், வேனரென்கிற வாஜஸ்ரவர், அமுஷ்யாயணரென்கிற சோமர், திரணபிந்து பார்க்கவர், சக்தி என்கிற ஜாதுகர்ணர், கிருஷ்ணத் வைபாயனர் என்று நான் கேட்டிருக்கிறேன்; கேட்டவாறே ஈண்டெடுத்துக் கூறினேன்.

(உச-கூசு) இந்த வியாசமுனிவராலேயே கூறப்பட்டதும் புண்ணியமானதும் துக்கசமூகங்களையெல்லாம் நாசப்படுத்துவதுமான பாகவதமென்னும் புராணமுங் கேட்டிருக்கின்றேன். இப்பாகவதம் மோக்ஷத்தைக்கொடுக்கத்தக்கது. காமியார்த்தங்களைத்தரத்

தக்கது. வேதார்த்தங்களைப் பரிப்ரும்ஹிதம் (எடுத்துக்கோஷிக்கத் தக்கது.) * எல்லாவாகமங்களுடைய சாரங்களுக்கும் சோலையாயுள்ளது. முமுக்ஷுக்களுக்கு எப்பொழுதும் பிரீதிகரமானது. வியாசமுனிவர் மங்களம் வாய்ந்த இப்பாகவதத்தை இயற்றி மகாத்மாவாயும் வைராக்யத்தோடு கூடினவராயும், விசேஷஜ்ஞராயும், அரணியிற்றோன்றினவராயும் தமது புத்திரராயுமுள்ள சுகமுனிவருக்குபதேசித்தனர்.

(ஙஎ-ஙக) ஓ முநீந்திரர்களே! கருணாநிதியாயும் எமது குருவாயுமுள்ள வியாசமுனிவர் அற்புத அறிவுடையவராயும் அயோநிஜராயுமுள்ள சுகமுனிவருக்கு சர்வபுராண ரகஸ்யமானதும் மஹாப்ரபாவமுடையதுமான இத்தேவீபாகவதத்தை எவ்விடத்தில் பிசங்கித்தனரோ அவ்விடத்தில் யானும் அவரது கருணையினால் கேட்டுக் கிரஹிக்கவுமாயினேன். சம்சாரமென்னும் ஆழ்ந்த கடலைக்கடத்தற்கு விருப்பமுடையவரான சுகமுனிவர் நானாவிதமான கதாரசங்களமைந்த பாகவதமென்னும் கற்பகவிருக்ஷத்தினுடைய பல ரசத்தை யுட்கொண்டு அதன் சுவையை யறியும் அறிவுடையவராய் அன்போடு செவிகளாரக்கேட்டனர். ஆகலான் அற்புதமான இப்புராணத்தைக்கேட்டு இவ்வுலகில் கலியினது கொடுமையினின்றும் விடுபடாதவரெவருள்ளார்.

(சO-சங) பாவமுடையவனாயினும் வேததர்மங்களைக் கைவிட்டவனாயினும் குலாசாரத்தை விட்டொழிந்தவனாயினும் புல்லறிவுடையவனாயினும் பிரயத்தினமன்றியில் தற்செயலாய் மிகவுஞ்சிறந்த இப்பாகவதத்தைக் கேட்கப்பெறுவானாயின் அவன் இம்மையில் பெறுதற்கரிய போகங்களெல்லாம் அனுபவித்து இவ்வுடனீக்கத்தில் அழிவில்லாததும் யோகிகளாலடையத்தக்கதும் பகவதியினுடைய திருநாமத்தால் முத்திரிக்கப்பட்டதும் அழகினையுடையதுமான தத்பதத்தை யடைகிறான். எந்தப்பரதேவதை நிர்க்குணையாயும் ஹரிஹராதிகளால் அறியப்படாதவளாயும் சாதுக்களுக்குப் பிரியதமையாயும் சமாதியவஸ்தையில் அறியப்பட்டவளாயும் அடையத்தக்க வித்யாரூபியாயுமிருக்கின்றனளோ அந்தப் பகவதியினுடைய இப்பாகவதத்தை எந்த சத்புருஷன் எப்பொழுதும் சிரவணஞ் செய்கிறானோ அவனுடைய இருதயமாகிய குகை

* வேதங்களில் ஆழ்ந்திருக்கும் அர்த்த புஷ்டிகளை மதச்செருக்குற் யானை கர்ஜிப்பதுபோல் கோஷிப்பது.

யுள் பாவனுருயமாய்ப் பிரகாசிக்கின்றுள். எந்த அறிவிலியானவன் எல்லா வுறுப்புகளோடு கூடின மானிட சம்பந்தமான சரீரத்தை * பிறவிக்கடலைக் கடப்பதற்குத் தோணியாக அடைந்தும் சுகத்தைத்தருவதான புராணவசனங்களைக் கேட்கிறதில்லையோ அவன் அந்தோ! இவ்வுலகில் தெய்வத்தினுல் வஞ்சிக்கப்பட்டவனுவன். எந்த மனிதன் பெறுதற்கரிதான இம்மானிட ஜன்மத்தில் * செவிகளைப்படைத்தும் இடைவிடாது பரதூஷணுவசனங்களைக் கேட்கின்றுனே, அப்புல்லறிவாளன் இவ்வுலகில் அர்த்தங்களை யெல்லாந் தருவதும் ரசநிதியாயுள்ளதும் மலமற்றதுமான புராணசாரமாகிய தேவீபாகவதத்தைக் கேளான்; அவன் மனிதனல்லன் பதிதன் என்றனர்.

மூன்ரும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸமாக்ருத்யை நம:

நான்காம் அத்தியாயம்

## சுகோத்பத்திவினு.

---

(க-ங) சவுனகாதியர் வினவுகின்றுர்:—? சாந்தரானசூதமுனிவரே! வியாசருடைய எந்த மனைவியினிடத்தில் சுகரென்னும் புத்திரர் உற்பத்தியானுர்? அன்றியும் அச்சுகமுனிவர் அயோநிஜரென்றும், அதுபோலவே அரணியிற்ருேன்றினவரென்றுங் கூறக்

---

* இதனுல் மானிடயாக்கை, பிறவிக்கடலைக் கடப்பதற்கு ஓர் தோணியாயுள்ளதெனவும், அதனைச்செலுத்துவதற்குக்கலைஞானங்களை கற்றதற்குரிய வாக்கு செலுத்துங் கருவியாயுள்ளதென்னவும், செலுத்துங் கருவியாற் கடலைக்கடந்தவழி அக்கலை ஞானங்களில் எடுத்துரைக்குஞ் சதுர்ப்பாடாகிய ஞானம் அங்கு அடையக்கடவதாகியபயனெனவும், அந்த ஞானமாகியபயனை எளிதிற்கூட்டவல்ல இப்புராணஞ் செவிப்புலனுக்கெட்டும் பாக்கியமிலனுயின் அதுவே தெய்வவருள் பெருததன்மை எனவுங் கொள்ளக்கிடந்தன.

* எவனெருவன் மனிதயாக்கையைப்பெற்றும் அதில் சதுர்ப்பாடுடைய இரண்டு செவிகளைப்படைத்தும் புறங்கூறுதலாகிய சொற்களையே கேட்கின்றுனே அந்த அறிவிலி சகலபுருஷார்த்தங்களைத் தருவதாயும், சுவைகளுக்கெல்லாம் இருப்பிடமாயும் நிர்மலமாயுமிருக்கின்ற இப்பாகவதத்தைக்கேளாமையால் அவனது செவித்துளையை நரகத்திற் செலுத்தும் ஒரு பிலத்துவாரமென்றறியவேண்டும்.

கேட்டிருக்கிறோம். அவ்விஷயத்தில் பெருஞ்சந்தேகம் உண்டாகின்றது. ஓ தீர்க்கதரிசியே! அதை இப்பொழுது எங்களுக்குச் சொல்லல்வேண்டும் அன்றியும் சுகமுனிவர் மஹா தபசி என்றும், கர்ப்பத்திலேயே யோகவானு யிருந்தவரென்றுங் கேட்டிருக்கின்றோம். அவர் மிகவும் விஸ்தாரமான இப்புராணத்தை எவ்வாறு கற்றனர் என்று வினவினர்.

(௪-௯) சூதர்கூறுகின்றார்:—ஓ முனிவர்களே! முன்னொரு காலத்தில் சத்யவதீ புத்ரரான வியாசர் ஸரஸ்வதி நதிதீரத்திலுள்ள ஓராஶ்ரமத்தில் ஆண்பெண்ணாகிய ஊர்க்குருவிகள் லீலாவினோதமாயிருத்தலைக்கண்டு மிகவும் வியப்படைந்தனர். பின்னர் அவ்விரண்டு ஊர்க்குருவிகளும், கூடில்தாங்களிட்டஅண்டத்தி (முட்டையி) னின்றும் வெளிப்பட்டதும் அழகானதும் செம்பைப்போலும் செந்நிறமுடையதும் மேன்மையான வடிவமுடையதும் இறகு முளையாததுமான அக்குஞ்சுகளைக்கண்டு களித்துக்கொண்டிருந்தன. பின்னர் அப்பறவைகளிரண்டும் தன் குஞ்சுகளுக்கு உணவைத்தேடிவந்து ஊட்டுந்தொழிலில் மிகவும் வருந்திய முயற்சிகளுடையவைகளா யுணவைக் கொண்டுவந்து அப்பிள்ளைகளினுடைய வாயில் சிறிது சிறிதாய்ப் பலதடவை யூட்டிக்கொண்டிருந்தன. அன்றியும் குஞ்சுகளினுடைய உடம்போடு தம்முடம்பை அணைத்துக்கொண்டும் முகத்தில் அன்போடுமுத்தமிட்டும் சந்தோஷித்து மகிழ்ந்துக்கொண்டிருந்தன. இவ்வாறு அவ்விடத்தில் அப்பறவைகள் தம்பிள்ளைகளினிடத்தில் பாராட்டிக்கொண்டிருந்த ப்ரேமாதிசயத்தை வியாசர் கண்டு தம்முடைய மனதில் இதனை யோசிக்கலாயினர். ஆ! ஆ! என்ன ஆச்சரியம்! பட்சிசாதிகளுக்குந் தமது குஞ்சுகளிடத்தில் எவ்வளவு ஆராமை யிருக்கின்றது. இதனை ஆராயுமிடத்து புத்திரனால் தாங்கள் பலத்தையடைய விரும்பும் மாநுடர்கள் புத்திரர்களிடத்தில் வாஞ்சை வைத்திருப்பது ஓ ரதிசயமா?

(௧௦-உ௦) இப்பறவைகளிரண்டும் இக்குஞ்சுகளுக்குச் சுகசாதனமாயுள்ள விவாகத்தைச்செய்து மருமகளுடைய குளிர்ந்த முகத்தைக்கண்டு சுகத்தையடையப் போகின்றனவா? அதுவன்றியும் *பரமதர்மிஷ்டரான இந்தப் புத்திரர் (குஞ்சுகள்) தாய்தந்தைக

* பரமதர்மிஷ்டர் புத்திரர்என்பன இழிவு சிறப்பு.

ளான இப்பறவைகளுக்குக் கிழத்தன்மை வருகிறபோது புண்ணியத்தைவிரும்பி ஏவற்பணிவிடையைச் செய்யப்போகின்றனவா? அதுவன்றியும் இக்குஞ்சுகள் அநேகமான திரவியங்களைச் சேகரித்து இத்தாய்தந்தைகள் பரலோகமடைதற்குரிய அபரகர்மங்களை விதிப்படி நடத்தப்போகின்றனவா? அல்லது, அவற்றிலொன்றேனும் காசிக்குப்போய் கயாசிரார்த்தஞ் செய்யப்போகின்றதா? பிதுர்க்களை யுத்தேசித்து * விருஷோத்ஸர்ஜன முதலியவற்றை விதிமுறையாகச் செய்யப்போகின்றதா. (இங்ஙனங் கூறிவந்தவைகளி லொன்றுமில்லையே) நூல்களிலும் இச்சமுசாரத்தில் புத்திரனுடைய சரீரத்தைத் தழுவிக்கொள்வதனலுண்டான அடையாளத்தையே சுகத்துக்குள் உத்தமமான சிறந்த சுகமென்று கூறப்பட்டிருக்கின்றன. புத்திரனில்லாதவனுக்குக் கதியில்லை சுவர்க்கமும் இல்லை இல்லை, (ஆகையால்) புத்திரனைக்காட்டிலும் வேருன எந்தச்சாதனமும் பரலோகசாதன மாகமாட்டாது. மநுமுதலிய நீதிமான்களால் ஏற்படுத்தப்பட்ட தர்மசாஸ்திரங்களிலும் புத்திரனையுடையவன் சுவர்க்கத்தை யடைகிருனென்றும் புத்திரனில்லாதவன் ஒருபொழுதும் அதை யடைகிறதில்லையென்றுங் கூறப்பட்டிருக்கின்றன. அது அநுமானத்தாற் சாதிக்கப்பட்டதன்று. இவ்விடத்தில் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றது. இதனல் புத்ரவான் பாபத்தினின்றும் விடுபடுகிருனென்ற வேதவாக்கியம் நிச்சயமாயிற்று. ரோகத்தாற் பீடிக்கப்பட்டவன் அந்தியகாலத்தில் பூமியிற் புரண்டு துக்கித்தவனய், அந்தோ! நமக்குப்புத்திரனில்லாமற் போயிற்றே என்று மனதில் ஏக்கமுறுகிருன். அன்றியும் நமக்கு அளவிறந்த செல்வமும், கிரகத்தில் அநேக பாத்திர வரிசைகளும், சுதந்தரமான வீடும் இருக்கின்றன; இவைகட்கு எவன் அதிகாரியாகப்போகிருனே? அறியோம். இவ்வாறு மரணந்தகாலத்தில் அவனுடைய மனமானது துயரத்தால் மிகவும் பிரமிக்கின்றது. அதனல் பிராந்தசித்தனன அவனுக்கு எவ்விதத்தினலுந் துற்கதியேயன்றி வேறில்லை யென்று சிந்தித்துக்கொண்டிருந்தனர்

(உக-ஙO) என்றிவ்வாறுவியாசமுனிவர்பலவாருய்ச்சிந்தித்து வெம்பிப் பெருமூச்செறிந்து மனேவிசார முடையவராயினர். இப்

---

* அபரகிரியையில்(கக)வதுதினத்தில் இறந்துபோனவருக்குப் பைசாச மனனம் வாராதிருத்தற்காக இளஞ்சேவை சூலமுதலியவைகளாற்பொறித்து ஆலயத்துக்கு விடுதலாகிய சடங்கு.

படி மனதில் பெரும்பாலுஞ் சிந்தித்துப் பின்னர் புத்திராபேக்ஷை யுடையவராய் மேருவின் சிரகத்தில் தவம்புரிய நிச்சயித்து அங்குச் சென்றனர். சென்று வரந்தருவதில் சாதுர்யமுடையவரும் இஷ்டகாமியங்களை நிறைவேற்றுபவருமான உருத்திர மூர்த்தியை உபாசிப்போமா, அல்லது விஷ்ணு இந்திரன் பிரமன், சூரியன் கணேசர், கார்த்திகேயர், அக்னி, வருணன், முதலிய இவர்களை யுபாசிப்போமா, எந்தத் தெய்வத்தை யுபாசிப்போம் என்று மன திற் சிந்தித்தனர். இவ்வாறு சிந்தித்துக்கொண்டிருக்கு மளவில் வீணாபாணியாகிய நாரதமுனீந்திரர் அங்குத்தெய்வகதியாய் வந்தனர். சத்தியவதீ புத்திரரான வியாசமுனிவரும் அந்த நாரதரைக் கண்டு மனமகிழ்ந்து அர்க்கிய பாத்திய ஆசமனாதிகள் கொடுத்து அவரது க்ஷேமாதிசயங்களை வினவினர். நாரதமுனிவர் அந்த வியாசர்கூறிய குசலவார்த்தைகளைக்கேட்டு ஆனந்தித்து ஓ வியாசரே! நீர் மனோசிந்தை யுடையவராகக்காண்கின்றீர். அதற்குக் காரணம் யாது? அதைச்சொல்லுமென்ன, வியாசர் வினவுகின்றார்:—ஓ நாரத முனிவரே! புத்திரனில்லாதவனுக்குச் சத்கதியில்லை என்று வேதங்கள்முறையிடுகின்றன. அதனால்தான் என்மனதுக்குச் சுகமுண்டாகவில்லை. அக்காரணம்பற்றியே நான் பலமுறையுஞ் சிந்தித்துச் சிந்தித்துத் துக்கிக்கின்றேன். (இது நிற்க) இப்பொழுது நான் தவத்தினால் எந்த தேவதையைத்திருப்தியடையச்செய்யலாம் எந்தத்தேவதைஇஷ்டார்த்தத்தைக் கொடுக்கும்? என்கிற விஷயத்தில்துணிவு பிறவாதவனாய் உம்மைச் சரணமடைகின்றேன் தயாநிதியான ஓ முனிவரே: நீர் சர்வக்ஞரல்லவா. யான் எந்தக்கடவுளைச் சரணமடையலாம்? எந்தக்கடவுள் எனக்குப்புத்ரசம்பத்தைக்கொடுப்பார்? அதை விரைவிற் கூற வேண்டும் என்றனர்.

(௩௧-௭௧) இவ்வாறு வியாசராலே கூறக்கேட்ட வேத வித்தான நாரதமுனிவர் மிகவும் பிரீதியோடு அம்முனிவரைநோக்கிக் கெம்பீரமாய்க் கூறத்தொடங்கினர்.

மகாபாக்கியவந்தரான வியாசரே! நீர் இப்பொழுது எம்மை நோக்கி எத்தகைய கேள்விகளைக்கேட்டீரோ அக்கேள்விகளையே எம்முடைய பிதாவாகிய பிரமதேவரும் நாராயணமூர்த்தியை நோக்கிக்கேட்டிருக்கின்றார். எங்ஙனமெனில் எம்முடைய பிதா ஒருக்கால் நாராயணமூர்த்தியைத் தியான நிஷ்டையி லிருப்பவ

ராகவறிந்து அதிக ஆச்சரியமடைந்து தேவேசனையும் இலக்ஷ்மீபதியாயும், ஜகத்பதியாயும் கவுஸ்துவமணியால் பிரகாசிக்கின்ற திருமார்புடையவராயும் சுந்தரவடிவுடையவராயும் சங்குசக்கர கதாதரதராயும், பீதாம்பரதாரியாயும், நான்கு புயமுடையவராயும், ஸ்ரீவத்ஸமென்னு மருவுடையவராயும், எல்லா வுலகங்களுக்குங் காரணராயும், தேவதேவராயும், ஜகத்குருவாயும் மகத்தான தவத்தைச்செய்கின்றவராயும் விளங்காநின்ற வாசுதேவரைநோக்கி அடியில் வரும் வகையாக வினவுகின்றார்:—இறந்தகால முதலிய முக்கால முணர்ந்தவராயும், தேவதேவராயுமுள்ள பகவானே! நீர் யாது காரணத்தால் தவஞ்செய்கின்றீர்? யாரைத்தியானஞ் செய்கின்றீர்? இது எமக்கு மிகவும் வியப்பைத் தருகின்றது. (ஏனெனில்) நீர் எல்லா உலகங்களுக்கும் பிரபு. அங்ஙனமிருக்க நீர் இப்பொழுது தியான நிஷ்டராக விளங்குகின்றீர். ஓ தேவேசனே! உலகில் இதைவிட ஆச்சரியம் யாதிருக்கின்றது. ஓ லக்ஷ்மீபதே! தேவரீரது உந்திக்கமலத்தினின்றுந் தோன்றியயானே எல்லாவுலகங்களுக்குங் கர்த்தனாகவிருக்கின்றேன், ஆதலால் இப்பூமியில் உம்மைவிட மேலானவர் எவருளர்? உளரெனில் ஆச்சரியமே. அப்படி யொருவரிருந்தாற் சொல்லும். யான் ஜகந்நாதரான உம்மையே எல்லாவற்றிற்கு முதற்காரணமாகவும், சிருஷ்டிகர்த்தாவாகவும் பரிபாலகராகவும் சம்ஹாரமூர்த்தியாகவும் எல்லாக்காரியங்களையுஞ் செய்வதில் சமர்த்தராகவுமெண்ணி யிருக்கின்றேன்.

ஓ மஹாராஜாவே! உமது ஆஜ்ஞையினால் யானிவ்வுலகைப் படைக்கின்றேன். உருத்திரர் கற்பாந்தத்தில் எல்லாவற்றையும் சம்ஹரிக்கின்றார். சூரியனும் ஆகாயத்தில் சஞ்சரிக்கின்றான். வாயுவும் சிறுகாற்றுப் பெருங்காற்றாக வீசுகின்றது. அக்கினியும் சப்தஜ்வாலையோடு பிரகாசிக்கின்றது. மேகங்களும் வருஷித்துக் கொண்டு வருகின்றன.

(சஉ-சரு) இத்தகைய பெருமைவாய்ந்த தேவரீர் எந்தத்தெய்வத்தைத் தியானிக்கின்றீர்; இவ்விஷயத்தில் எனக்குப் பெருஞ் சந்தேக முண்டாகின்றது. ஏனெனில் மூன்றுலகத்திலும் உம்மைவிடச்சிறந்த தெய்வமொன்றிருக்கின்றதாக யான் கண்டிலன். ஆதலால் உமது பக்தனும் புத்திரனுமாகிய எனக்கு அன்புகூர்ந்து அவ்வுண்மையை விளக்கவேண்டும். (ஏனெனின்) மகத்துக்களுக்குத் தமதன்பர்களிடத்தில்மறைக்கத்தக்கபொருளொன்றுமில்லையெனத்

கர்மசாஸ்திரங் கூறுகின்றதல்லவா? எனவே (பெரியோர் தம்மை விசுவசித்தவர்களுக்கு உண்மைப்பொருளை மறைத்தல் குற்றமென்பது விதியல்லவா.)

(சச-சரு) இவ்வாறு பிரமன்கூறிய வசனத்தைத் திருமால் கேட்டு அப்பிரமனை நோக்கிக் கூறுகின்றார். ஓ சிருட்டிகர்த்தனே! நீ ஒருமைப்பட்ட மனமுடையவனாய்க் கேட்பாயாக. யான் என்னுடைய மனதினுற்றவற்றைக் கூறுகின்றேன். உன்னையும் என்னையும் உருத்திர மூர்த்தியையும் சிருட்டியாதிகளுக்குக் கர்த்தாக்களாக தேவாசுரர்களும் மனிதர்களும் ஆகிய இவர்களனைவரும் அறிவார்கள். (நீ அதனை யெண்ணுதொழிவாய்.)

(சகூ-ருO) பிரமனே! நீ படைப்பதும் நான்காப்பதும் அரனுரழிப்பதும் ஆகிய இம்முத்தொழில்களும் சத்தியினாலே செய்யப்படுகின்றன வென்று வேதபாரகர்களால் கணிக்கப்பட்டிருக்கின்றன. அது எப்படி என்றால் அச்சத்தி உலகைப்படைக்கின்ற உன்னிடத்தில் இராஜசகுணமாயும் காக்கின்ற என்னிடத்தில் சாத்வீககுணமாயும் சங்கரிக்கின்ற உருத்திரரிடத்தில் தாமசகுணமாயும் வியாபித்திருக்கின்றது எனவும், அச்சத்தி உன்னிடத்தில் பரிணமிக்காவிடில் நீ படைப்பதற்குக் கர்த்தா வாகமாட்டாய். அப்படியேயானும் பரிபாலிப்பதற்குச் சக்தனாகமாட்டேன். அப்படியே சங்கரரும் சங்கரிப்பதற்குச் சக்தராகமாட்டார் எனவும், யாமனைவரும் எக்காலத்தும் அச்சத்திக்கு ஐக்கியப்பட்டவர்களாகவேயிருக்கின்றோம் எனவுங் கூறுகின்றனர். அதுபரோக்ஷமாயும் பிரத்யக்ஷமாயும் பார்க்குங்கால் உண்மையாகவே விளங்குகின்றது. அதற்குத் திருஷ்டாந்தரமொன்று கூறுகின்றேன் கேட்பாயாக. யான் ஆதிசேஷனாகிய படுக்கையில் உறங்குங்கால் அச்சத்திற்குச் சுவாதீனப்பட்டவனாகவே யிருக்கின்றேன். இவ்விஷயத்தில் யாதொருசந்தேகமுமில்லை. மீண்டும் ஒருக்கால் ஜாக்ரகாலவசப்பட்டவனா யெழுந்திருக்கின்றேன்.

(ருக-ருரு) யான் அச்சத்திக் குடன்பட்டே எப்பொழுதுந் தவம்புரிகின்றேன். ஓர் சமயத்தில் இலக்குமிதேவியோடு சுகமாய் ரமிக்கின்றேன், மற்றொருசமயத்தில் யுத்தரங்கத்தில் அசுரர்களோடுபயங்கரமாயும் தேகத்தைத் துன்பப்படுத்துவதாயும் உலகங்களுக்கெல்லாம் நடுக்கத்தை விளைவிப்பதாயுமுள்ள போர்செய்கின்றேன். ஓ தர்மஜ்ஞனே! முன்னொரு காலத்தில் அவ்வசுரர்க

ளோடு ஐயாயிர வருடம் இடைவிடாமல் யான் மல்யுத்தஞ் செய்தது உனக்குப் பிரத்தியக்ஷமாய்த்தெரிந்திருப்பதுதானே. அப்படிப் போர்புரியுங்காலத்தில் என்னுடைய காதிலுள்ள மலத்தினின்றும் உத்பத்தியானவர்களும் துஷ்டர்களும் மதோன்மத்தர்களுமான மதுகைடபர்களென்கிற இரண்டசுரர்களும் * தேவியினுடைய அனுக்ரஹத்தினல் சம்ஹரிக்கப்பட்டார்களல்லவா? அப்பொழுது எல்லாவற்றிற்கும் காரணமாயும் பராபரமாயும் உள்ளது சத்திரூபமே என்று என் உன்னலறியப்படவில்லை? ஹே மஹா பாக்கியசாலியே! அவ்விஷயத்தைப்பற்றி மீண்டு மீண்டுங் கேட்பது எற்றுக்கு?

(ருசு - சுக) அன்றியும் யான் புருஷரூபமாய்த் திருப்பாற்கடலில் வசிப்பதும் யுகந்தோறும் மத்சியமாயும் நரசிம்ஹமாயும் வாமனமாயும் அவதரிப்பதும் அப்பராசத்தியினுடைய இச்சாமாத்திரமேயன்றி என்னிச்சையன்றும். திரியக்யோனிகளிற் பிறந்தவன் ஒருவருக்கும் பிரியனுக ஆகமாட்டான். யானே வென்றல் வராக மச்சியாதிகளாகிய திரியக்யோனிகளில் உற்பவித்தும் சகலப் பிராணிகளுக்கும் விருப்பமுடையவனு யிருக்கின்றேன். அது என்னுடைய இச்சையாகமாட்டாது. எனவே என்னுடைய இச்சாசுதந்தரத்தினுல் திரியக் யோனிகளிற் பிறப்பவனுமன்று. அப்பிறவிகளிற்பிறந்தும் இகழ்ச்சியடையாதுபுகழ்ச்சியடைந்திருப்பவனுமன்று. யாவும் அச்சத்தியின் இச்சா சுதந்தரத்தினுலே யாம். இலக்ஷ்மிதேவியோடு ரமித்திருப்பதாகிய உல்லாசத்தையும் சயனத்தையும் விட்டு மச்சிய முதலிய இழிந்த யோனிகளில் எவன்றன் பிறப்பான்? அன்றியும் கருடனை ஊர்தியாகக்கொண்டு மஹத்தான யுத்தஞ்செய்வதும் என் சுதந்தரந்தானு? அன்று. முன்னெருகாலத்தில் வில்லிற் பூட்டிய நாண் அற்றுப்போக அதனுல் ஒளிபொருந்திய என்சிரம் அறுபட்டது. அது எவ்விடத்திற்றன் போயிற்றே! பின்னர்சிற்பவேலையில் வல்ல நீ அஶ்வத்தின் (குதிரையின்) சிரத்தைக் கொண்டுவந்து பொருத்தினை, அதுமுதல் யான் ஹயானனன் (அஸ்வமுக முடையவன்) என்று வழங்கப்பட்டேனென்கிற விஷயம் உலககர்த்தாவாகிய உனக்குப் பிரசித்தமாய்த் தெரிந்திருப்பதுதானே. யான் சுதந்தரனுயிருப்பேனுயின் அப்படியெல்லாம் ஆவனே.

---

* தேவியினுடைய அனுக்ரகத்தினுலென்பது மதுகைடபருத்தத்திற்காண்க.

(கூஉ - கூரு) ஆகலான் யான் சுதந்தரனன்று; எப்பொழுதுஞ் சக்திக் குட்பட்டவனாகவே யிருக்கின்றேன். அந்தச்சத்தியையே இடைவிடாமற் சிந்தித்துத்தியானிக்கின்றேன். அதைவிட மேலானவஸ்து ஒன்றிருக்கிறதா? ஓ கமலபவனே! யானறியேனென்று பிரஹ்மதேவனுக்கு வைகுண்டநாதர் கூறினார். ஓ வியாசரே! யானும் அந்த நிச்சயஞானத்தினாலேயே முத்தனானேன். அப்படியே நீரும் அந்த ஞானத்தினால் மங்களமான புருஷார்த்த சித்தியின்பொருட்டு இருதய கமலத்தில் தேவியினுடைய பதகமலத்தைத் தியானஞ்செய்யும். அந்தத்தேவி உம்முடைய அபீஷ்டங்களை முடித்தருளுவள் இதிலையமில்லை. இவ்வாறு நாரத முனிவரால் கூறப்பட்ட வுண்மையைச் சத்யவதீ புத்ரரான வியாசருணர்ந்து தேவியினுடைய பதாம்புஜத்தில்நிச்சலபுத்தி யுடையவராய்த் தவஞ்செய்வானெண்ணி மேருமலையை நோக்கிச் சென்றனர் என்றனர்.

நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

உ

ஸர்வப்ரபஞ்சநிர்மாத்ரை நமஃ

ஐந்தாம் அத்தியாயம்.

## ஹயக்ரீவாவதாரமகிமை.

---

(க-ச) சவுனகாதியர் வினவுகின்றார்:—சூதமுனிவரே! தேவரீர் கூறிவந்தவைகளில் மிகவும் ஆச்சரியத்தைக் கொடுப்பதாயும் உலகினர் நகைப்பதற்கேதுவாயுமுள்ள ஒருவிஷயத்தைக்கூறினீர். அதிலுண்டாகிய ஐயமென்னும்கடலில் எங்களுடையமனம் மிகவும் மக்னப் படுகின்றது. ஏனெனின், விஷ்ணுமூர்த்தியினுடைய சிரம் தம்முடையதேகத்தினின்றும் அறுபட்டு சென்றவிடந்தெரியாமற் சிதறிப்போயிற்றென்றுங் அதன்பின்னர் அத்திருமால் சர்வநியந்தாவான ஹயக்கிரீவராக அவதரித்தாரென்றுங் கூறின் சிரம் அறுபட்ட ஹயக்கிரீவர் கடவுளாவது எப்படி? அன்றியும் எந்த ஹயக்கிரீவரை (உலகமெல்லாம்) புகழ்ந்திருக்கின்றதோ, தேவர்களெல்லாம் எவரை ஆஶ்ரயிக்கின்றார்களோ அந்த ஆதிதேவரே சகந்நாத

ரான கடவுளாவாரெனவும், அவரே எல்லாவற்றிற்குங் காரணரா கின்றூரல்லவா எனவும் அவரை வேதங்கள் புகழ்ந்து தோத்திரஞ் செய்யுமா? ஆகலான் முன்னர்க்கூறிய சிறப்புவாய்ந்த விஷ்ணு மூர்த்தியினுடைய சிரம் ஒருக்காலத்தில் தெய்வகதியாய் எப்படிப் போயிற்று. அதனை அறிவிற்சிறந்த நீர் விரிவாய் விரைவில் சொல்லல் வேண்டும் என்றனர்.

(ரு-அ) சூதமுநிவர் கூறுகின்றூர்:— ஓ மஹரிஷிகளே! நீங்களனைவருந் தேவர்களுக்கெல்லாந் தேவரும் பெரியகாந்தியையுடையவருமான விஷ்ணு மூர்த்தியினுடைய சரித்திரத்தைச் சாவதானமாக முற்றும் முறையாகக்கேளுங்கள் கூறுகின்றேன். ஓர்காலத்தில் அநாதியான விஷ்ணுமூர்த்தி பதினுயிரம் வருடம் அசுரரோடு பயங்கரமான யுத்தத்தைச்செய்து மிகவுஞ் சோர்வடைந்தவராய்ச் சமமாயும் சுபகரமாயுமுள்ள ஓரிடத்திற்சென்று பத்மாசனராய் நாணேடுகூடிய திண்ணிய வில்லைப் பூமியிலூன்றிக் கண்டப்பிரதேசத்தில் (முகவாய்க் கட்டையில்) நாட்டி அவ்வில்நுனியில் தமது தேகபாரத்தை யிறுத்தி நித்திரைசெய்யத் தொடங்கினர். அப்பொழுது அவ்விடத்தில் பிரபுவான அந்த இலக்ஷ்மிநாதர் மிகவும் இளப்படைந்தவ ராகையினுல் தெய்வச் செயலாய்ப் பேருறக்கங் கொண்டனர்.

(கூ-கச) அக்காலத்தில் இந்திரன்முதலிய தேவர்களெல்லாம் தங்களுடைய காரியசித்தியின் பொருட்டு பிரஹ்ம ருத்திரர்களோடு கூடி அனேககாலமாய் ஓர் யஜ்ஞஞ்செய்யவேண்டு மென்கிற விருப்பமுடையவர்களாய், யஜ்ஞகர்த்தாவாயும் பிரபுவாயும் விளங்காநின்ற விஷ்ணு மூர்த்தியைப் பார்ப்பதற்கு வைகுண்டத்தை யடைந்தார்கள். அவ்வைகுண்டத்தில் அப்பொழுது அந் நாராயண மூர்த்தியைக் காணுமல் தேவர்கள் தங்கள் ஜ்ஞாநதிருஷ்டியினுல் அவரிருக்குமிடமறிந்து அங்குச்சென்று பிரபுவாகிய விஷ்ணுமூர்த்தி மெய்மறந்து நித்திரையி லிருப்பதையுமறிந்து நித்திரை நீங்குமளவும் இருப்போமென் றெண்ணி, அவ்விடத்திற்றுனே யிருந்தார்கள். இவ்வாறு இவரெல்லாம் நின்றவண்ணமே நிற்க உலககர்த்தாவாகிய விஷ்ணுமூர்த்தியோ நித்திரையிற்றுனே யிருந்தனர். பிரமருத்திரர்களை முதன்மையாகவுடைய தேவர்களனைவரும் இவர்து பேருறக்கத்தைக்கண்டு சிந்தாகுலமாயினர். பின்னா இந்திரன் தன்பரிவாரங்களாகிய தேவர்களைப்பார்த்து, தேவர்காள் இப்பொழுது யாம் யாதுசெய்யலாம், இந்த விஷ்ணுவினுடைய

நித்திரைக்குப் பங்கஞ்செய்வது உசிதமாகுமா? இதனை ஆராய்ச்சி செய்யுங்கள் என்று கூறினன்.

(கஙு-கக) அப்பொழுது உருத்திரர் இந்திரனைப்பார்த்துக் கூறுகின்றார்:—நித்திரையைப் பங்கப்படுத்துவதனால் குற்றமிருக்கின்றது. குற்றமுளதாயினும் (இச்சமயம் தேவர்கள் செய்யவேண்டிய யஜ்ஞத்திற்கு ஏதுவொன்றைத்தேடிக்கொள்ளல்வேண்டும். அன்றியும் பூர்வத்தில் சத்யலோகவாசியான பிரமனால் செல் லென்கிற ஒரு செந்து உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றது. அந்தச்செல்லுருவத்தினால் இப்பொழுது பூமியில் நாட்டியிருக்கப்பட்ட வில் நுனியைப் பக்ஷிப்பதற்கு வேண்டிய முயற்சியிற் றலைப்படுங்கள். அப்படிவில்நுனி பக்ஷிக்கப்படுமேயானால் வில்லானது மேலே நிமிர்ந்துவிடும். அதன்பின்னர் இந்த நாராயணர் நித்திரையினின்று நீங்கிவிழித்துக்கொள்வர். அப்பால் தேவகாரியமனைத்தும் நிர்விக்கினமாய் நிறைவேறுமென்பதிற் சந்தேகமில்லை என்றனர். தேவர்களிற் சிறந்த உருத்திரர் இந்திரனைச் செல்லுருக்கொண்டுவரும்படி ஆஜ்ஞைசெய்த அப்பொழுதே அவராணையின்படி செல்லுருக்கொண்ட இந்திரன் சிலவெண்ணிக்கூறுகின்றான்:—உருத்திரமூர்த்தியை நோக்கி எங்களுக்குத் தலைவரும் உலகத்திற்குக் குருவும் ஆகிய இலக்குமிநாதருக்கு யான் நித்ராபங்கம் எவ்வண்ணஞ்செய்யலாம்? நித்ராபங்கம் செய்வதும் கதாச்சேதம் செய்வதும் (ஏகாதசாதிகளை முறையே சொல்லிவந்து இடையேவிடுவதும்) ஸ்திரீபுமான்களாகிய தம்பதிகளுக்கு அமைந்துள்ள பிரேமாதிசயத்தைக் கெடுப்பதும், தாயைவிட்டுச் சிசு தனித்திருக்கச் செய்வதுமாகிய இவையெல்லாம் பிரஹ்ம அத்திக்குச் சமானமாகச் சொல்லப்பட்டிருக்கிறதல்லவா?

(உ௦-உ௫) ஆதலால் யான் தேவதேவரான விஷ்ணுமூர்த்திக்குச் சுகசாதனமாயுள்ள நித்ராபங்கத்தை எப்படிச் செய்யத்துணிவேன்? ஓ தேவனே! யான் எந்தகிருத்தியத்தினால் பாவத்தைச்செய்தவனாக ஆவேனோ அந்த கிருத்தியம் இதுவாகவே இருக்கின்றமையால் அந்தவில்லைப் பக்ஷிப்பதனால் வரும் பிரயோசனமென்னை? இவ்வாறு யோசிப்பேனாயின் உலகத்தில் யாவருந் தன் காரியார்த்தமாய்ப் பாவத்தைச் செய்கின்றாரல்லவா? ஆதலால், யானும்

* உருத்திரரென்பது ஏகாதசருத்திரரை. இவ்வாறு வருமிடந்தோறுங் காண்க.

என் பிரயோசனத்தை நாடியே வில்லைப் பக்ஷிக்கின்றேன் என்றனன். அப்பொழுது பிரமன் கூறுகின்றான்:—ஓ இந்திரனே! நீ அங்ஙனஞ் செய்வையாயின் யாங்கள் யஜ்ஞஞ்செய்யுஞ் சமயத்தில் உனக்கு அவிர்ப்பாகங் கொடுக்கின்றோம். ஆகையால் நீ சொன்னபடியே எங்களுடைய காரியத்தைச்செய். விஷ்ணுவை யெழுப்புவாயாக, சாவகாசஞ் செய்யாதை; (இதுவன்றி உனக்கு) ஓமகிருத்தியத்தில் அவிர்ப்பாகங் கொடுக்குங்கால் பக்கத்தில் எந்தபாகம் விழுகின்றதோ அதுவும் உன்னுடைய பாகமென்றே அறிதி. ஆதலால் விரைவுடன் அக்காரியத்தைச் செய்வாயாக என்றனன். பிரமதேவர், செல்லுருக்கொண்ட இந்திரனை நோக்கிச் சொல்லியவுடன் அவன் அதிசீக்கிரமாய்ப் பூமியில் நாட்டப்பட்ட வில் நுனியைக் கரித்தனன்; உடனே நாணற்றுப் போயிற்று.

(உசு-ரு0) நாணற்றவுடன் மேனுனியும் மேலே நிமிர்ந்தது. நிமிர்ந்தவுடன் பயங்கரமான பேரொலி யொன்றுண்டாயிற்று. அவ்வொலியால் தேவர்களனைவரும் மிகவும் நடுக்குற்றனர். பிரஹ்மாண்டமெல்லாம் பொடிப்பொடியாய்ப் போயிற்று. பூமியும் அப்பொழுது கம்பமாயிற்று. சமுத்திரமும் கரைபுரண்டது. நீர்வாழுயிர்களும் அச்சமுற்றன. அப்படியே காற்றும்வேகமாக வீசிற்று. பர்வதங்களு நடுங்கிற்று. இனிவரப்போகின்ற துக்கத்தைச் சூசிப்பிக்கின்ற அழற்கொள்ளிகளான மகோத்பாதங்களும் உண்டாயின திக்குகளெல்லாம் மிகவுங் கோரதரங்களாக ஆயின சூரியனும் அத்தமனம் அடைந்தவன் போலாயினன். அச்சமயத்தில் தேவர்களனைவரும் இத்தன்மையான இத் தீயநாளில் என்னவரப்போகின்றனவோ வென்று சிந்தாகுலமடைந்தனர். ஓ முநிவர்களே! தேவர்களெல்லாம் இவ்வாறு மனக்கவலை யுற்றிருக்கு மளவில் விஷ்ணுவினுடைய மகுட குண்டலங்களோடுகூடிய சிரம் அறுபட்டுப் போனவிடந்தெரியாமற் போயிற்று.

(ருக-ருரு) அப்பொழுது கோரமான அந்தகாரம் (சிறிது) நீங்கிற்று. நீங்கியவுடனே பிரமருத்திர ரிருவரும் அழகு குறைந்ததும் சிரமற்றதுமான சரீரத்தைக் கண்டனர். தேவர்களும் அந்த விஷ்ணுவினுடைய கபந்தமாயிருக்கின்ற சரீரத்தைக்கண்டு ஹா! ஹா! என்று ஆச்சரியமடைந்து துன்பக்கடலில் மூழ்கி சோகத்தாற் பீடிக்கப்பட்டவர்களாய்க் கூ கூ வென்று பேரொலியிட்டு அழுதனர். ஆ! நாதா! இது வென்ன! ஓ! பிரபோ! மனிதர்களால் கணிக்கக்கூடாத அத்யத்புதமான செய்கையாயிருக்கின்றதே! ஓ

அநாதியான தேவதேவனே! இது தேவர்களனைவர்க்கும் இம்சையைத்தருகின்றது. உம்முடைய சிரமானது எதனால் அபகரிக்கப்பட்டது. இது. எந்தத் தெய்வத்தினுடைய மாயை? நீர் ஒருவராலுஞ் சேதிக்கப்படாதவராயிற்றே. ஓ விஷ்ணுவே! நீரே இந்தக் கதியை யடைவீரானால் இனித் தேவர்களும் மரணமடைவதுதான் கதி, ஆகையால் உம்மிடத்தில் எப்படிப்பட்ட சிநேகமுமில்லை. இப்பொழுது எங்களுடைய காரியத்தினாலேயே யாங்கள் * துன்பப்படுகின்றோம்.

(௩௬-௩௯) இந்தத்தீங்கு† அசுரநால் செய்யப்பட்டதுமன்று· இராக்கதரால் செய்யப்பட்டதுமன்று. தேவர்களாகிய எங்களாலேயே செய்யப்பட்டது. ஓ! ரமாபதி! இதற்கு யாரைப்பழிப்பது? பிரமனைப்பழிப்பதனாற் பயனென்னை? தேவர்களெல்லாம் பராதீனர்களானார்கள். அதற்கு என்செய்வோம். மூடர்களான தேவர்களுக்கு இனிப் பாதுகாப்பு ஒரு சிறிதுமில்லை. இப்பொழுது எந்தமாயையினால் உமது சிரம் சேதிக்கப்பட்டதோ, அந்தமாயை சாத்வீககுணமுடையதுமன்று, இராஜசகுண முடையதுமன்று, தாமசகுணமுடையதுமன்று, சகத்குருவாகிய ஈசனுடைய மாயையேயாம் என்றனர்.

(௪0-௪௩) என்றிவ்வண்ணம் பலவாறாக வெண்ணிப்புலம்பிக் கொண்டிருக்கும் சிவப்புரோகமர்க (பரமசிவனை முன்னிட்டவர்க) ளான தேவர்களை வேதவித்தமரான பிரகஸ்பதி துக்கோபசமனஞ் செய்து கூறத்தொடங்கினர்:—தேவர்காள்! நீங்கள் துக்கிப்பதினாலேயுங் கூக்குரலிட்டழுவதினாலேயும் பிரயோஜனமென்ன? எக்காலத்தில் எதுபுத்திக்கு கோசரிக்கின்றதோ அதனை அக்காலத்துக்குரிய உபாயமென்றெண்ணிச் செய்யவேண்டும். ஓ தேவேசனே! உலகில் தெய்வப்பிரயத்தனம் புருஷப்பிரயத்தனமெனவிரண்டு கூறுவர். அவ்விரண்டும் ஒப்பானவை. ஆகலான் புருஷன்

---

* ஈண்டு யாங்கள் எங்களுடைய பிரயோசனத்தை (நஷ்டத்தை) நாடித்துன்பமடைகின்றோம் எனவும், அன்று எங்களுடைய பிரயோசனத்தை எண்ணாமல் பிரிவாற்றாமையை எண்ணித் துன்பமடைகின்றோம் எனவும், அன்றி எங்கள்பிரயோசனத்தைப்பற்றிச் சிறிதுந்துன்பப்படவே மாட்டோம் யாம்செய்த இக்காரியமே துன்பத்தை விளைவித்தது எனவும் பொருள்கொள்க.

† சுரர்பேதம் அசுரர், அசுரர்பேதம் இராக்கதர்.

பிரயத்தனஞ் செய்வானாயின் அப்பிரயத்தனத்தினா லடையும் பயனை எவ்வகையிலாயினும் கூட்டிமுடித்தல் தெய்வப்பிரயத்தனம், எனவே, தெய்வமாகிய ஈஸ்வரனுடைய பிரேரேபணையன்றித் தெய்வமாகிய வினையின் முயர்ச்சி புருஷனிடத்தில் நிகழமாட்டாது. அவ்வினையான்வரும் முயற்சியன்றி புருஷப்பிரயத்தனமும் முடிவுபெறாது. ஆகலான் வினை காரணமாகவரு முயற்சியும் அம் முயற்சியளவாகச்செய்யும் புருஷப்பிரயத்தனமும் ஆகிய இவ்விரண்டும் தெய்வமாகிய ஈஸ்வரனுடைய செயலாகவே எண்ணி நீ செய்வாயென்ன, இந்திரன் தனது குருவை நோக்கி ஆசிரியரே! தேவரீர் கூறியவற்றுள் தெய்வப்பிரயத்தனமும் மனுஷப்பிரயத்தனமும் ஒன்றென்பது ஒப்பத்தகுந்ததன்று. ஆகலான் இருவகைப் பிரயத்தனங்களுள் தெய்வப் பிரயத்தனத்தையே முதன்மையாக வெண்ணுகிறேன். அனர்த்தத்தை விளக்கும்படியான. பௌருஷ (புருஷப்பிரயத்தனத்தை) திக்சுடும். (தள்ளும்) எனெனின் தேவர்கள் பார்த்துக்கொண்டிருக்கிற பொழுதே விஷ்ணுவினுடைய சிரம் அறுபட்டுப்போயிற்றே. இதில் புருஷப் பிரயத்தனமும் தெய்வப்பிரயத்தனமும் ஒத்திருக்குமாயின் அறுபடுமா? என்றனன். அப்பொழுதுபிரமதேவன் கூறுகின்றான்:—காலத்தினால் எந்தவினை பிரேரேபிக்கப்படுகின்றதோ. அதனால் வருவது நன்மை தீமைஎன்னும் இரண்டு பகுப்பினையுடையது. அவ்விரண்டும் முயர்ச்சிஎன்னுங்கருவியால் அனுபவத்திற்கு வருவது உண்மையாதலால் அவ்விரண்டையும் அவசியம் அனுபவித்தே தீரவேண்டும். தெய்வச்செயலை எவன்றான் அதிக்கிரமிப்பான்.

(சச-௫0) சரீரமெடுத்தனன் சுகதுக்கங்களை அனுபவிக்கின்றவனாகவே ஆகிறான் இதிலையமில்லை. எங்ஙனமெனின் முன் காலவசத்தினால் (என்னறிவுகெட) அதுகண்டசிவனார் என்றலையைக் கிள்ளினர். அப்படியே, பிரகஸ்பதியினுடையசாபத்தினால் சந்திரன் க்ஷயரோக முடையவனாயினன். சசிதேவியினுடைய பதியாகிய இந்திரனும் (கவுதமர்சாபத்தினால்) ஆயிரம்யோனிகளை யடையவும் அதுபோலவே, ஒருக்கால் அகத்தியமுனிவர் சாபத்தினால் சுவர்க்கத்தினின்றுந் தவறிப் பூமியில் விழவும் பிரஹ்ம ஹத்தியினால் பீடிக்கப்பட்டு மானத-தடாகத்திலுள்ள தாமரை நாளத்தில் வசித்திருக்கவுமாயினன். அதுபோலவே இப்பொழுது விஷ்ணுமூர்த்தியினுடைய சிரமும் உப்புக்கடலிற்போய்விழுந்தது. இவையெல்லாந் தெய்வத்தின் செயலேயன்றோ! (அதனைக்கடப்பது)

கஷ்டம். என்றுகூறிப் பின்னர் தேவர்களைப்பார்த்து ஓ தேவர்களே இவர்களனைவரும் எப்பொழுதும் மாறிமாறித் துன்பத்தை அனுபவிக்கின்றவர்களாகவே யிருக்கின்றார்கள். ஆகையால் இத்தேகமாகிய சமுசாரத்தினால் எவர்தான் துன்பம் அனுபவிக்காமலிருக்கின்றனர். ஆகவே நீங்கள் விசனப்படுவதை விட்டொழியுங்கள். மஹாமாயை எனவும், வித்யை யெனவும், தேவி எனவும், சநாதநி எனவும், பிரசித்திபெற்ற நாரணியைத் தியானஞ்செய்யுங்கள். நிர்க்குணமாயும் பிரகிருதியாயும் உள்ள அப்பரதேவதை நம்மது அபீஷ்டத்தை நிறைவேற்றுவள். சராசரமாயுள்ள இந்தமூன்றுலகமும் எந்தப் பகவதியினாலே வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ, அப்படிப்பட்ட பிரஹ்மவித்தையாயும், சகத் சிருஷ்டிகர்த்தையாயும், யாவருக்கும் மாதாவாயும் இருக்கின்ற பகவதியைத் தியானஞ்செய்யுங்கள் என்றனன். இவ்வாறு பிரமதேவன் தேவர்களைநோக்கிக் கூறிப் பின்னர் தேவகாரிய சித்தியின்பொருட்டு நான்கு வேதங்களும் தேகவுருவோடு கூடினவைகளாக எதிரில் வந்திருக்கும்படிக் கட்டளையிட்டனர். அவைகளும் அப்படியேவந்தன.

(ருக-ருஉ) பிரமன் அந்த வேதபுருஷர்களைப்பார்த்து பிரஹ்மவித்தையாயும், சநாதநியாயும், * மறைக்கும்படியான அங்கங்களையுடையவளாயும், மஹாமாயையாயும், சர்வகாரியங்களையுஞ் சாதிக்கும்வல்லமை யுடையவளாயும் இருக்கின்ற பரதேவதையைத் தோத்திரஞ் செய்யுங்கள் என்று கூற பிரஹ்ம தேவருடைய வசனத்தை வேதபுருஷர்கள்கேட்டு மிகவுஞ் சவுந்தரியமான அங்கங்களுடையவளாயும் ஜ்ஞானத்தினால் அறியப் பட்டவளாயும், மாயாசொரூபியாயும், சகத்துக்குள் இருப்பவளாயும் விளங்காநின்ற அக்காரணியைத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினர்:—

## வேதங்கள்செய்யுந் தோத்திரம்.

ஹே! அம்பிகே! ஹே! மஹாமாயே! ஹே! விஸ்வோற்பத்திகரே! (பிரபஞ்சோற்பத்தி காரியங்களைச் செய்கின்றவளே!) ஹே! சிவே, நிர்க்குணே, ஹே! மாத, சங்காரகாமதே, (சங்கரனுக்குக் காமந்தருகின்றவளே.) நீ எல்லாபூதமயமாயிருக்கின்றாய். உனக்கு வந்தனம். நீ எல்லாபூதங்களுக்கும் ஆதாரை, பிராணிகளுக்கெல்

---

* தேவியினது அக்ஷரசொரூபமாயிருக்கின்ற பிரமவித்தையும் மறைக்கத்தக்கது. சிருஷ்டி நித்தம்கொவளும் சரீராங்கமும் மறைக்கத்தக்கது ஆகலான்மறைக்கும்படியான அங்கங்களையுடையளென்று மறைக்கும்படியான அங்கங்களையுடையளென்று கூறியதென்க.

லாம் பிராணே, அப்படியே, † தீ, ஸ்ரீ, காந்தி, க்ஷமை, சாந்தை, சிரத்தை, மேதை, த்ருதி, ஸ்மிருதி, என்று சொல்லப்பட்ட நவ சக்தி சொரூபை என்று துதிக்கப்பட்டவளாயும் இருக்கின்றாய். அன்றியும் அக்ஷரசங்கியையில் கணிக்கப்பட்ட அர்த்தமாத்திரையாயும், காயத்திரியாயும், வியாஹ்ருதி (மந்திரவிசேஷை) யாயும், அப்படியே ஜயையாயும், விஜயையாயும், § தாத்ரியாயும், லஜ்ஜையாயும், கீர்த்தியாயும், ஆசையாயும் தயையாயும் இருக்கின்றாய். ஹே அம்பா! உன்னை மூன்றுலகங்களையும் படைத்துக் காக்கின்றவளெனவும், தயாரசத்தோடு கூடினவளெனவும், ஜனங்களுக்கு ஜநநி எனவும், வித்தை சிவை எனவும், எல்லா வுலகங்களுக்கும் ஹிதை எனவும், வரேண்யை (வரிப்பதற்கு யோக்யை) எனவும், மந்திர பீஜங்களிடத்தில் வாசஞ்செய்வதில் நிபுணை எனவும் ஜன்மத்துக்கு நாசத்தைச் செய்கிறவளெனவுந் துதிக்கின்றோம்.

(௫எ-௬0)* (ஹே தேவீ) பிரமன் அரன் அரி இந்திரன்வாயு அக்நி சூரியன் ஆகிய இவர்களெல்லாரும் புவனங்களுக்கு அதிகாரிகளாயினும் இவர்கள் உன்னுஜ்ஞையினாலே யாதும் செய்துவருகின்றனர் ஆகலானும் நீ ஸ்திரமான ஜங்கமங்களுக்கு மாதா ஆகின்றமையானும் இவர்கள் முதன்மையான கர்த்தாக்களாக மாட்டார். அன்றியும் நீ எப்பொழுது இவ்வுலகமனைத்தையும் படைப்பதற்கு இச்சிக்கின்றனையோ அப்பொழுதே ஹே! ஜநநி! பிரஹ்ம விஷ்ணு உருத்திரர் முதலிய தேவர்களைப்படைத்து அவர்களால் சிருஷ்டி ஸ்திதி லயாதி கிருத்தியங்களைச் செய்விக்கின்றாய். ஹேதேவீ! (அங்ஙனஞ்செய்விக்கின்ற ‡ அத்தொழில்களால்) உனக்குச் சம்சாரபந்தம் ஒரு சிறிதுமில்லை. ஒருவடிவமா

---

† தீ-புத்தி, ஸ்ரீ-சம்பத்து. மேதை-ஞானம், த்ருதி-தைரியம், ஸ்மிருதி-சித்தம். வினைய வெளிப்படை. § தாத்ரி-சிருஷ்டிகர்த்தை. * இதனால் "தச்சனாலாகிய கோயில்" என்பதுபோல் பிரமனாதியரால் சிருஷ்டியாதிதொழில் நிகழ்தலால் (நமுக்யா:-முக்யமான கர்த்தர்களாகார்) எனவே எவுதற் கர்த்தாக்களாகார். ஆகவே இவரெல்லாம் இயற்றுதற் கர்த்தாக்களே யாவரெனவும், அம்பிகையோ "அரசனாலாகிய கோயில்" என்பதுபோல பிரமனாதியரைச் சிருட்டியாதி தொழில்களில் ஏவும் எல்லா வுயிர்களுக்கும் நிலைபான மாதாவாய் நிற்றலான் ஏவுதற்கர்த்தா எனவுங் குறித்தமை காண்க. ‡ தொழில்களால் சம்சாரபந்தமில்லை என்றது—அவைகளை அருளால் செய்கின்றவளெனவும், ஒருவடிவமாகவே இருக்கின்றாள் என்றது—கன்மமல மில்லாதவளெனவுங் குறித்தற் கென்க.

கவே யிருக்கின்றாய் இதனால் சகலபுவனத்தினும் உனது சொரூபத்தை அறிவதற்கு ஒருவரும் சக்தராகார். அதுபோலவே உன்னுடைய நாமசங்கியைகளை எடுத்துச் சொல்வதற்குஞ் சமர்த்தரானபுருடர் ஒருவருமில்லை, ஏனெனின் அல்பமான ஜலத்தைத் தாண்டுவதற்குக் கூடாதவொருவன் கரையில்லாத சமுத்திரத்தைக் கடப்பதற்குச் சாதுர்ய முடையவனாக எப்படியாவான். ஹே பகவதி ! உனது மகிமையை இவ்வுலகிலேனும் தேவசமூகத்திலேனும் ஒருவரும் அறியமாட்டார். ஹே! ஜநநி! நீ ஒருருவாகவேயிருக்கின்றாய். அப்படி ஒருருவாகவே யிருந்தும் * இல்லையாய்ப்போகின்ற இப்பிரபஞ்சமனைத்தையும் எவ்வாறு படைக்கின்றனை? ஹே தேவி! இவ்விஷயத்தில் வேதவசனமும் பிரமாணமாகக் கூறப்படுகிறது.

(௩௧-௩௩)நீ ஆசையற்றவளாகவே யிருந்தும் எல்லாவுலகங்களுக்குங் காரணமாக இருக்கின்றாய். இது மிக்க ஆச்சரியம்! ஹே பகவதி ! உனது சரித்திரம் விசித்திரமானது. எங்களுடைய மனம் இவ்விஷயத்தில் கலக்கமுறுகின்றது. சகல வேதங்களுடைய அந்தத்தினாலும் அறியக்கூடாத மகிமையையுடைய உனது பாதத்துவத்தை நீயும் அறியமாட்டாய். ஹே ஜநநி! நீ விஷ்ணுவினுடைய சிரம் அறுபட்டுச் சிதறிப்போனதை அறியமாட்டாயா? ஹேசிவே! விஷ்ணுவினுடைய இவ்வளவு எளிமையான சக்தியை அறியாமல் எதையறியப்போகின்றாய். ஹே அம்பா! விஷ்ணுவினுடைய பலிஷ்டமான பாவக்கூட்டம் இதுதானோ? ஹே ஜநநி! உன்னுடைய பாதபத்மத்தில் தியானநிபுணரா யிருக்கின்றவரிடத்தில் பாவம் எப்படியிருக்கும்? தேவஸமூகத்தினிடத்தில் பிரியமுள்ள உனக்கு மிகவுங்குடிலமான இத்தகைய உபேக்ஷை எற்றுக்கு? மிகவும் ஆச்சரியகரமான விஷ்ணுவினுடைய சிரோநாசமானது உனக்குச் சம்மதம்போலும். ஹே அம்பா! இதனால் நீ சரீரச்சேதஞ்செய்வதில் மிகவுஞ் சாமார்த்தியமுடையவள் என்று எண்ணப்படுகின்றாய். இதும் பெருந்துக்கம்! சிரசை ஒன்றுசேர்ப்பதில் நீ காலதாமதஞ்செய்வது எப்படி சகிக்கத்தக்கது? அறியோம்.

---

* பிரபஞ்சம் இல்லை என்று சொல்லும்படி நாமரூபங்களழிந்து மாயையிலொடுக்கி யிருத்தலை முன்னுள்ளவாறு தோன்றத் தேவிசங்கற்பிக்கின்றன ளாதலால் இல்லையாய்ப்போகின்ற இப்பிரபஞ்ச மனைத்தையும் எவ்வாறுதான் படைக்கின்றனை என்று வியந்ததென்க.

ஹே தேவி! உனது சித்தத்தில் எல்லாத்தேவர்களுந் தாபத்தைத் தரும்படியான தோஷமியற்றுதற்கு இன்றுதான் அறிந்தனேயோ? அன்றி யுத்தத்தினல் விளைந்த சொல்லுதற்கரிதான விஷ்ணுவினுடைய அகங்காரமே வேகமாய்ச் சேதிப்பதற்குச் சத்தியுடையதாயிற்றோ? ஹே அம்பா! உனது மஹிமாவிலாசத்தை யாங்கள் அறியவேமாட்டோம். * ஹேபவாநீ! இப்பொழுது அவ்விஷ்ணுவினுடைய சிரம் மிகவும் ரம்மியமான தீர்த்தப்பிரதேசத்தில் கோரமான தவஞ்செய்து உன்னிடத்தில் வரம்பெற்றவரும் அவ்விஷ்ணுவினல் யுத்தத்தில் ஜெயிக்கப்பட்டவருமான அசுரர்களால் மறைந்துபோகும்படிச் செய்விக்கப்பட்டதா? இப்படி தலையற்றுப்போன வாசுதேவனைப் பார்ப்பது அவர்களுக்கு இது ஒரு விநோதமா?

(௬௬-௭0) முதன்மையானவளே! அன்றியும் நீ சமுத்திர ராஜனுக்குப் புத்ரியான இலக்ஷ்மியினிடத்தில் கோபங்கொண்டனையே இல்லையாயின் இந்த இலக்ஷ்மியை நாதனற்றவளாகப் பார்க்கின்றது எற்றுக்கோ? அக்கமலாசினி உனக்கு ஏதேனும் அபராதஞ் செய்திருப்பாளாயின் அவள் உனது அம்ஸத்தினின்றும் உண்டானவளாகலின் அவளுடைய அபராதம் பொறுக்கத் தக்கதன்றோ? இனி என் விண்ணப்பத்தையேற்று இந்த விஷ்ணுவை எழுப்பி ஸ்ரீதேவியைச் சந்தோஷப்படுத்தும்படியாகச் செய்வது ஆவசியம். ஹே சகலாதிநாதை! இந்த இலக்ஷ்மியேயல்லாமல் இந்தத்தேவர்களுந் துக்கசாகரத்தில் மூழ்கியிருக்கின்றனர். இவர்களோ காரியங்களில் முதன்மையானவராயும் பிரசித்தமான பிரபாவத்தையுடையவராயும் இருக்கின்றவர். உன்னை எப்பொழுதும் நமஸ்கரித்துக்கொண்டும் இருக்கின்றவர். ஆகையால் இவரனைவர்க்கும் நாதனாய் விளங்காநின்ற விஷ்ணுமூர்த்தியை எழுந்திருக்கச்செய்து அவர்களைத் துக்கசாகரத்தினின்றுங் கரையேற்றுவாயாக. ஹே தேவி! விஷ்ணுவினுடைய சிரம் எவ்விடஞ் சென்றதோ அறியோம்; இப்பொழுது அவனைப் பிழைப்பிக்கும் உபாயம் யாங்கள் வேறொன்றையும் அறிந்திலம். நீயோ எப்படி அமிர்தமானது தேவர்களைச் சீவிக்கச்செய்யுந் தொழிலில் ஆற்றலுடையதோ, அப்படியே உலகத்திற்குப் பிராணனைக் கொடுக்குந்தொழிலில் ஆற்றலுடையவள். இவ்வண்ணஞ் சரீரத்தோடு

* பவன்-சிவன். பவாநி-சிவனுடைய பத்நி

வெளிவந்த வேதாகமங்கள் குணதீதையாயும் மஹா மாயாசொரு பையாயும் உள்ள மஹாதேவியைத் துதிக்க, அத்தேவி பிரசன்னை யாய் ஆகாயத்திற்றேன்றி இனிய வோசையால் ஜனங்களுக்கு ஆனந்தத்தைத் தருவதும் சுபகாமுமான அசரீரிவாக்கால் அந்தத் தேவர்களை நோக்கிக் கூறுகின்றுள்.

(எக—அக) ஓதேவர்காள்! நீங்கள் துன்பப்படவேண்டாம். அமரர்களே! ஸ்வஸ்தமாக இருங்கள். வேதங்கள் என்னைத் துதித் தன. அதனுல் சந்தோஷமடைந்தேன். இதில் சம்சயமில்லை. இந்த மானிடப் பிரபஞ்சத்தில் எந்தப்புருஷன் என் சம்மந்தமான அத் *துதியை எப்பொழுதும் பக்தியோடு தோத்திரஞ்செய்கின்றுனே

---

* நமோதேவீ மஹாமாயே விஶ்வோத்பத்தி கரேசிவே
நிர்க்குணே சர்வபூதேஷி மாதச் சங்கரகாமதே. (௫௩)
த்வம்பூமிஸ் ஸர்வபூதாநாம் ப்ராண: ப்ராணவதாம் ததா
தீ:ஸ்ரீ:காந்தீ: க்ஷமா சாந்தி:ஶ்ரத்தா மேதா த்ருதி: ஸ்மிருதி: (௫௪)
த்வமுத் கீதோர்த்த மாத்ராஸி காயத்திரீ வ்யாஹ்ருதி ஸ்ததா
ஜயாச விஜயாதாத்ரீ லஜ்ஜா கீர்த்தி ஸ்புருஹாதயா. (௫௫)
த்வாம் ஸமஸ்து மோம்ப புவன த்ரயஸம்விதாந
தக்ஷாந்தயார ஸயுதாம் ஜநநீம் ஜநாநம்
வித்யாம் யிவாம் ஸகலலோக ஹிதாம்வரேண்யாம்
வாக்பீஜ வாஸ நிபுணம் பவநாசகர்த்ரீம். (௫௬)
ப்ரஹ்மா ஹரஶ்ஶௌரி ஸகஸ்ரநேத்ர
வாக்வந்நி சூர்யா புவநாதிநாதா:,
தேத்வத் க்ருதாஸ் ஸந்தி ததோநமுக்யா
மாதாயத ஸ்த்வம் ஸ்திர ஜங்கமாநாம். (௫௭)
சகலபுவனமேதத் கர்த்து காமாயதாத்வம்
ஸ்ருஜஸி ஜநநி தேவாந் விஷ்ணுருத்ராஜ முக்யாந்
ஸ்திதிலயஜநநம்தை: காரய ஸ்யேக ரூபா
நகலு தவகதம் சித்தேவிஸம்ஸாரலேச: (௫௮)
நதேரூபம் வேத்தும் ஸகலபுவநே கோபிநிபுணோ
நநாம்னும் ஸங்கியாந்தே கதிதுமிஹ யோயோஸ்தி புருஷ:
யதல்பம் கீலாலம் கலயது மசக்த: ஸதுநர:
கதம் பராவாரா கலநசதுர ஸ்யா த்ருதமதி: (௫௯)
நதேவானும் மத்யே பகவதிதவாநந்த விபவம்
விஜாநாத்யே கோபி த்வமிஹ புவநை காஸிஜநநி
கதம் மித்யா விஶ்வம் ஸகல மபிசைகார சயஸீ
ப்ரமாணந் த்வே தஸ்மிந் நிகம வசனம் தேவி விஹிதம். (௬௦)
நிரீஹை வாஸித்வம் நிகிலஜகதாம் காரணமஹோ
சரித்ரந்தே சித்ரம் பகவதி மநோநோ வ்யதயதி

அவன் எல்லா அபீஷ்டங்களேயு மடைவன். எந்தப்புருஷன் மூன்றுகாலத்திலும் பக்தியோடு எனது சம்பந்தமான இந்த ஸ்தோத்திரத்தைத் தவருமற் கேட்கின்ருனே, அப்புருடன் துக்கத்தினின்று நீங்கினவனும் சுகமடைந்தவனும் ஆகின்றனன், இத்தோத்திரம் வேதத்தினல் சொல்லப்பட்டபடியால் வேதத்துக்கொப்பானதாம். இனி எக்காரணத்தினல் விஷ்ணுவினுடைய சிரம் அறுபட்டுப் போயிற்ரு அக்காரணத்தை இப்பொழுது கேளுங்கள். சம்சாரமாகிய இந்தப்பிரபஞ்சத்தில் ஒருவருக்கும் ஒருகாரணமன்றியில் நன்மை தீமையாகிய காரியங்கள் எப்படிச் சம்பவிக்கும். ஒர்கால

---

கதம் காரம் வாச்யஸ் ஸகல நிகமா கோசரகுண
பிரபாவம் ஸ்வயஸ்மாத் ஸ்வயமபி நஜாநாவஸீ பரமம். (சுக)

நகிஜாநந வித்வம் ஜநநி மதுஜின் மவுளிபதனம்
சிவேகிம்வா ஜ்ஞாத்வா விவிதிஷஸி ஸக்திம் மதுஜித:
ஹரே: கிம்வா மாதுர்த்துரித ததியோஷாபலவதீ
பவத்யா: பாதாப்ஜே பஜனநிபுணே காஸ்த்விதுரிதம். (சுஉ)

உபேக்ஷா கிம்ஞேயம் தவஸுர ஸமூஹேதி விஷமா
ஹரோமூர்த்னோ நாசோ மதமிஹ மஹாஸ்சர்ய ஜனகம்
மஹாதுக்கம் மாதஸ் த்வமஸி ஜனனச் சேதகுசலா
நஜாநீமோ மவுளேர் விகட நவிலம்ப: கதமபூத். (சுங)

ஜ்ஞாத்வா தோஷம் ஸகலஸுரதா பாதிதம் தேவிசித்தே
கிம்வா விஷ்ணு வமரஜனிதம் துஷ்கிருதம் பாதிதந்தே
விஷ்ண்வோர் வாகிம் ஸமரஜநித: கோபிகர்வோதி வேகார்ச்
சேத்தும் மாதஸ் தவவிலஸி தம்நைவ வித்மோத்ர பாவம். (சுச)

கிம்வா தைத்யை ஸ்ஸமரவிஜிதை ஸ்தீர்த்ததேசே ஸுரம்யே
கோரம் தப்த்வா பகவதிபரம் லப்தவத் பிர் பவத்யா:
அந்தர்த்தானம் கமிதமதுநா விஷ்ணுசீர்ஷம் பவாநி
த்ரஷ்டம் கிம்வா விகதசிரஸம் வாஸுதேவம்ஸ்நோத:. (சுரு)

விந்தோ: புத்ரியாத் ரோஷிதாம் கிந்த்வமாத்யே
கஸ்மா தேநாம் பிரேக்ஷஸே நாதஹீநாம்
க்ஷந்தவ்யஸ்தே ஸ்வாசத்ஜாதா பராதோ
வ்யுத்தா ஷ்யைநம் மோதிதாம் மாம்குருஷ்வ. (சுசு)

ஏதே ஸுராஸ்த்வாம் ஸததம் நமந்தி
கார்யேஷுமுக்யா: ப்ரதித ப்ரபாவா:
சோகார்ணவாத்தா ரயதேவிதாவாந்
உத்தாப்பிய தேவம் சுகலாதி நாதம். (சுஎ)

மூர்த்வா கத:க்வாம் பஹரேர் நவித்மோ
நான்யோஸ்துபாய: கலிஜீவநேத்ய
யதாஸுதா ஜீவன கர்மதக்ஷா
ததா ஜகஜ்ஜீவித தாசிதேவி. (சுஅ)

த்தில் விஷ்ணுமூர்த்தி, சமுத்திரராஜபுத்திரியும் தன்சமீபத்தில் நிலைபெற்றிருப்பவளும் பிரியதமையுமாகிய இலக்ஷ்மியினுடைய மனோரம்யமான முகத்தைப்பார்த்து இகழ்ந்துகூறினர். இலக்ஷ்மிதேவி, பிரபுவானபதி நம்மைப்பார்த்து ஏன்பரிகாசஞ் செய்கின்றார்? நமதுமுகம் யாதுகாரணத்தினால் அவருக்கு விரூபமாக (அழகில்லாததாகக்) காணப்பட்டது? அது நம்மாலறியப்படவில்லை; இதுவுண்மை ஆயினும், காரணமில்லாமல் நம்மைப் பரிகாசஞ்செய்தற்கு ஏது வென்னை? நம்மிலுஞ் சிறந்த சுந்தரமுடைய வேறொரு காமக்கிழத்தியை இப்படி நம்மைச் செய்யும்படிச்சொல்லியிருக்கவேண்டும் என்றுலோசித்துக் கோபங்கொண்டு தமோகுணப் பிரதானையாயினள். அப்போது தாமஸசக்தியும் அவளது தேகத்தில் வியாபித்தது. மிகவுங்கொரமான தாமஸசத்தி அந்த இலக்ஷ்மிதேகத்தில் வியாபித்ததை ஆராயுங்கால் யாதோவொரு காலத்தில் தேவகாரியசித்தி யுண்டாகும் பொருட்டென்றே நிச்சயிக்கவேண்டும். (இதுநிற்க) பின்னர் அந்த ஸ்ரீதேவி தாமஸ சக்தியினால் கவரப்பட்ட தேகத்தையுடையவளாய் மிகவும் உக்கிராவேசங்கொண்டு திருமாலைநோக்கி உன்னுடைய தலை அற்றுப்போகக்கடவது என்கிற இக்கடுஞ்சொல்லைக் கோபமிகுதியினால் நாத்தழுதழுத்துக் கூறினள்.

(அஉ-அரு) அந்தோ * வைதவ்யத்தினால்வருந் துக்கத்தைக் காட்டிலும் காமக்கிழத்தியினால் வருந்துக்கம் மிகவும் கொடுமையானதென்றெண்ணித் தாமஸசத்தியின் சம்பந்தத்தினால் இவ்வாறுகூறினள். எனவே இலக்ஷ்மிதேவி, நாம்சாபம் இடுவோமாயின் பதியை யிழக்க வருமே, அதுவருமாயின் சுகத்துக்கழிவும் அமங்கலத்வமும் உண்டாகுமே என்கிற எண்ணங்கொள்ளாமல் மாற்றாளிடத்துக்கொண்ட பகையினால் தன்கணவன் அவளுக்கு உதவாமற் போகவேண்டுமென்கிற எண்ணத்தையே பெரிதாகக் கொண்டனள். ஓ முனிவர்களே! ஸ்திரீகளுக்கு மூர்க்கத்தன்மையும் தயையின்மையும் பேராசையும் ஆசாரமின்மையும் அசத்தியம் பேசுவதும் சாஹசஞ்செய்வதும் மாய வித்தை காட்டுவதும் ஆகிய இவைகளெல்லாம் இயற்கையாயுண்டாகுந்

---

* - வைதவ்யம்-தவ- பதி, வி-இல்லாதது, ஆகவே விதவை-பதியில்லாதவள். பதியற்றதன்மையை வைதவ்யம் எனவே-அமாங்கல்யம்.

தோஷகுணங்களாம். (இதுநிற்க) விஷ்ணுமூர்த்திக்கு சாபம்வந்த காரணத்தைக்கூறிய பின்னர் தேவி தேவர்களை நோக்கி ஒ தேவர்காள்! இந்த விஷ்ணுவினுடைய தலை உப்புக்கடலில் ஆழ்ந்து போயிற்று. இப்பொழுது அந்த வாசுதேவனைச் சிரத்தோடு கூடினவனகச் செய்கின்றேன். இதுவன்றியும் வேறொரு காரணம் இருக்கின்றது. அதனால் உங்களுக்கு மஹத்தான கார்யானுகூலம் உண்டாகப்போகிறது; இதிலையமில்லை.

(அ௯-௯௦) முன்னொருகாலத்தில் மஹாபாகுவும் (பெருந்தோளனும்) ஹயக்ரீவனென்று பிரசித்திபெற்றவனுமான ஒரசுரன் சரஸ்வதீ நதிக்கரையில் மிகக்கடினமான தவஞ்செய்திருந்தனன். அவ்வசுரன் ஆகாரமில்லாதவனும், ஜிதாத்மாவாயும், எல்லாப்போகங்களையும் வர்ஜித்தவனும், எனதுமாயா பீஜாத்மகமான ஏகாக்ஷர மந்திரத்தை ஜபித்தவனும் சர்வாபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட எனது தாமஸசத்தியைத் தியானித்தவனும் ஆயிரம் வருஷங் கோரமான தவஞ்செய்துவந்தனன். அப்பொழுது அவனுடைகண்ணுக்கெதிரில் அவ்வசுரனல் எவ்வாறு தியானிக்கப்பட்டேனே அவ்வாறே அத்தகைய தாமசவுருவங்கொண்டு யான் சிம்ஹவாகனரூடையாய் அவனிடத்தில் கருணையுடையவளாய் அவன்முன்னே தோன்றி ஒ மகாபாக்கியவந்தனே! விரதசீலனே! நீ விரும்பிய வரத்தைக்கேட்பாய் அதை உனக்குத் தருகின்றேன் என்று கூறினேன்.

(௯௧ ௯௮) அவன் என்னுடைய இனியவசனத்தைக்கேட்டு சந்தோஷ பூரிதனய் அதிசீக்கிரத்தில் பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து எனது அத்புதரூபத்தைகண்டு பிரேமையினல் மலர்ந்த கண்களை யுடையவனய் சந்தோஷத்தினல் ஆனந்தக்கண்ணீர் பெருகத் துதிக்கத்தொடங்கினன்:- * ஹே தேவி! மஹாமாயே! சிருஷ்டிஸ்திதி சம்ஹாரகாரணீ! பக்தர்களுக்கு அனுக்ரஹஞ் செய்வதில் சாமர்த்திய முடையவளே! அபீஷ்டத்தைத் தரு

* நமோ தேவ்யை மஹாமாயே ஸ்ருஷ்டி ஸ்திதியந்த காரணி
பக்தாநுக்ரஹ சதுரே காமதே மோக்ஷதே சிவே. (௯௩)
தராம்புதேஜ: பவன கபஞ்சா நாஞ்ச சாரணம்
த்வங்கந்த ரஸரூபாணும் காரண ஸ்பரஸ சப்தயோ: (௯௪)
க்ராணஞ்ச ரஸநாசக்ஷு ஸ்த்வக் சுரோத் மிந்திரியாணிச
கர்மேந்திரியாணி சாங்யாதி த்வத்தஸ் ஸர்வம் மஹேஸ்வரி. (௯௫)

பவளே! மோக்ஷத்தைக் கொடுக்கின்றவளே! உனக்கு வந்தனம். பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் ஆகிய பஞ்சபூதங்களுக்கும் கந்தரசரூப ஸ்பரிச சப்தங்களுக்கும் நீயேகாரணி. ஆக்ராணம் ஜிஹ்வை சக்ஷு துவக்கு சுரோத்திரம் ஆகிய ஞானேந்திரிய பஞ்சகங்களும் இவைகட்கு வேறான வாக் பாதபாணி பாயுரு உபஸ்தங்களென்னும் கன்மேந்திரியங்களும் ஆகிய இவைகளெல்லாம் உன்னிடத்திலிருந்தே வெளியாகின்றன என்று தோத்திரஞ் செய்தனன். யான் அவனைப்பார்த்து உனது பத்தியினாலும் அத்புதமான தவத்தினாலும் ஆனந்தமடைந்தேன். உனக்கு அபீஷ்டமான வரம் யாது சொல்வாய்? எதை நீ விரும்புகின்றனையோ அதைத் தருகின்றேனென்றேன். அவன் ஹே அம்பா! எனக்கு எப்படியானால் மரணம் நேரிடமாட்டாதோ அந்த வகையாய்ச் செய்வாய். யான் எப்படி யோகியாய்த் தேவர் அசுரர்களால் ஜயிக்கப்படாதவனாய்த் தேவத்வத்தையடைவேனோ அப்படிச் செய்வாயென்றனன். ஜன்மம் எடுத்தவனுக்கு மரணம் நிச்சயம். அதுபோலவே மரணமடைந்தவனுக்குச் ஜன்மம் நிச்சயம். இத்தகைய மரியாதை உலகத்தில் வழங்கப்பட்டு வருகின்றது. இம்முறைமைக்கு மாறானவிதி எப்படியுண்டாகும்.

(௯௯-௧00) ஓ அசுரகுலோத்தமனே! நீ இவ்வாறு மரணவிஷயத்தில் நிச்சயபுத்திவைத்து மனதினால் யோசித்து உனக்கு இஷ்டமான வரத்தைக் கேட்பாயாக என்றேன். அவன் ஹே ஜகதம்பிகே! எனக்கு ஹயக்கிரீவனிடத்திலிருந்தே மரணமுண்டாக வேண்டும், வேறொருவராலும் எனக்கு மரணம்வரகூடாது, இதுதான் என் மனத்திலுதித்த இஷ்டம், இந்த இஷ்ட காமத்தைப் பூரணஞ் செய்வாயாக வென்றனன்.

(௧0௧-௧0௫) ஓ மஹாபாக்கியவந்தனே! வீடு போய்ச் சேர்ந்து இராஜ்ய பாரத்தை உன்னிஷ்டம்போற் செய்வாயாக. ஹயக்ரீவனைத் தவிர உனக்கு வேறொருவராலும் மரணம் நேரிடமாட்டாது இது நிச்சயம் என்று அந்த ஹயக்கிரீவனுக்கு வரந் தந்து அப்பொழுதே மறைந்துபோயினேன். அந்த அசுரனும் பரமானந்தத்தையடைந்து தன் வீட்டுக்குச்சென்றனன். பின்னர் துஷ்டாத்மாவான அந்த அசுரன் மஹருஷிகளையும் வேதங்களையும் பீடித்தும் நிந்தித்தும் இருந்தனன். அவ்வசுரனைக்கொல்லத்

தக்கவர் மூன்றுலகத்திலும் இல்லை. ஆதலால் பிரஹ்மதேவன் மனோகரமான குதிரையினுடைய சிரசை அறுத்து சிரோபங்கனை விஷ்ணுவினுடைய தேகத்தில் இப்பொழுது சேர்த்து விடுவன். அதன் பின்னர் ஹயக்கிரீவனானநாராயணன் உங்களுடைய நன்மையைக் கருதி பாபிஷ்டனும் குரூரனும் பகைவனுமான அவ்வசுரனைக் கொல்லப்போகின்றான் என்று கூறினள்.

(௧0௬-௧௧௨) இவ்வாறு தேவர்களைநோக்கி ஆகாசவாணியாய்க்கூறிய சர்வாணியாகிய மஹாதேவி மௌனமுற்றனள். பின்னர் தேவர்களும் பரமானந்த பரவசராய்த் தேவ சில்பியான பிரமதேவனைநோக்கிக் கூறத்தொடங்கினர்:— ஓ பிரஹ்மதேவரே! தேவர்களுடைய காரியமாக விருக்கின்ற விஷ்ணுவினுடைய சரீரத்தில் தலையைப் பொருத்துவதைச்செய்வீர். பின்னர் ஹயக்கிரீவவுருவங்கொண்டவிஷ்ணுமூர்த்தி அசுரசிரேஷ்டரான அந்தஹயக்கிரீவனைச் சம்ஹரிப்பதாகிய தேவகாரியத்தைச்செய்து முடிப்பரென்று கூறினர். ஓ முனிவர்களே! இவ்வாறுகூறிய தேவர்கள் விண்ணப்பத்தைப் பிரமதேவர்கேட்டு மிக விரைவோடு தேவர்களுடைய முன்னிலையிலேயே வாளினால் ஒருகுதிரையின் சிரசையறுத்து மஹாமாயா சொரூபிணியாகிய தேவியினுடைய திருவருளால் அத்தலையை விஷ்ணுமூர்த்தியினுடைய கண்டத்திற் சேர்க்கஅவரும்எழுந்தனர். அதனால் அந்நாள்தொட்டு விஷ்ணுமூர்த்தி ஹயக்ரீவரென்னுந் திருநாமம் உடையவராயினர். பின்னர் மதோன்மத்தனும் தேவர்களுக்குச் சத்துருவுமான அந்த தயித்தியனாகிய ஹயக்ரீவன் பலிஷ்டரும் தேஜிஷ்டருமான விஷ்ணுமூர்த்தியாகிய அந்த ஹயக்ரீவனாலேயே யுத்தத்தில் கொல்லப்பட்டனன். பூமியில் எந்தமனிதர்கள் சுபகரமான இந்த ஹயக்கிரீவோபாக்கியானத்தைக் கேட்கின்றார்களோ, அவர்கள் சகல துக்கத்தினின்றும்நீங்கினவராகின்றனர்; இதில் ஐயமில்லை. இந்த மஹாமாயா சொரூபிணியாகிய தேவிசரித்திரம் பாபத்தைப்போக்குவது, பரிசுத்தமானது, படிப்பவர்களுக்குஞ்சர்வசம்பத்தையுந் தருவது என்று கூறினர்.

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

ஸமாநாதிகவர்ஜிதாயைநம:

ஆறும் அத்தியாயம்.

## மதுகைடபர் உற்பத்தி.

———(*)———

(க-கூ) சவுநகர் சூதமுனிவரைப் பார்த்து ஓ முனிவரே! நீர் விஷ்ணுமூர்த்தி ஹயக்ரீவரான வரலாற்றைக் கருணையினாற் கூறக் கேட்டோம்; இனி அவர் மதுகைடபர்கள் என்னும் அசுரர்களோடு கடலில் ஐயாயிரவருடம்போர்புரிந்ததாகக் கூறினீரல்லவா, அதனையும் அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று கேட்கத்தொடங்கினர். அந்த மஹா சமுத்திரத்தில் மஹாபலிஷ்டரும், ஒருவராலும் அதிக்கிரமிக்கமுடியாதவரும், தேவர்களாலும்வெற்றிகொள்ளக்கூடாதவருமான அவ்விரண்டசுரரும் எப்படிப் பிறந்தார்கள்? எப்படி விஷ்ணுமூர்த்தியினால் சங்கரிக்கப்பட்டார்கள்? அந்த அத்புதமான சரித்திரத்தைத்கூறும். யாங்களனைவரும் கேட்பதில் விருப்பமுடையவர்கள். மிக்க கேள்வியுடைய நீரும் சொல்வதில் வெறுப்பில்லாதவர். இப்படிப்பட்ட நம்மிருவருக்கும் இவ்வனத்தில் சந்திக்கும்படி நேரிட்டது தெய்வச்செயல் தான். மூர்க்கனோடு சந்திப்பது விஷத்தைக்காட்டிலுங் கொடுமையானதென்றும், விவேகியோடு சந்திப்பது தேவாமிருதத்தைக்காட்டிலும் மிக இனிமையானதென்றும் சொல்லப்படுகிறது.

பசுக்களான எல்லாஜந்துக்களும் ஜீவித்திருக்கின்றன, புல் முதலியவைகளைத் தின்கின்றன, வீரியத்தை ஸ்கலிதஞ் செய்கின்றன, விஷயாகாரமான புணர்ச்சி யின்பத்தையும் அத்புதமாயறிகின்றன. இவையன்றி அவைகளுக்கு நன்மை தீமைகளை அறியும் அறிவுமில்லை. மோக்ஷத்தரும் ஞானமுமில்லை. ஆதலால் எவர்களுக்கு சத்கதைகளைக் கேட்பதில் விருப்பமில்லையோ அவர்கள் மேற்கூறிய பசுக்கள் முதலிய ஜந்துக்களுக்கு ஒப்பாகவே மதிக்கற்பாலராவர்.

(எ-கo) விலங்குமுதலிய செவிபடைத்த சிற்சில ஜந்துக்கள் இனிய வோசைகளில் இன்புற்றிருக்கின்றன; செவிபடையாதசர்ப்பங்கள் நாதவொலியைப் பானம் பண்ணி மிகவும் மோகமடைகின்றன. ஆகலான் மெய் வாய் முதலிய பஞ்சேந்திரியங்களுள் கேட்குந் தொழிலமைந்த செவியே சிறந்ததாம். ஏனெனின்செவி என்னும் அவ்விந்திரியத்தைக் கொண்டன்றி கேட்பது முடியுமா? அக்கேள்வியன்றி யொருவஸ்துவினுடைய சொரூபம் விளங்குமா?

அது விளங்காதாயின் அவ்வஸ்துவைப் பார்ப்பதினுலுண்டாகுஞ் சித்தக்களிப் புண்டாகுமா? இவ்வகையான சிறப்படைந்த அக் கேள்வியாகிய சிரவணம் சாத்விக ராஜஸ தாமஸ மென்கிற பேதங் களால் மூவகைப்படும். ஓ மஹருஷிகளே! இது மெய்ஞ்ஞானிகளால் கூறப்பட்ட உண்மை.

(கக-கசு) அவற்றுள் சாத்துவிதசிரவணம் வேதசாஸ்திரமுத லிய சாஸ்திர விசாரஞ்செய்தலெனவும், இராஜஸ சிரவணம் காவி யாலங்கார நாடகாதி ஸாஹித்தியங்களைப் பழகுதலெனவும், தாம ஸசிரவணம் போர்புரிவதற் கேதுவான வார்த்தையாடல் பிறன் பழி கூறுதல் முதலியன எனவுங்கூறப்படும். அன்றியும் அச்சாத் வீகவிசார முதலிய மூன்றுந் தனித்தனி உத்தமம் மத்திமம் அத மம் என மூவகைப்பட்டு ஒன்பது வகைப்படும். அவையாவன:— சாத்துவிக விசாரத்தில் உத்தமம் மோக்ஷபதத்தைப்பற்றி விசா ரிக்கும் விசாரமெனவும், மத்திமம் சுவர்க்க பதத்தைப்பற்றி விசா ரிக்கும் விசாரமெனவும், அதமம் இவ்வுலக போகத்தைப்பற்றி விசாரிக்கும் விசாரமெனவும்; இராஜஸ விசாரத்தில் உத்தமம் தான்கற்ற சாயித்தியங்களால் தந்நாயகியினிடத்தில் சுகிப்பதெ னவும், மத்திமம் கணிகைமாதரிடத்தில் சுகிப்பதெனவும், அத மம் பரதாரத்தினிடத்தில் சுகிப்பதெனவும்; தாமச விசாரத்தில் உத்தமம் எட்பொழுதும் போர்புரிவதில் ஆயத்தமாயிருப்பதென வும், மத்திமம் துரியோதனாதியர்களால் பாண்டவர்களுக்கு எப் படிதுவேஷ முண்டாயிற்றோ அப்படி சத்துருக்களினிடத்திலுண் டாவதெனவும், அதமம் காரணமன்றியில் விவாதத்திலும் கலகத் திலும் பிரவிர்த்தி யுண்டாவதெனவும்பெரியோர்களால் கூறப்படு வதேயா மென்க.

(களா-கசு) ஓ மேதாவியரான சூதரே! இங்ஙனங் கூறிவந்த வைகளில் சாத்துவிகத்தில் உத்தமமான வேதசாரமாகிய புராண த்தைக் கேட்பதே மேன்மையாம். அது புத்தியை வளரச்செய்யும், புண்ணியத்தைத் தரும், அதன்பின்னர் பாபத்தை நசிக்கச் செய் யும். ஆகையால் அறிவிற் சிறந்த நீர் முன் வியாசரால் கேட்கப்பட் டதும் புருஷார்த்தங்களை யெல்லாந் தருவதும் மங்களம் வாய்ந் ததுவுமான புராணகதைகளைச் சொல்லியருளும் என்றனர். சூத முனிவர் கூறுகின்றார்;—ஓ மஹாபாக்ய சீலர்களே! இவ்வுலகில் நீங்களே தன்யர்கள், யானே தன்யன். உங்களுக்குப் புராணங் கேட்பதில் எப்படி புத்திப்பிரவேசம் உண்டாகின்றதோ அப்படி யே எமக்கும் சொல்லுவதில் ஆசக்தி யுண்டாகின்றது.

(உ௦-உஉ) முன்னொரு காலத்தில் சமுத்திரம் பெருவெள்ளமாகப் பெருக அதில் மூவுலகமும் மூழ்கிப்போக அப்பொழுது வாசுதேவராகிய ஜநார்த்தனர் ஆதிசேஷனாகிய படுக்கையில் உறங்கிக்கொண்டிருக்க அவருடைய காதுகளிலுள்ள மலத்தினின்றும் மஹாபலிஷ்டரும் அசுரத்தொழிலுடையவருமான மதுகைடபரென்னுந் தயித்தியர்கள் தோன்றி அக்கடலிற்றானே வளர்ந்துவந்தனர். அதன் பின்னர் பெரிய சரீரத்தையுடைய அம்மதுகைடபரிருவரும் அச்சமுத்திரத்தில் விளையாடவேண்டுமென்னும் இச்சையுடையவர்களாய் அங்கும் இங்குமாக வுலாவி விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது சகோதரர்கள்போல் பிரியாதுவாழும் அவ்விருவரும் மனதில் அடியில்வருமாறு சிந்திக்கலாயினர்:—

(உ௩-உ௬) எவ்விடத்துங் காரணமின்றிக் காரியநிகழாதென்பதும் * ஆதாரமின்றி ஆதேயப்பொருள் நிலைபெறாதென்பதும் உண்மையன்றோ; ஆகலான் நாம் இப்பொழுது ஆதார ஆதேயங்களின் றன்மை அறியவேண்டியவர்களாயிருக்கின்றோம். ஏனெனின் மிகவும் விசாலமாயும் சுகரூபமாயும் நீர்மயமாகும் விளங்கும் இக்கடலுக்கு ஆதாரம் யாது? இது யாவருடைய படைப்பு? எப்படியுண்டாயிற்று? இக்கடலில் மூழ்கியிருக்கிற நாமிருவரும் எப்படியாவரால் உண்டுபண்ணப்பட்டோம்? நமது தந்தை எங்குற்றனர்? இவ்விஷயங்கள் நமக்கு நன்றாய்த் தெரியவில்லையே என்கிற விசாரமும் தெரியவேண்டுமென்கிற விருப்பமும் உடையவர்களாயிருந்தோமேயன்றி நிச்சயம் அறிந்தோமில்லை என்றனர்.

(உஎ-௩௩) இவ்வாறு தங்களுக்குள் சந்தேகமுற்றுச்சிந்தித்திருந்த இருவருள் கைடபன் தன் பக்கத்தில் நீரில் நின்ற மதுவென்பவனைப்பார்த்துக்கூறுகின்றான்:-ஓ மதுவே! இங்கு இந்தஜலார்ணவத்தில் நம்மைநிலை பெறச்செய்வதாயும் அசைவற்றதாயும் மஹாபலத்தோடு கூடினதாயுமுள்ளது யாதொருசக்தியோ அச்சக்தியே காரணமாகுமென்பது எனது அபிப்பிராயம். இக்கடலும் அச்சத்தியினாலேயேவியாபிக்கப்பட்டிருக்கிறது; அதனையேஆதாரமாகவுங் கொண்டிருக்கிறது. ஆகையினால் நம்மிருவருக்கும் எல்லாவற்றினும் மேம்பட்ட அத்தேவியே காரணியாயிருக்கின்றனள் என்றனன். மதுவும் அவ்வாறே அபிப்பிராயப்பட்டனன். இவ்வாறு இருவரும் அறிவினால் யூகிக்கப்பட்டு யோசனையுடன் இருக்கையில்

* ஆதாரம்—ஒரு பொருளிருக்க இடம். ஆதேயம்—அவ்விடத்தைத் தங்குமிடமாகக் கொண்டிருக்கும்பொருள்.

மனங்கவரும் அழகிய வாக்பீஜமாகிய அக்ஷரவோசை ஆகாயத்தில் உண்டாகியது. அதை அவ்விருவருங்கேட்டு மனதுட்கொண்டனர். உடனே ஒரு மின்னொளியும் அவர் கண்ணுக்குத் தோன்றிற்று. ஒளியையும் ஓசையையும் கண்டுகேட்ட அவ்விருவரும் அவ்விரண்டையும் நன்றாய் ஆராய்ந்தவர்களாய் நாம் கேட்ட ஓசை வாக்பீஜமாகிய ஒருமந்திர சொரூபமாகவேண்டும் நாம்கண்டவொளி திவ்யப்பொருளாகிய ஸகுண ஸ்வரூபமாக வேண்டுமேயன்றி அது வெற்றோசையுமன்று அது வெற்றொளியுமன்று எனநிச்சயித்து தாங்களுண்ணும் உணவை ஒழித்து ஐம்பொறிகளையும் உள்ளடக்கி அறிவைத் திவ்யப் பொருளிற்கூட்டிமனத்தை அக்ஷரத்தில் நிறுத்திஉடலைச் சமாதியோகத்தில் இருத்தி ஆயிரம் வருடம் உக்கிரமான தவம்புரிந்து வந்தனர்.

(ஙங௨-ஙசு) அப்பொழுதுபராசத்தி, அவ்விருவருக்கும்பிரசன்னையாய்த் தவஞ் செய்வதில் மனவுறுதியுடையவராய் மிகவும் வருந்துகிற அவ்விரண்டசுரரையும் பார்த்து, அவர்களுக்கு அநுக்கிரகம் புரிவாளெண்ணி முன்போல் அசரீரியாயிருந்து, உங்களிருவரது தவங்கண்டு மகிழுற்றனம்,யாம் உங்களுக்குச் சம்மதமான வரத்தைத் தருகின்றோம் கேட்பீராக என்றனள்.

(ஙஎ-ஙகூ) இவ்வார்த்தையைக்கேட்ட தானவரிருவரும் ஹே தேவி! எங்களிருவருக்கும் மரணம் யாங்கள்விரும்பும்பொழுது உண்டாம்வண்ணம் அநுக்கிரகித்தல் வேண்டுமென்றனர். தேவி, ஓ தயித்தியர்காள்! எனது அநுக்கிரகத்தால் நீவிர் விரும்பும் பொழுதே மரணத்தை யடையக்கடவீரேயன்றித் தேவர்களாலும் ஏனைய அசுரர்களாலும் நீவிர் இருவரும் ஜெயிக்கப்படத் தகுவரல்லீரென்று அநுக்கிரகித்தனர். இவ்வரத்தைபெற்ற அசுரர் இருவரும் மதமடைந்து செருக்குற்று நீர் வாழ்வனவாகிய உயிர்களோடு கலந்து கூடி விளையாடிக்கொண்டிருந்தனர்.

(சO சங) ஓ அந்தணர்காள்! இவ்வசுரர் இவ்வாறு விளையாடிக்கொண்டிருக்கையில் ஒரு நாள் கமலாசனனும் சிருஷ்டிகர்த்தனுமாகிய பிரமன் திடீரென்று அவர் முன் தோன்ற மஹா பலசாலிகளாயும் யுத்தஞ்செய்வதில் விருப்புடையவர்களாயும் உள்ள அவ்விருவரும் பிரமதேவனைக்கண்டு களிப்படைந்து கூறுகின்றனர்:— ஓ பிரமதேவனே! எங்களிருவருடன் யுத்தஞ்செய்யக்கடவாய்; இன்றேல் உனக்காசனமாயுள்ள தாமரையைவிட்டு எங்கேனுஞ் செல்லக்கடவாய். போர்செய்ய வலியிலனாகிய உனக்கு மங்கள கரமான இச்சுகாசனம் எங்ஙனங்கூடும்? இக்கமலாசனம் வீரத்தோடு கூடி

னவர்களுக்குத் தகுதியேயன்றி பயத்தோடு கூடினவர்களுக்குத் தகுதியன்று; ஆகையால் நீ இதைவிட்டு உடனே போகக்கடவாயென்றனர். இவ்வாறு கூறிய அவ்விருவரது வாய்மொழியைப் பிரஜாபதி கேட்டு மிகவும் விசாரமுற்று அதி பலசாலிகளாயுள்ள இவர்களை அந்தோ! நாம்யாதுசெய்யுந் திறமுடையோம் எனஏங்கி மனதில் ஆராய்வானாயினன் என்றனர்.

ஆறும் அத்தியாயம் முற்றிற்று.

---

ஸர்வோத்துங்காயைநமஃ

ஏழாம் அத்தியாயம்.

## * கமலாசனகிருத விஷ்ணுயோக ருத்திராஸ்துதி.

——(*)——

(க-உ) சூதமுனிவர் கூறுகின்றார்:—ஓ முனிகணங்காள்! மதுகைடபருடைய வீரமொழியினால் மதிமயங்கி ஆராயத்தொடங்கிய சர்வதந்திர வேத்தாவான பிரமன் அவ்விருவரையு நோக்கித் தண்டத்தை யீறாகவுடைய சாமதான பேதமென்னுஞ் சதுர்வித வுபாயங்களையும் ஆலோசித்துத் தன்னுள் எண்ணலாயினன்:—

(ங-எ) நாம் இப்பொழுது இவ்விருவரதுபலமும் இவ்வளவினவென உள்ளவாறு அறிந்தோமில்லை ஆகலானும், பகைவர் வலியுணராது யுத்தஞ்செய்தல் மிகவுந் தகுதியற்றதாகலானும், இவர்களிடத்தில் யுத்தஞ்செய்ய வேண்டுமென்னும் எண்ணம் ஒழித்துத் துதிசெய்யின் மதம் பிடித்திருக்கும் இவ்விருவருக்கும் நமது வலியின்மை நம்மாலேயே தெற்றென வெளியாகும் ஆகலானும், அங்ஙனம் வலியின்மை வெளியாகுங்கால் (நம்மைக்கொல்ல இரண்டுபேர் வேண்டுமா) ஒருவனே கொல்லுவான் ஆகலானும், அன்றித்தானத்தால் வெல்லாமென்று எண்ணுவோமாயின் அதற்கு நாம் ஒரு சிறிதும் யோக்கியதை யுடையோம் அல்லோம் ஆகலானும், அன்றிப், பேதத்தில் வெற்றியடைவோம் என்றெண்ணுவோமாயின் இவர்களைப் பேதிக்க எவ்வாற்றானு முடியாதாகலானும், இந்நான்குபாயங்களையும் எண்ணுவதொழிந்து ஜனார்த்தனராய் மஹாவீரமுடையவராய் நான்கு திருக்கரங்களையுடையவராய் ஆதிசேஷன் படியில் துயில் கொள்ளுந் திருமாலைத் துயிலுணர்த்தின் நமதுஇடுக்கணைத் தீர்த்தருளுவர் என மனதில் நிச்சயித்து உந்திமலரிற் றோன்றிய அப்பிரமன் அவரது தாமரைத் தண்டிட்

---

* விஷ்ணுமூர்த்தி நித்திரையிலிருக்கும்போது பிரமன் செய்ததுதி.

சென்று துக்கத்தீர்த்தளாவல்ல விஷ்ணுமூர்த்தியை மனத்தாற் சரணமடைந்து அவர் துயிலுணரும்பொருட்டு சகந்நாதரும் யோகநித்திரையில் அசைவற்றவரும் நாராயணருமான அரியை அவரது மங்களகரமான திருநாமங்களால் அழைப்பானாயினன்.

(அ-க0) ஹே தீனநாத! ஹரே! விஷ்ணோ! வாமந! மாதவ பக்தார்த்த ஹ்ருத்! (அடியரிடர் தீர்ப்பவனே) ஹ்ரிஷிகேஸ! (இந்திரிய நிக்கிரஹ) சர்வவாச! சகத்பதே! அந்தர்யாமின்! அமேயாத்மன் (அளவிடப்படாத சொரூப முடையோய்) வாசுதேவ! துஷ்டநாச! நைகாக்கிரசித்த (துஷ்டராகிய சத்ருக்களை அழிப்பதிலேயே செலுத்துமன முடையோய்) சக்ரகதாதர! சர்வஜ்ஞ! சர்வலோகேச! சர்வசக்தி சமன்வித! தேவேச! துக்கநாச! பள்ளி எழுந்தருளும் எழுந்தருளும் அடியேனைக் காத்தருளும்.

(கக-கங) ஹே விஸ்வம்பர! விசாலாக்ஷ! புண்யஸ்ரவண கீர்த்தன! ஜகத்யோநே! நிராகார! சர்க்க (சிருஷ்டி) ஸ்தித்யந்தகாரக! இந்த இரண்டசுரரும் மதம்பிடித்து என்னைக்கொல்லவிருப்புற்றனர். எல்லாவற்றிற்கும் ஆதாரமானவரே! யான் சங்கடப்படுவதைத் தேவரீர் அறியாதது என்னை? அதிக துன்பத்தினால் மெலிந்து தேவரீரைச் சரணமடைந்திருக்கிற அடியேனைக் கடாக்ஷித்திலீராயின் ஹே தீனரக்ஷகரே! தேவரீரது காத்தற்றொழில் நிலையற்றதாகுமன்றோ என்றனர். இங்ஙனம் பிரமன் மிகவருந்தித் துதித்தும் திருமால் யோகநித்திரையைவிட்டுத் திருக்கண் மலர்த்தாதிருக்க மீளவும் பிரமன் ஆலோசிப்பதாயினன்:—

(கச-கசு) யோகநித்திரையின் வசப்பட்ட விஷ்ணுபகவானை நாம் இவ்விதமாகத் துதித்தும் அவர் திருப்பள்ளியுணராராயினர். தருமஸ்வரூபியாகிய அவரென்செய்வர். நித்திராசக்தியால் விழுங்கப்பட்டு அதற்குள்ளாகி திருக்கண் விழித்திலர். இவ்விருதானவரும் மதத்துச் செருக்குற்று நம்மைக் கொல்லக்கருதி கண்ணிமை கொட்டாது குறுகுகின்றனர். இவர்களால் மிகத்துன்புற்ற நாம் இனி யாதுசெய்யவல்லம் எங்குச்செல்லவல்லம்? எனமனதில் பலவாறாக வெண்ணிக் கவலையுற்றுப் பின்னர் தெய்வவருளால் ஒருவாறு கவலையற்றுத் தெளிந்து இவ்விஷ்ணுமூர்த்தியையும் அசைவற்ற அசேதனப்பொருள்போற் செய்த எந்தச்சக்தியோ அச்சக்தியே நம்மைக் காக்கவல்லவளாவள்.

(கஎ-உக) ஏனெனின், பஞ்சபூதங்களின் குணங்களாகிய சத்தாதி விஷயங்களை உயிர் நீங்கினபின் அறியாவாறுபோல் இத்திருமாலும் நித்ராசத்தியான் திருக்கண்கள் மூடப்பட்டு ஒன்றும்

அறியாதிருக்கின்றனர் நாம் இவரை எவ்வளவு பரத்வமாகத்துதித்தோம். அத்துதியுள் ஏதேனும் ஒன்றுகேட்டிருப்பரோ, ஆகையால் இவர் நித்ராசத்தியின் வயத்தரேயன்றி நித்திராசத்தி இவர் வயத்ததன்று, பிறர்வயப்பட்டோர் அவரது ஏவலரேயாவர். இம்முறைமையான் நித்திராசக்தியின் வயத்தராகிய இவருக்கு அந்நித்திரா தேவியே ஏவல்கொள்ளுங் கடவுளாவள்.

(உஉ-உ௩) அத்தேவி இலக்ஷ்மிதேவி என்று சொல்லலாமோவெனின் அத்தேவியும் நமது தோத்திரத்தைக் கேட்டுக் கண்விழித்திலள். ஆகையால் இவ்விலக்குமிதேவியும் அத்தேவியாகாள். இவளுக்கும் யாவருக்கும் எஜமானனாகிய திருமாலையே நித்திரையின்வயத்தராக்கியதால் இவ்வுலகமெல்லாம்அச்சத்தியின் வயத்ததேயாம். இதனால் நாமும் திருமாலும் உருத்திரமூர்த்தியும் சரஸ்வதியாதி முத்தேவி முதலிய யாவரும் அத்தேவியின் வயத்தரே என்றுணர்வதிற் சிறிதேனுஞ் சந்தேகமில்லை.

(உச-உ௫) திருமாலே இந்தேவியினது மகிமைக்குத் தோற்றுப் பிராகிருதரைப்போற் றன் வயமிழந்து கிடக்கின்றாரெனின் ஏனைய கடவுளரைப்பற்றிச் சொல்லக்கிடப்பதென்னை; ஆதலால் இப்பொழுது யோகநித்திராசத்தியைத் துதிப்போம். அங்ஙனந் துதிப்பின் அத்தேவியானவள் கருணைகூர்ந்து திருமாலை கண்விழிக்கும்படிச்செய்வள். அப்பொழுது சநாதனராகிய மஹாவிஷ்ணுவானவர் அவ்வசுரருடன் போர்செய்தருளுவர் எனப்பிரமனெண்ணித் தாமரைத் தண்டினின்றும் ஏகாக்கிரசித்த முடையவனாய்த் திருமாலது திருமேனியில் வியாபித்திருக்கும் யோகநித்திரையைப்பின் வருமாறு துதிப்பானாயினன்:—

(உ௬-உ௯) ஹே தேவி! இவ்வுலகிற்குத் தேவரீரே காரணமென வேதவாக்கியங்களானத்தானும் அறிந்தேன். (அதற்குச் சான்றாக) எவ்வுலகிற்கும் அறிவளிக்கும் புருஷோத்தமராகிய திருமாலும் இன்று உம்மால் நித்திராதேவியின் வயத்தராயினர். ஹே அன்னாய்! எல்லாப்பிராணிகளது மனதிலுறைபவளே! திருமாலே தன்வயமிழந்துகிடக்கின்றனரெனின்தேவர்களுள் மிகச்சிறந்தசமர்த்தனாய் எவன்றான் நிர்க்குணையாகிய நினது மோகவிலாசலீலையை (மதிமயக்கும் வேடிக்கையான விளையாட்டை) இவ்விதமென அறியவல்லவன், அங்ஙனமறியக்கூடாததை மூடனான யானோ அறிவது.

(௩0) ஹே தேவீ! (நிர்க்குணையாகிய உம்மை) சந்தியை என்னும் பெயரால் முனிகணங்கள் மூன்று காலமுந்தவறாது எவ்வாறு குணரூபங்களைத் தியானிக்கின்றனரோ, அத்தகைய தியானரூப

சகுணையாய்த் தேவரீர் பல்வகையான நடனங்கள் செய்கின்றீர் அங்ஙனமான நடனத்தொழிலியற்றுவதில் தேவரீர் சம்மந்தப் படுவதை யாவரு முணரார்.

(கூக-கூரு) உண்மைச் சாங்கியர் புருஷனென்றும், பிரகிருதி என்றும், சைதன்ய பாவரகிதை யென்றும் கூறுவது மல்லாமல் சகத்தைப் படைக்குங் கர்த்தையென்றுங் கூறுகின்றனர். நீர் படைக்கும் மகிமையை யுடையவர்தானு? அதுவுண்மையாயின் இந்த விஷ்ணுமூர்த்தியை எனிப்பொழுது பிரஜ்ஞையில்லாதவ ராகச்செய்தீர்? இது மாத்திரந்தானு, சகுணையாயிருந்து நானுவித மான நாட்டியத்தைச் செய்கின்றீர். இவ்வாறு செய்வதாகியஉம்மு டைய சதுர்ப்பாடாகிய தொழிலை ஒருவருமறியார். ஹே பவாநீ! உம்மை முனிகணங்கள் முக்காலத்திலும் இடைவிடாமல்சந்தியை, சாவித்திரி, காயத்திரி என்னும் நாமகுணங்களைக் கற்பித்துத் தியா னிக்கின்றூர்கள். ஹே மாதா! நீர் எப்பொழுதும் அறிவை உயிர்க ளுக்கு ஊட்டுகின்றபடியால் புத்தி என்றும், தேவர்களுக்கு எக்கா லத்தும் சுகத்தைத் தருகின்றபடியால் ஸ்ரீ என்றும், ஏனையவர்க ளுக்கு மதிகாந்தி சிரத்தை முதலிய குணவிசேஷங்களைத் தருகின் றபடியால் அவ்வக்குண சொரூபி என்றும் கூறப்படுகின்றீர். (இக் காரணங்களை யோசிக்குங்கால்) உம்மைவிட மேலான தெய்வம் ஒன்றிருக்கின்றதென்று அநேகம் பிரமாணங்களினுலும் யுக்தி விசேஷங்களினுலும் என்னுலறியப்படவில்லை. ஆகையால் நீரே எல்லாவுலகங்களுக்குந் தாயென்பது சத்தியம்! இதற்கும் சாக்ஷி இரக்ஷிக்கின்றவரென்று பேருடையவராயிருக்கின்ற இந்த விஷ்ணு நித்திரை வசப்பட்டிருக்கின்றமீதயாம் எனெனில் இந்நாள்காறும் இவரையே தெய்வமென் றெண்ணியிருந்தேன். இவரிப்பொழுது அறிவுகெட்டுறங்கும் மானிடரைப்போல் யாதொரு உணர்ச்சியுமி ன்றி என்னுடையதுக்கத்தையறியாமல் உறக்கங்கொண்டியிருக்கின் றூர். இவரை நானெப்படி தெய்வமாகிய தாயென்றுகூறுவேன்.ஹே தேவி!நீர்வேதவித்துக்களாலும் அறியப்படாதவர். வேத வித்துக்க ளாலும் அறியப்படாதவர். வேதத்தாலும் அவ்வேதந்தன்னுளடக் கிக்கொண்டிருக்கும் அர்த்த விசேஷங்களாலும் உம்முடைய பெ ருமையறியப்படமாட்டாது. எனெனில் இந்தவேதம் உம்மாலுண் டாக்கப்பட்டது, உலகத்தில் நடக்கும் சகலகிருத்தியங்களும் உம் முடையதே, இது பிரத்தியக்ஷந்தான். உம்முடைய மகிமைபொ ருந்திய சரிதங்களனைத்தையும் எந்தப் புத்திமான்கள்தா னறிவார் கள். எவருமறியமாட்டார், யானுமறியமாட்டேன், ஹரிஹரரும் ஏனைய அமரரும் அறியமாட்டார். இவர்களே யறியார்களாயின்

நிர்க்குணம் த்வாம்.(சச)க்வாஹம் ஸுமந்த மதிரப்ரதித ப்ரபாவ:
கோயங் தவாதி நிபுணோ மயிஸப்ரஸாத:,ஜாநேபவாநிசரிதம்கரு
ணாசமேதம் யத்ஸேவகாம்ஸ்ச தயஸே த்வயிபாவயுக்தான். (சரு)
விருத்தஸ்த்வயா ஹரிரஸௌ வநஜேஶயாபி நைவாசரத் யபிமுதம்
மதுசூதநஸ்ச, பாதவ் தவாதி புருஷ: கிலபாவகேந கிருத்வாகரோ
திகரேண சுபவ்பவித்ரவ். (சகூ) வாங்சயாத்யஹோ ஹரி ரஶோக
யிவர்திகாமம் பாதாஹதிம் ப்ரமுதித: புருஷ: புராண:, தாம்த்வங்
கரோஷி ருஷிதாம் பிரண தங்கபாதே திருஷட்வாபதிம் ஸகலதே
வநுதம் ஸ்மரார்த்தம். (சஎ) .வக்ஷஸ்தலேவஸஸிதேவி ஸதைவத
ஸ்ய பர்யங்கவத்ஸ சரிதே விபுலேதி ஶாந்தே, ஸவுதாமிநீவ சுக
நேஸ விபூஷிதேச கிந்தேநவாஹந மஸவ்ஜகதீஸ்வரோபி. (சஅ)
த்வம் சேஜ்ஜஹாஸி மதுஸூதந மம்பகோபாந் நைவார்ச்சிதோபி
ஸபவேத் கிலசக்தி ஹீந:, பிரத்யக்ஷமேவ புருஷம் ஸ்வஜநாஸ்த்ய
ஜந்தி ஶாந்தம் ஶ்ரியோத்தியதமதீவ குணைர்வியுக்தம், (சகூ) ப்ரஹ்
மாதய: சுரகணா நதுகிம்யுவத்யோ யேத்வத்பதாம்புஜ மஹர்நிச
மாஶ்ரயந்தி, மந்யேத் த்வயைவ விஹிதா:கலுதேபுமாம்ஸ: கிம்வர்
ணயாமி தவசக்தி மநந்தவீர்யே. (ருO)த்வம்நாபுமாந்நசபுமாந் இதி
மேவிகல்போ யாகாசிதேவி சகுணா நது நிர்க்குணாவா, தாந்த்வாம்
நமாமிஸததம் கிலபாவயுக்தோ வாங்சாமிபக்தி மசலாம் த்வயிமா
தரந்தே

(சக - ருச) ஹே ஜநநி! ஹே பகவதி! திவ்யமாகியும் சர்வ வேத ப்ரசித்தியாகியும் சர்வலோக க்ஷேமகரமாகியும் இருக்கிற உம்முடைய சொரூபமானது என்னாலே காணப்பட்டபடியினால் தேவசமூகங்களாலே சேவிக்கப்படுகிறதாயும் போகமோக்ஷப் பிரத மாகியும் விளங்கும் உம்முடைய சரணாரவிந்தத்தை நமஸ்கரிக்கின் றேன். (இதனால், என்னாலே காணக்கூடாத உன்னுடைய சொரூ பம் உன்னுடைய அனுக்ரஹத்தால் காணப்பெற்றேனாகையால் இதற்கு நானென்ன கைமாறு செய்வேன் வேறொன்றறியேன் உன்திருவடியை நமஸ்கரிக்கின்றதே யாம் என்றறிவித்ததென்க.) ஹே அம்பா! முநிவர்களும் தேவசமூகங்களும் (என்னுடைய சம்பந்தமான) யாதொரு விஷயத்தையும் அறியக்கூடாமல் மயங்கு

கின்றார்கள். (இவர்களே மயங்குகின்றாரெனின்) பூமியில் எந்த மானுடன் உன்னுடைய சொரூபவிசேஷத்தை யறிவான். (அறியான்; இது இங்ஙனமிருக்க) ஹே தேவி! தீனனாகிய என்னிடத்தில் ஒவ்வொன்றிலும் குறைவில்லாமல் அகண்டமாய் நிறைந்துள்ள ஐஸ்வர்யங்களையும், உம்முடைய தயையையும் பார்க்கின்றபொழுதே (எனக்கு) ஆச்சரியமல்லவா வுண்டாகிறது. (இதனால், உன்னாலடையவேண்டியமோக்ஷைஸ்வர்யமும் போகைஸ்வர்யமும் அடைவதற்கு உன்னுடைய சொரூபத்தை யறிவதற்கின்றி மயங்குகின்றார்கள். பூமியிற்பிறந்த மானுடரிற்கடைப்பட்டயான் ஒன்றிலுங் குறைவில்லாத அகண்டைஸ்வர்யமும், உன்னுடைய தயையுங் கிடைக்கப்பெற்றதை எண்ணுங்கால் ஆச்சரியமன்றோ உண்டாகிறதென்று கருணையை வியந்ததென்க.) சம்பு, நாராயணன், பிரமன், இந்திரன், சூரியன், குபேரன், அக்னி, வருணன், வாயு, சந்திரன், வசுக்கள் என்று சொல்லப்பட்ட இவர் முதலியோரே உன்னுடைய மகிமையை அறியமாட்டார்களென்றால் குண ஹீனனாகிய மானிடன் எப்படியறிவான். (இதனால் உலகினர் ஐஸ்வர்யம் பெறுதற்குரியார் இவரென்பார்க்கு ஐஸ்வர்யங் கொடாமலும், பெறுதற்கு உரியராகாரென்பதற்கு ஐஸ்வர்யங் கொடுத்தலுமாகிய உனது அனுக்கிரக சூட்சியை ஒருவருமறியாரென்று அனுக்கிரக மகிமையைக் கூறியதாம்.) ஹே அம்பா! சர்வ வியாபியாகியும், அளவிறந்த தேஜோரூபியாகியும் இருக்கின்ற சங்கரர் உன்னைப்பிரத்யக்ஷமாயறிவார் (வேறொருவரும்அறியார், எனெனில்) நீ. சத்வகுண சம்பன்னையாகிய பாற்கடலினுதித்த லக்ஷ்மிசொரூபியாகியும், ரஜோகுண சம்பன்னையாகியசகல வேதார்த்தமாய் விளங்கும் சரஸ்வதி சொரூபமாகியும், தமோகுண சம்பன்னையாகிய துர்க்காசொரூபமாகியும் இருக்கின்றனை, (இம்முக்குணரூபமல்லாத) நிர்க்குணையாயும் இருக்கின்றனை, (ஆகையால்) உன்னைச்சங்காரனன்றி எவரறிவார். (இதனால் திரிகுண சத்திசொரூபமாயெவராலும் அறியத்தக்கவள்போ லிருக்கின்றாய், ஒருவராலும் அறியக்கூடாத நிர்க்குணையாயுமிருக்கின்றாயாகையால் உன்னை நிர்க்குணையே என்று கணிப்பார்க்குச் சகுணையாயும், சகுணையேயென்றுகணிப்பார்க்கு நிர்க்குணையாயு மிருத்தலால் உன்னை எவரறியவல்லா ரென்க.

மந்தபுத்தியுள்ளவனாகியும், அப்பிரசித்தனாகியும் இருக்கின்ற நான் எவ்வளவு தன்மையுடையவன், என்னிடத்தில்மிகவும் விசேஷித்திருக்கின்ற உனது நல்ல அனுக்ரஹம் எவ்வளவு மேம்பாடுளது. ஹே அம்ப! தயையோடு கூடிய உன்னுடையசரித்திரத்தை நானறிவேன். (என்னையெனில்) ஒருவன் எந்த காரணத்தினாலாவது உன்னிடத்தில் பக்தி பாவத்தோடுங்கூடியிருப்பானாயின் அவ்வடியானுக்கனுக்கிரகஞ்செய்யும் இயல்புடையவளல்லவா. (இதனால் யாவனாயினும் உன்னிடத்தில் பக்தி பாவத்தோடுகூடியிருப்பானாயின் அவனளவுநோக்காது அளவிறந்த அனுக்கிரஹஞ்செய்யுங்கருணையுடையயவள்நீஎன்று குறித்ததாம்.) உன்னாலுண்டாக்கப்பட்ட பிரமன், மதுசூதனனாகியும் ஆதிபுருஷனாகியுமுள்ள விஷ்ணு, உருத்திரர் ஆகிய மூவரும் ஆனந்தத்தை யடையவில்லை; அதனால் அம்மூவரும் பரிசுத்தமாகியும், சுபகரமாயுமுள்ள உன்னுடைய பாதகமலங்களைத் தங்களுடைய கரங்களால் அடிக்கடிநமஸ்கரிக்கின்றார்கள். (இதனால் மும்மூர்த்திகள் சிருஷ்டியாதி முத்தொழிலியற்றினாலும் அதனாற் பிரஹ்மானந்த முண்டாகாமையால் அஃதுண்டாகும் பொருட்டு அவ்வானந்தத்திற் கிடனாகிய திருவடியைப் பிரார்த்திக்கின்றார்களென்று குறித்ததாம்.) ஆதிபுருஷராகிய நாராயணர் ஆனந்தத்தை யடைந்து சோகமில்லாதவர்போல் உன்னிடத்தில் சரணாகதியை யபேக்ஷிக்கிறார். சகல தேவதைகளாற் றுதிக்கப்பட்டவராகியும், காமபீடிதராகியும், பாதத்தில் வீழ்ந்து கிடக்கிற அந்த நாயகரைப் பார்த்து நீ அந்த சரணாகதியைக் கடூரமாகச் செய்கிறாய். (இதனால் தேவியே நீ இலக்ஷிமி சொரூபியாய் நாராயணருக்குப் பத்னியாக விருப்பது உண்மையானால் அந்த நாராயணர் உன்னுடைய திருவடியில் அடைக்கலம்புக எண்ணுவரா? அப்படியடைக்கலம் புகுந்த அவரை காமபீடிதராய் வீழ்ந்தாரென்று திருவுளத்திலெண்ணித்திரஸ்கரிப்பையா? ஆகையால்நீ அவரால்ஆளப்பட்ட சக்தியன்று அவரையாளுஞ்சக்தி என்றுகுறித்ததாம்.) நல்ல லீலாவிநோதமுடையவளே! திவ்யாலங்காரமுடைவளே! அதிசாந்தமுடையவளே! ஹே அம்ப! மஞ்சம்போல்விசாலமாகியஅந்த நாராயணருடையமார்பில்மேகத்திற் றோன்றுகின்ற மின்னற்கொடிபோலவாசம்பண்ணுகிறாய். இந்நாராயணர் உனக்குவாகனமாக ஆகமாட்டாரா ஆவது ஒரருமையா (இதனால் நீ நாராயணரதுமார்பை கட்டிலாகக்கொண்டு மின்னல்போல் பிரகாசிக்கஅவர்உனக்குக்கட்டிலாகவிருப்பது ஆச்சரியமன்று. ஏனெனில்உன்னாலாளப்பட்டவரென்று முன்னரே குறித்திருக்கிறேனாகையால்உனக்கு அவர்கட்டி

லாகவிருப்பது ஓரருமையன்றென்றுகுறித்ததாம்.) ஹேஅம்ப! (ஓர்கால், நீ கோபத்தினாலே பதருசூதனராகியநாராயணரைவிட்டுவிலகுவையேயானால் அந்த நாராயணர் யாவராலும் பூஜிக்கபட்டவராயிருந்தாலும் (நிக்ரஹானுக்கிரகஞ்செய்யும்) சக்தியிலாதவராக ஆகமாட்டாரா? (ஏனெனில்) உலகில்பிரத்யக்ஷமாய் ஒருவன்சாந்தனாயும், ஐஸ்வர்யவந்தனாயும் இருந்தபோதிலுங்குணஹீனனாயிருப்பானாயின் அவனை அவனுடைய ஜனங்கள் விட்டுவிடுகிறார்களல்லவா. (இதனால் ஒருவனிடத்தில் குணநீங்குமாயின் அவனினத்தவர் அவனைவிட்டுநீங்குவதுபோல நீநாராயணரைவிட்டு நீங்குவையாயின் உன் சக்தியாகிய நிக்கிரகானுக்கிரகமும் அப்பொழுதே நீங்குமென்றுகுறித்ததாம்.) பிரஹ்மாமுதலாகியயாதொருதேவகணங்கள் உன்னுடைய பாதாரவிந்தத்தை, இரவும் பகலும் ஆஸ்ரயிக்கின்றார்களோ அவர்களெல்லாம் உன்னாலேசிருட்டிக்கப் பட்டவர்கள். ஸ்திரீகளோவென்றால் அப்படியன்று. ஓ அநந்த சாமர்த்திய முடையவளே! உன்னுடைய சக்தியை என்னவென்று கவனிக்கப்போகிறேன். (இதனால் புருடரெல்லாம்உன்னால்சிருட்டிக்கப்பட்டவரானபடியினால்உன்னையாஸ்ரயிருக்கின்றார்கள். ஸ்திரீகளெல்லாம் நீயாகவேயிருக்கின்றபடியால்அடிமைகளாக ஆஸ்ரயிக்கவில்லை என்று குறித்ததாம்.) நீ புருஷரூபமல்லாதவளாயுமில்லைபுருடனாகவுமில்லை! இவ்விஷயத்தில்) பிரமையுண்டாகிறது. ஹே தேவி! (நீ ஆணோ பெண்ணோ) சகுணையோ நிர்க்குணையோ, எவ்வண்ணமிருந்தாலும் இருப்பாயாக; ஒருவண்ணமுஞ்சொல்லக்கூடாதிருக்கின்ற உன்னை (நான்) பக்திபாவத்தோடு கூடினவனாக எக்காலமு நினைக்கின்றேன். (ஏனெனில்) ஹே அம்ப! தேகாந்தத்தில் உன்னிடத்தில் ஸ்திரமானபக்தியை அபேக்ஷிக்கின்றேன். (இதனால்நீ ஸ்திரீரூபமாத்திரமாயிருக்கின்றாயென்றாலோ புருடரூபமாகவுங் காணப்படுகிறாயாகையால் நீஆணோபெண்ணோநிர்க்குணையோசகுணையோ இன்னும்எத்திறத்தனளோயான் கணிக்கற்பாலனன்று. கணித்தற்கறிவிலனாயினும் உன்னை நமஸ்கரிக்கின்றேன். அதற்கு நீஎனக்கு மரணாந்தத்தில் உன்பக்தியைக்கொடு என்றுகுறித்ததாம்.) என்றுதோத்திரஞ்செய்துதேவியினுடையபாதகமலங்களைப்பணிந்தனன். தேவி இவனது தோத்திரத்திற்குமகிழ்ந்து அவ்வரசனுக்குத் தன்சொரூபத்தில் நீங்காதிருக்குஞ் சாயுஜ்யபதமளித்தனள். பின்னர் சுத்யும்னன் அத்தேவியினுடைய அனுக்கிரஹத்தினால் முனிவர்களுக்குங் கிடைத்தற்கரியதும், சிலாக்கியமானதும், நாசமில்லாததுமான பதத்தை யடைந்தனன் என்றனர்.

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

காமேஸ்வர மனோஹராயை நம:

பதின்மூன்றும் அத்யாயம்

## சுத்யும்னோபாக்கியானம்

(க - ரு) சூதர் கூறுகின்றார்:—ஓ முனிகணங்காள்! சுத்யும்னனென்னும் அரசன் சுவர்க்கலோகமடைந்த பின்னர் சற்குணனும் அழகிற் சிறந்தவனும், மன்னுயிர்களைக் காப்பதில் மாண்புடையனும்,எல்லாவரங்களையும்உணர்ந்தவனுமிருந்தபுரூரவனென்னும் அரசன்தனதுபிரதிஷ்டாநகரத்தைநீதியோடு அரசாண்டுவந்தனன். அவன் தனது ரகசியம் இத்தன்மைத்தென்றுசத்துருக்களாலுணரவொட்டாமலும் சத்ருக்களதுரகசியம்தானெளிதாகவுணர்ந்தும்பிரபுத்துவசக்தி உத்சாகசத்திஆகியஇவைகள் எக்காலத்தும் நீங்காது நிறையப்பெற்றும், சாமபேத தானதண்டங்களாகிய நான்குபாயங்களால் யாவரையுஞ் சுவாதீனப்படுத்தியும், நான்கு வருணத்தவருந் தங்கள் தங்களொழுக்கங்களிற் றவராது நடந்துவரவும்செங்கோல் செலுத்திவந்தனன். இதுவன்றி அஸ்வமேதாதி அநேகயாகங்களையும் கோதானமுதலிய அனேகதானங்களையும்மாறாதுசெய்துவந்தனன்.

(சு - கரு) இந்தப் புரூரவ சக்கிரவர்த்தியினுடைய பேரரசு பெருங்குணம் பெருநடக்கைம்பராண்மைமுதலியவைகளை இந்திரனுலகிலுள்ள ஊர்வசிகேள்வியுற்று அவனைத்தான் விவாகஞ்செய்துகொள்ளவிரும்பினள். இதனையறிந்த பிரமன், தேவர்களைப்பார்த்து மோகிக்கவேண்டிய நீ மண்ணுலகிலுள்ள மானுடனிடத்தில்மோகங்கொண்டமையால் இனித்தேவலோகத்தில்வசிப்பதற்குரியளாகாய், ஆகையால்மண்ணுலகிற்போகக்கடவாயென்றுசபித்தனன். உடனே பூலோகம்வந்து தானெண்ணியவாறே புரூரவச்சக்கிரவர்த்தியைக் காந்தருவ விவாகத்தாற்கூடி கூறுகின்றாள்:-ஓ அரசனே! என்னைநீர் ஒருநாளுமறவாமல் ரக்ஷிக்கவேண்டும். இதுமுதல்நான்கொடுக்கும் நெய்யைத்தினந்தோறும்புசித்துவரவேண்டும்.வேறுபோஜனமொன்றையுங்கொள்ளக்கூடாது. என்னிடமிருக்கும் உரணங்களைஉம்மிடங்கொடுக்கின்றேன்.இதைக்கள்வரால்களவுபோகாவண்ணம்பாதுகாத்தல்வேண்டும். நீர்நிர்வாணியாயிருக்கும்போதும்வேறுஸ்திரீயோடு

சங்கமஞ்செய்யும்போதும் உம்மைப்பாரேன். யானிப்போது குறிப்பிட்ட விஷயங்களைத் தவருது நடத்துவீராகில் உம்மிடத்தில்மாருத நேசமுடையவளா யிருப்பேன். இவைகளிலொன்று தவறினும் நானும்மை விட்டுப்போய்விடுவேன். இதுசத்தியம். அரசனே! இதற்கு நீரென்னசொல்லுகிறீர் என்றுகேட்டனள். அரசன் அதற்கிணங்கியுறுதிமொழிகூறி அவளோடுவாழ்ந்திருந்தனன். இவளுடையமோகத்தினுல்தான்நடத்தவேண்டிய அரசநீதிமுதலியயாவையுங்கைவிட்டு ஒருவருமறியாமல் அநேகவருடகாலமாய் ஊர்வசியோடுஒன்றுபட்டமனமுடையனுய் ரமித்துப்போகித்துவந்தனன். அவளைவிட்டுஒருகணமேனும் பிரிந்தவனன்று. எப்போதும் உல்லாசமாய் விளையாடிக்கொண்டேயிருந்தனன். ஊர்வசியும் அரசனிடத்தில் மிக்க அன்புவைத்து அவனுக்காசைகாட்டித் தானும் இன்புற் றிருந்தனள்.

(கசு - கக) இவ்வாறு அநேககாலமாய் பூலோகத்திற்றனே இருந்துவிட்டமையால் இந்திரன் தன் சபைக்கு ஊர்வசி யில்லாக் குறையைப்பார்த்து கந்தருவர்களையழைத்து கூறுகின்றுன்:—ஓ காந்தருவர்களே! சிலநாளாய் ஊர்வசிஇங்குவராதகாரணமென்னை? நீங்களனைவருகொன்றுகூடி எவ்விதத்திலாவது அவளையழைத்து வரவேண்டும்.ஆனுல்அவள்தேவலோகத்திலிருப்பதாகக்காணவில்லை பூலோகத்தில்புரூரவச் சக்கிரவர்த்தியின் அந்தப்புரத்தி லிருப்பதாகத் தெரிகிறது.ஆகையால் அந்தஅந்தப்புரத்தினின்றுஞ் சமயமறிந்து வெளிப்படுத்திக்கொண்டுவரவேண்டும். ஊர்வசியில்லாமல் என் சபைசிறிதேனும்பிரகாசிக்கவில்லை. இவளுக்குப்பிராணனைப்போன்ற வுரணங்களைத்தக்கமுயற்சியினுல் கைக்கொள்வீராயின் அவள்வந்து சேருவளென்று கட்டளையிட்டனுப்பினன்.

(கஎ - உங) கந்தருவர் அந்தகாரமான இருள்சூழுஞ் சமயம் பார்த்து புரூரவனுடைய அந்தப்புரஞ்சென்று அந்தவுரணங்களைக் கவர்ந்துக்கொண்டு ஆகாயவழியாகச்செல்லுங்கால் அவைகள்சப்தித்தன. அதைக்கேட்ட ஊர்வசி நித்திரைதெளிந்து கந்தருவரால் உரணங்கள் போகின்றமையை யறிந்து அரசனிடத்தில் அதிககோபங்கொண்டு அரசனைக்கூவி ஓ அரசனே! இனி உன்னை விட்டுப்போவதற்குக் காலம்வந்துவிட்டதே! இப்படிவருமென்றுகூறி உன்னிடத்தில் உறுதிமொழிகேட்டிருந்தேனே! அதனை நீ மறந்தனையே! யான் உன் உறுதிமொழியைக் கேட்டுக்கெட்டுப் போனேனே! உன்னிடத்தில்அன்புபாராட்டியது வீணுயிற்றே! என் உரணங்களையும்உன்னு

விழக்கப்பெற்றேனே! அவைகளைக் கள்வரைப்போல் கந்தர்வர்கள் கொண்டுபோகின்றார்களே! அவை எனக்குப்புத்ரனுக்குச்சமானமாயிருப்பதென்றறியாயா? நீ எந்தஸ்திரீயோடு தூங்கிக்கொண்டிருக்கின்றனையோ? நீ எனக்குக் கொடுமையான புருஷனாகவாயினையே! உன்னைப்பதியாகஅடைந்து வீணாய்க்கெட்டுப்போனேனே! நீபுருஷகோடியிற் சேர்ந்தவன்றானா? உன்னிடம் சௌரியங் கிடையாதா? மானமென்பதை அடியோடுவிட்டுவிட்டனையா? என்றுபலவாறாய்க் கூக்குரலிட்டு அழுதனள். அரசன் ஊர்வசியின்சோபவார்த்தையும் அறியாமல் அப்படியே விரைவாயோடிவந்து அவளைப்பின்றொடர்ந்தனன், அத்தருணத்தில் கந்தருவர்மாயையால் ஓர் மின்னலுண்டாக்கினர். ஊர்வசி, நிர்வாணியாயிருக்கும் அரசனைப்பார்த்து அளவிறந்த கோபங்கொண்டு அந்தப்புரத்தை விட்டுப்போயினள்.

(உச - உஎ) கந்தருவரும் இவள் வருகின்றாளென்று தெரிந்து தாங்கள்கொண்டுவந்த உரணங்களைராஜமார்க்கத்தில் போட்டுவிட்டுப்போயினர். அரசன்வழியில்வீழ்ந்துகிடக்கும் உரணங்களை எடுத்துக்கொண்டு வாட்டமுற்று ஊர்வசியைக்காணமல் திகம்பரனாகவே வீடுவந்துசேர்ந்து அவளை நினைத்து நினைத்து அவள் நம்மைப்பிரிவாளா? பிரியாள். நாம் நிர்வாணியா யிருந்தமையி னாற்றான் முன் நமக்குச்சொல்லிய வுறுதிமொழிப்படி பிரிந்து விட்டனள். ஆகையால் நாமிப்போது ஆடையுடையவனாகச் செல்வோமாயின் ஒருக்கால் நேரிடமாட்டாளா, எங்கேயிருப்பாளென்று தேடுவோம் என்றழுதுகொண்டே தேசமெல்லாம் சுற்றிக்கொண்டு சரீரம்நொந்து குருக்ஷேத்திரஞ்செல்லுங்கால் அங்கு ஊர்வசியைக்கண்டுதன் றுயரமொழிந்து சந்தோஷமுடையவனாய்ச் சொல்லுகின்றான்:—

(உஅ-௩0) ஓமாதரசே! நில்லு, நில்லு. நீஎன்மனைவியல்லவா? கற்பிழந்த துஷ்டையைப்போல் என்னைவிட்டுப் போவது நீதியல்லவே. நானுனக்கு மனப்பூர்த்தியாக ஒருபிழையையுஞ் செய்த தில்லையே. எப்போதும் உனக்குவசப்பட்டவனாகவேயிருந்தேனே. உன்னைப்பார்க்கவே இப்பூவுலகமுற்றிலுஞ் சுற்றிவந்தேனேயன்றி பூப்பிரதக்ஷணஞ்செய்தவனன்றே. இங்குவந்த எனக்கு ஏதோ தெய்வச்செயலால் நீ நேரிட்டும் என்னைவிட்டுப் போவதற்கே எத்தனஞ்செய்கின்றனையே. அந்தோ! அந்தோ! நீபோவையாகில் என்பிராணனை வைத்திருப்பேனா; இவ்விடத்திலேயேபோக்கிவிடுவேன். அப்பொழுது உன்னிமித்தமாயிறந்துபோன என்சரீரத்தைகழுகுகளும் காக்கைகளும் பிடுங்கித்தின்றுவிடும்; அந்தப்பழியை நீ யடைவாய்.

அது உன்னைவிட்டுப்போகாது என்றனன். இவ்வாறு கூறிக்கூறியழுதுகொண்டிருக்கும் அரசனைப்பார்த்து ஊர்வசி கூறுகின்றாள்:—

(௩௧-௩௪) ஓ அரசனே! நீ என்ன அறிவிலியா? உன்னறிவு எங்குப்போயிற்று? பெண்களுக்குப்புருஷனிடத்தில்நேசமென்பது எது? அவர்கள் பாராட்டும் நேசம் புலிமானினிடத்தில்பாராட்டும் நேசத்திற் கொப்பானதல்லவா, இதனை நீயறியாமற்போனதுமிக்க ஆச்சரியமே. பெண்களிடத்திலும் கள்வரிடத்திலும் நல்லகுலத்துதித்த அரசன்நேசம்பாராட்டுதல் கூடாதென்பதல்லவோ நீதி. நீதி மறந்த வுன்னைப்பார்த்தேன். இனி நீ என்முன் நிற்காதை. உன்னரன்மனைக்குச் செல்லக்கடவாய். வீணாய்வருந்துவதனாற் பயனென்னை என்று பலவாறாய்த் திக்கரித்துச் சொல்லினள். அரசனதனையுணர்ந்து தெளியாது தாசியின் மோகவலையிற் சிக்கிக்கொண்டு தீராத துக்கத்திலாழ்ந்திருந்தனன். முனிவர்களே! ஊர்வசியின்சரித்திர மிகப்பெரியது, ஈண்டுச் சுருக்கிக்கூறினேன் என்றனர்.

பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

காமேஶ்வர ப்ராண நாட்யை நம:

பதினான்காம் அத்தியாயம்.

## சுகோற்பத்திவரலாறு.

---

(௧-௭) சூதர் கூறுகின்றார்:—ஓமுனிவர்களே! புரூரவ சக்கிரவர்த்தியைத்துயரத்திலாழ்த்தியஊர்வசி என்னும் வேசி வியாசராச்சிரமஞ்சென்றுகூக்குரலிட்டு அழுதுகொண்டிருந்தனள். வியாசமுனிவர் அவளைப்பார்த்து, இக்கன்னிகைதேவகன்னியாயிருத்தல்வேண்டும், இவளைநாம்அங்கீகரிப்பது தகுதியன்று, இவளைவிடுவதுங்குணமன்று, இதற்கென்செய்வேன், என்றிவ்வாறு சிந்தித்திருக்குந் தருணத்தில், நிவர்த்திசெய்துக்கொள்ளலாமென்றெண்ணி அவள் சுக கிளிரூபங்கொண்டு அதிகபக்தியோடு சிங்காரமாயங்குமிங்கும் உலாவினள். அதைக்கண்ட வியாசர்வியப்படைந்துகாமமீதூர்ந்து மயிர்ப்புளகங்கொண்டு மனங்காமவழியிற்செல்ல அதைத் தன்னறிவாற் கூடியவளவில் உள்ளடக்கியும் தன்னுளடங்காமல் அவளுள்ளொடுங்கிமோகவலையிற் சிக்கிக்கொண்டுழலும்போதுதாம்செய்யத்

தருவதாகிய அக்னிகாரியத்தைச் செய்யவேண்டுமென்கிற அறிவு தோன்றி அரணியில் மத்தைப்பூட்டி அக்னியை வெளிப்படுத்த விடாது கடையுங்காலத்தில் இவரது வீரியமானது அந்த அரணியில் சிதறியது. சிதறியதனல் அக்னிக்கு அநுசிதமுண்டாயிற்றென்று சிந்தித்து மீளவும் விடாது கடைந்துகொண்டிருந்தனர்.

(அ-கசு) அச்சமயத்தில்அவ்வரணியிலிருந்து இவரைப்போலுமோர்புத்திரன்றோன்றினன். புத்திரனைக்கண்ணுற்றவியாசர், ஆனந்தமடைந்து அரணியிலுண்டான இவன்மகாபரிசுத்தன், இவனுற்பத்தியாவராலும் வியக்கத்தக்கது, என்றுநினைத்துக்கொண்டே அவ்வரணியினின்றும்அக்கினியைவெளிப்படுத்தினர். அவ்வக்னிநெல்முதலிய அவிசுகளையுட்கொண்டுமேலோங்கிஎழுவதுபோல் அதிகமாய்ச்சுவாலித்துவலஞ்சுழித்தெழுந்தது. வியாசர்அதைப்பார்த்துஅநுசிதமுண்டாயிற்றே என்றெண்ணிய ஐயத்தினின்று நீங்கிமிக்கஆனந்தமடைந்து இது சிவபெருமான் தந்தவரத்தின் பெருமைதானே, இந்தவரணியிற்றோன்றியதேஜோரூபமானபுத்திரன் இரண்டாவது அக்னிபோற்சுவலித்துக்கொண்டிருக்கின்றானே, இவனல்லவோபுத்ரன் எனவியப்புற்று அக்குழந்தையைத் தழுவிக் கையிலெடுத்துக்கொண்டு கங்கையில் ஸ்நானஞ்செய்து மீண்டுந்தன்னாச்சிரமமடைந்து சுகரூபியான ஊர்வசியைக்கண்டு மோகங்கொள்ள இப்புத்திரனுண்டானமையால்சாதகாதிகர்மங்களைச்செய்து சுகன்என்றுபெயரிட்டனர். ஆகாயத்திற் புஷ்பமாரிபொழிந்தது. தேவர்கள் துந்துபி முதலிய பஞ்சவாத்தியங்களை முழக்கினர். தேவதாசிகள் நடித்தனர். கந்தருவர் பாடினர். நாரதர் முதலியருஷிகள் ஆசீர்வதித்தனர். உலகத்திலுள்ளவர்களெல்லாம் ஆனந்தசாகரத்தில் மூழ்கினர். அத்தருணத்தில் ஆகாயத்தினின்றும் தண்டமும் கமண்டலமும் கிருஷ்ணசனமும்வியாசருக்கருகில் வீழ்ந்தன. அதைச்சுகரொடுத்துத் தரித்துக்கொண்டனர். பின்னர்வியாசர் சுகருக்கு உபநயனஞ்செய்தனர். உடனே சுகர்அதிக தேஜஸுடன் வளர்ந்து வேதங்களையும் வேதாந்தங்களையுந் தன்பிதாவைப்போலுங்கற்றுணர்ந்தவராயினர்.

(உ0 ௩௩.) வியாசர் சுகருடைய தீக்ஷண்யபுத்தியைக்கண்டு, நமது குமாரனாகிய சுகமுனிவன் பிரமசரியாச்சிரமத்தையடைந்து குருகுலவாசஞ்செய்து சர்வசாஸ்திரங்களையுங் கற்றுணர்ந்து, பின்னர் இல்லறதருமத்தை வந்தடையவேண்டுமென்றெண்ணும்பொழுதுபிரகஸ்பதிபகவான் அங்குவந்தனர். அவரைக்கண்டவுடன் தனது ஞானபுத்திரனை அவரடிபணியச்செய்து அவர்பின்னேடனுப்பினர்

சுகர், பிரகஸ்பதிபகவானை உபாத்தியாயராகவைத்துக்கொண்டுவேத வேதாந்தங்களையும் தருமசாஸ்திரங்களையும் நன்றாய்க் குருகுலவாசஞ்செய்து கற்றுணர்ந்து குருதக்ஷிணையுங் கொடுத்துத் திரும்பித் தன் தகப்பனாரிடம் வந்தனர். வியாசர், சர்வசாஸ்திர சம்பந்நனான புத்திரனைக்கண்டதும் அன்போடெழுந்திருந்துவிரைவாயாலிங்கனஞ்செய்துஉச்சிமோந்து இனியமொழிகூறி,கல்விநலமுசாவி, தமது ஆச்சிரமத்திலேயே யிருக்கச்செய்து பின்னர் விவாகஞ்செய்விக்க வேண்டுமென்கிற எண்ணமுடையவராய் ஒரு முனிகன்னிகையை விசாரித்து சுகரைப்பார்த்துக் கூறுகின்றார்:—ஓ மேதாவி! நீ தர்ம சாஸ்திரமுதலியவைகளைநன்றாய்க்கற்றுணர்ந்தவன். உனக்கு யான் அதிகமாய்ச்சொல்லவேண்டுவதில்லை. நீ இப்போது நல்லலக்ஷணமான கன்னிகையைவிவாகஞ்செய்துகொண்டுகிருகஸ்தாச்சிரமிகள் செய்யவேண்டியதேவயஜ்ஞம்பிதுர்யஜ்ஞம்முதலியகர்மங்களைமனைவியுடன்செய்துபிதுர்க்கடனினின்றும்என்னைவிமோசனஞ்செய்துவை. புத்திரனில்லாதவனுக்கு சுவர்க்கமில்லையென்றுதர்மசாஸ்திரங்கூறுகின்றமையால், நீ கிருகஸ்தாச்சிரமத்தை யடைந்து என்னைச் சுகிக்கச்செய்வாய். பிரமசரியத்தைநிறைவேற்றினதுபோல்கிருகஸ்தாச்சிரமத்தையும் நிறைவேற்றிவிட்டுப் பின்னர் தவம்புரியச்செல்வாய். யான்உன்னைப்புத்திரனாயடைவதற்கு அநேககாலம்தவம்புரிந்தேன். பின்நீ அயோநிஜனாகவும் மேதாவியாகவும்தேவதாரூபியாகவும்பிறந்தாய்,உன் தந்தையான என்னை,கிருகஸ்தாச்சிரமமடைந்துகாப்பாற்றுவாய் என்றனர். இவ்வாறு கூறிய் இல்லறவிருப்பமுடைய தந்தையைப்பார்த்துஅதில் விருப்பமில்லாத சுகர் கூறுகின்றார்:—

(நஉ-உரு) ஓ மேதாவியரானதர்மஜ்ஞரே! நீர் என்னசொல்லுகின்றீர். நான் உம்முடைய மகனாயினும் நன்மார்க்கத்தில்பிரவேசிக்கும்படிக் கட்டளையிட்டால் அந்தப்படிசெய்வதற்கு அதிகவிருப்பமுடையவனாவேன். வேறுமார்க்கத்தைக் கூறுவீராயின்நானெப்படி விரும்புவேனென்றனர்? வியாசர்,கூறுகின்றார்:— ஓகுழந்தாய்!யான் நூறுவருடம் கோரமான தவம்புரிந்து அதிக கஷ்டத்துடன் சிவாராதனையுஞ்செய்துஉன்னைப் புத்திரனாகப்பெற்றேன். ஆதலால் என்னிஷ்டத்துக்குவிரோதஞ்செய்யாதை.உனக்குப்பொருள்வேண்டுமாயின் அரசனையாசித்துவேண்டியபொருள்சம்பாதித்துக்கொடுக்கிறேன். அதைவைத்துக்கொண்டுமனைவியோடுயௌவனத்தில்நல்லசுகத்தை யனுபவித்துக் கொண்டிருவென்றுகூறினர். சுகர் கூறுகின்றார்:—ஓபிதாவே! இம்மானுடவுலகத்தில் விசாரமற்ற சுகமென்பது

எது நீர்? கூறிய சுகம், முன்னர் சுகம் போற்றேன்றிப் பின்னர் ஆ ருத்துயரந் தருகின்றது. இப்படி துக்க பரம்பரைக்கிடமாயிருக்கிற இல்லறவாழ்க்கையை அறிவுடையோர் சுகமென்றுகூறுர். உம்மு டைய சொற்படி ஒரு பெண்ணை விவாகஞ் செய்துகொண்டால் அப் பெண்ணுக்குயான் வசப்பட்டிருக்கவேண்டும். பிறருக்குட்படிந்திரு க்கின்றவனுக்குச் சுகமென்பது உண்டாகுமா? உண்டாகிறதேயில் லை. அதிலும் ஸ்திரீ வசப்பட்டவனுக்குச் சுகமுண்டாகிறதென்பது விந்தையினும் விந்தை. அப்படி அறிவின்மையால் ஸ்திரீ வசப்பட் டவன் புத்ர பௌத்திரர்களாகிற இருப்புவிலங்குகளில் கட்டப் பட்டு ஒருநாளும் அவ்விலங்கினின்றும்விடுபடுகிறதில்லை. இத்தேகம் மலமூத்ராதிகளால் செய்யப்பட்ட பிண்டமாயிருக்கின்றது. இது போலவே பெண்கள்தேகமுமிருக்கின்றது. இப்படிப்பட்டசரீரத்தில் என்ன சுகமுண்டாகப்போகிறது. இதில் வித்வான் பிரீதிவைப்பதற் குச் சம்மதியான். ஓ பிதாவே! யான் யோனியிற் பிறவாதவன். அப் படிப்பட்ட எனக்கு இத்தகைய அற்பவிஷயங்களில் மனம் பிரவே சிக்கச்சம்மதியாது. ஆதலால், உம்முடைய சொல்லைக்கேட்டுமண ம்புரிந்து இனியோனியில் ஜனிக்கும்படியான காரியத்தைச் செய்ய மாட்டேன். மலமூத்திரத்தில் சுகிக்கயான் விரும்பேன். அற்புதமான ஆத்மசுகத்தை யநுபவிப்பதற்கே என்விருப்பம். அந்தப்படி, ஆத்ம சுகத்தை அனுபவிப்பனேயாயின், கர்ப்பவாசஞ்செய்துயோனிவாயி லாக ஜன்ம மெடுக்குந் துக்கத்தை யனுபவிக்காமலிருப்பேன், யான் பிரதமத்தில் ஆத்ம சுகத்தைத்தரும்படியான வேதவேதாந்தங்களை விஸ்தாரமாய்க் குருவினிடத்தில் படித்தேன். இப்போது உம்மிடத் தில் கர்மமார்க்கப் பிரவர்த்திகளான இம்சையான பாடங்கள் படிக் கும்படி நேர்ந்தது. எனக்கு வாய்ந்த பிதா குரு ஆகிய உங்களிருவ ரிடத்திலும்நன்மார்க்கத்தைக்காணேம். என்னுசிரியரோ, நீர் கூறிய இந்தச்சம்சாரசாகரத்தில் நன்றாய் முழுகிக்கிடக்கிறீர். இது அஞ் ஞானமல்லவா? இப்படி அஞ்ஞானத்தால் கவரப்பட்டபிரகஸ்பதி, என்னைக்கடைத்தேறச் செய்வதற்கு எப்படி திறமைசாலியாவர்? ரோகத்தால் பீடிக்கப்பட்ட வைத்தியன் எப்படிப்பிறருக்குரோகசி கிச்சை செய்வதற் காளாவான்? அதுபோலென்க. ஆயினும் அவர் உம்மைநோக்க நல்லவரே. ஏனெனில் சமுசாரத்தில் மூழ்கினவரா யிருந்தும் மோக்ஷமடைய விருப்ப முடைய வெனக்கு அதற்கேது வான நிலையைக் கூறினரேயன்றி உம்மைப்போல்கிருகஸ்தநிலையைக் கூறியதில்லை. நீர் என்பிதாவாக விருந்துந் துன்பந்தரும் கிருகஸ்த

தருமத்தை யுபதேசிக்கின்றீர். இதுபயனற்ற உபதேசம். எனக்குத் தத்வோபதேசஞ் செய்து சம்சாரமாகிற கொடிய பாம்பின்வாயிற் புகவொட்டாது காப்பது உமது கடமை. இக்கோரமான சம்சாரம் சக்கரம்போல் சுழன்றுகொண் டிருக்கின்றது. சூரியனிரவிலும் பகலிலும் உழன்றுவருகின்றானே யன்றி இளைப்பாறுத லெப்படியில்லையோ அப்படியே அச்சம்சார சக்கரத்தில் அகப்பட்டுக் கொண்டவனுக்குச் சுகத்திற்கிடமேயில்லை.

(சஎ - ருச) ஓதந்தையே! விசாரிக்குமளவில் இதில்சுகமென்பது ஒரு சிறிதாயினுமிருக்கின்றதா? அமேத்யத்திற் கிருமியுழன்று சுகிப்பதுபோல் மாதர்களுக்கு இச்சம்சாரத்தில் சுகபுத்தியுண்டாகிறது. சம்சாரத்தில் அதிக ஆசைவைப்பவரெவர்களோ அவர்களைவிட மூடர் ஒருவருமில்லை. அப்படிப்பட்டவர் பன்றிக்கும் நாய்க்குஞ் சமானமானவர். பெறுதற்கருமையான மானுடசரீரத்தையெடுத்து வேதசாஸ்திரங்களையும்விதிப்படி அத்யயனஞ்செய்துசம்சாரமாகிய பாசத்தாற் கட்டுப்பட்டால் அந்தக் கட்டைவிடுவிப்பதற்கு எவன்சாமர்த்திய முடையவன். புத்திரனிடத்திலும், தாரத்தினிடத்திலும், வீட்டினிடத்திலும், மிக ஆவல் கொண்டபண்டிதன் இந்தவுலகத்தைவிட மேலானபரலோகமொன்றுமில்லையென்றுமதிமயங்கிக் கூறுகின்றான். அவன் விசேஷமாய்க் கற்றுணர்ந்தவனாயினும் அவன் அறிவில்லாதவனே. எந்தமனிதன் பெண்களாகிறமாயவலையினாற் கட்டப்படவில்லையோ அவனேவித்வான், அவனேமேதாவி, சாஸ்திரபாரங்கதன். (எல்லையுணர்ந்தவன்.) வேதத்தையுருவேத்திப்பாடம்பண் ணுவதனாலென்னபயன். சம்சாரபந்தத்தினின்றும் விடுபடும்படியான பாடத்தைப்படிப்பதுதான் பயன். பாசத்தினாற் கிரஹித்துக் கட்டி யிருக்கச்செய்வது எதுவோ அதுகிருகஸ்தமெனப்பெயர்பெறும். அதனையுடையவன் கிருகஸ்தன். அப்படிப்பட்ட பந்தத்தில் என்னைப்பிரவேசித்துச்சுகிக்கும்படி உபதேசிக்கின்றீரே. அதிலுண்மையில் சுகமிருக்கின்றதா? ஆகையால் அதில்பிரவேசிப்பதற்குமிகவும் பயப்படுகிறேன். எவர்கள் வேதசாஸ்திரங்களைக்கற்றுணர்ந்தும்மந்தமதிகளாயிருக்கின்றார்களோ அவர்கள் வினையினால்கவரப்பட்டவர்களே. அவர்கள் அந்தகிருகஸ்தாச்சிரமத்தையடைந்து மீண்டுமீண்டும் ஜன்மமெடுப்பதற்கு வித்தை நாட்டிப்பந்தப்பட்டிருப்பர் என்றனர். இவ்வாறுகூறியசுகரைப்பார்த்து வியாசர்கூறுகின்றார்:—

(ருரு - சுக) ஓகுழந்தாய்! நீகிருகதாச்சிரமத்தைமந்தமதிகளுக்கும், வினையினால்கவரப்பட்டவர்களுக்கும், ஆலயமென்றுகூறினாய

ல்லவர்? அதைஅப்படிக்கூறுவதற்குகாரணமொன்றுமில்லை. ஒருவன் கிருகஸ்தாசிரமத்திலிருந்தும் மனதில்பற்றில்லாதிருப்பானுனல்முத்தனுவான். அன்றி அவ்வாச்சிரமத்தில் நியாயவழியாய்ப்பொருளைச் சம்பாதித்து, வேதத்தில் விதித்த கர்மங்களைக் கிரமப்படி செய்யுஞ் சிரத்தையுடையவனும், சத்யசந்தனும், ஆசாரசீலமுடையவனுயும் இருப்பானுயின் அவன் அப்பந்தத்தினின்றும்விடுபடுவானென்பதில் தடையேதுமில்லை. அன்றி, பிரமசாரியும் வானப்பிரஸ்தனும் சந்நியாசியும், மத்தியானவேளையில்கிருகஸ்தரை நாடிச்சீவிக்கின்றூர்கள். நீதியிலொழுகும்கிருகஸ்தாச்சிரமிகளும் தங்கள் வீட்டைநாடி வந்தமேற்கூறியமூன்றுச்சிரமிகளையும், பக்தியினுலேயும், அன்னதானத்தினுலேயும் இனியசொற்களினுலேயுமுபசரிக்கின்றூர்கள். ஆதலால் இல்லறத்தைவிட மேலானதருமமொன்றுமில்லை. அப்படியிருப்பதாய்ச் சொல்லப்படவுமில்லை. அக்காரணம்பற்றியே, வசிட்டர்முதலிய பெரியோர்களினுலேயும், ஞானிகளினுலேயும் அதனை அங்கீகரிக்கப்பட்டது. வேதத்தில் விதித்த கர்மத்தை வழுவாமற் செய்கிறவனுக்குச் சாதிக்கக்கூடாததுஎதுவிருக்கிறது. சுர்க்கமோ மோக்ஷமோ, நல்லசன்மமோ, இவற்றுள் எதனைவிரும்புகின்றுனோ அதுவருகின்றது. தர்மவித்துகள்கூறும்விதிஎன்னவெனில், ஒவ்வொரு ஆச்சிரமத்தையுந் தவறுமல் கொள்ளவேண்டுமென்பதேயாகும்

(கூஉ-எக) ஆதலால், கிருகதாச்சிரமத்தை யடைந்து, தேவர்களையும், பிதுர்க்களையும், மாநுடர்களையும், விதிப்படிதிருப்தியடையச்செய்யும்படியானகர்மங்களைச்சோம்பலின்றிச்செய்து, உன்மனைவியோடுகூடி, சத்புத்திரனைப்பெற்று, அவனைகிருகஸ்தாச்சிரமத்தில் சேர்த்துவிட்டுப்.பிறகு அந்தஆச்சிரமத்தைப்பரிகரித்து, வானப்பிரஸ்தாச்சிரமத்தையடைந்து, அதற்குக்கூறியவிரதத்தையநுட்டித்து, அந்த ஆச்சிரமத்திற் சிலகாலமிருந்து, பின்னர் சந்நியாசஆச்சிரமத்தை யடைவாய். ஹே புத்ரா! இந்திரியங்களையும் மனசையும் வெல்வது இல்லறத்திலீடுபடாதவனுக்கு முடியாது. ஆதலால் அவைகளை வெல்வதற்காகவேகலியாணஞ்செய்துகொண்டு, அவைகளைவென்று பின்னர் வார்த்திகதிசையில்தவம்புரியவேண்டுமென்பது, சாஸ்திரங்களிற் கூறப்படும் நிச்சயம். ஓ புத்திரனே! விஸ்வாமித்திர முனிவர், மூவாயிரவருடம்அகோராத்திரமாய்க்கோரமானதவம்புரிபவராயிருந்தும் மேனகையைக் கண்டவுடன் மோகித்து அவ்வனத்திலேயே சகுந்தலையென்னும் புத்திரியைப்பெற்றனரல்லவா? எனக்குப் பிதாவானபராசர், வலைஞர்மகளாகிய மற்சகந்தியைக்கண்டு மோகித்து

அப்பெண்ணைச் சுவாதீனப்படுத்திக்கொண்டுஓடத்திலேயேயிருந்தனர். பிரமன்தன்புத்திரியினிடத்தில்மோகங்கொண்டோடித்திரிந்து மூர்ச்சையடைந்து பின்னர் சிவபெருமானால் தெளிவடைந்தனன். ஆதலால் இவைகளையெல்லாம் நீநன்றாயாலோசித்து என்சொற்படி நல்ல குலத்திலுதித்த கன்னிகையை மணம்புரிந்து வேதசம்பந்தமான கர்மங்களைச் செய்வாயாக என்றனர்.

பதினான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

காமேசோத்ஸங்கவாசின்யைநம:

பதினைந்தாம் அத்தியாயம்.

## சுகர் சம்சார நிந்தாதி கதனம்.

(க-கூ) சுகர், தன்பிதாவாகியவியாசரைப்பார்த்துக்கூறுகின்றார்:— ஓ தந்தையே! யான்எப்போதும்எல்லாமனிதர்களுக்குந்துயரத்தைத் தருவதாயும், மிருகத்தைப்பந்திக்கின்றவலைபோன்றதாயுமுள்ளகிருகஸ்தாச்சிரமத்தில் ஒருநாளும்பிரவேசிக்கமாட்டேன். பொருளிலாசையுடையமனிதர்களுக்குச்சுகமென்பது ஏது? பொருளில்லாதவனைப்பந்துக்களெப்போதும்நெருங்கிப்பீடிப்பார்கள். சந்நியாசியானவன், எல்லாவற்றையும்விட்டொழிந்தமையால், அவனைப்போல், சுகிஇந்திரனுமாகான். இந்தச்சம்சாரபந்தத்திலிருப்பவனுக்குத்திரளானபொருணிறைந்திருந்தாலும்மேன்மேலும்பொருள்விருத்தியடையவேண்டுமென்றேவிரும்புவனேயன்றித்திருப்தியடைகிறதில்லை. இந்திரன்மூன்றுலகங்களுந் தன் சுவாதீனத்திலிருக்கும்படியான சம்பத்தைப் பெற்றிருந்தும பிறர்கோரமான தவம்புரிவாராயின் தனது இந்திரபட்டம் போய்விடுமே என்கிறஅச்சத்தால்அவர்களுக்கு அளவிறந்த இடையூறுகளைச் செய்கின்றான். இது சம்சாரபாசத்திலுண்டான துக்கமல்லவா; இதுபோலவே பிரமனும் சரஸ்வதியை மணம்புரிந்து ஒரு சுகத்தையு மடைந்தவனன்று. விஷ்ணுமூர்த்தி லக்ஷ்மியையடைந்ததனாலென்னசுகத்தைப் பெற்றார்? அந்தவிஷ்ணுமூர்த்தி, அசுரர்களோடு போர்புரியும்ஒவ்வொரு சமயத்திலும்லக்ஷ்மியை எந்த அசுரனாவது அபகரித்துக்கொண்டு போய்விடுவானோ என்பதாதிதுக்கங்களையனுபவித்துக்கொண்டேயிருக்கின்றார். அன்றி, அசுரர்களைச் செயிப்பதற்காகக்கோரமான தவங்களைச்செய்து, சொல்லமுடியாத கஷ்டங்களையெல்லாம்அநுபவிக்கின்றார். விஷ்ணு

வுக்குலக்ஷ்மி, மனைவியாயிருப்பதால், அவருக்கிருக்கும் சம்பத்துக்களவில்லை. அப்படிப்பட்டதிரளானசம்பத்திருந்தும் நல்லசுகத்தையநுபவிக்க முடியவில்லை. இவர்களேதுக்கத்தை யநுபவிப்பராயின், சாமான்யர்களான தனஹீனர்களுக்கு, இல்லறத்தில் சுகம் எப்படியுண்டாகும்? ஓ தந்தையே! யான், உமதுரேதஸாக்குஜனித்தேனென்பதை நன்குபறிவேன். அக்காரணத்தையே முக்யமாகவைத்துக்கொண்டு என்னைக்கோரமானசம்சாரவலையில்சிக்கிக்கொள்ளும்படிக்கட்டளையிடுகின்றீர்.

(௧0-௨0)சென்மமெடுப்பதே துக்கம். எடுத்துவிட்டால், பின்னர்கிழத்தன்மைவந்துவிடுமே என்பதில்துக்கம். அது வந்தபின்னர் மரணத்தில்துக்கம். அதுவுஞ்சமீபித்தபொழுது, புனர்ஜன்மம்வருமென்கிறதுக்கம். அதுவருங்கால்மலமூத்திரமயமான கர்ப்பவாசத்தில் அதிகதுக்கம். அதன்பின்னர் நமக்கு எல்லா ஐஸ்வர்யங்களும் நிரம்ப இருக்கவேணுமென்பதில் துக்கம். அது இல்லாவிட்டால், யாசகஞ்செய்து வாங்கிய பொருளினால்பிழைப்பதுபுத்திபலமில்லாதவர்செய்யத்தக்க சீவனமென்கிறதுக்கம். பிறர்வாழ்ந்திருப்பதைப்பார்க்குந்தோறுந் தனக்கில்லையே என்கிறதுக்கம். இவையன்றி யமபாதைநினைக்குநிமிஷந்தோறுமுண்டாகுந்துக்கம். இத்துக்கங்கள் நீங்கத்தக்கதன்று. கிருகஸ்தாச்சிரமத்தில் புகுந்தவன்சகலசாஸ்திரங்களுணர்ந்தவனாலும்யாவருக்கும்இஷ்டனானாலும், பொருளில்லாதவனாயிருப்பானாயின், தனிகர்களுடைய வீடுதோறுஞ்சென்றுதலையிறங்கிஇச்சகம்பாடியாசிக்கவரும். ஆகையாலிதைவிட்டு ஏகாகியாயிருப்பனாயின், வயிற்றைப்போஷிக்கவேண்டியதைப்பற்றியோசிக்கவேண்டியதில்லை. ஏனென்றால், ஆரணியம் விஸ்தாரமாயிருக்கின்றது. அதில்கனிவர்க்கங்களும், இலை காய் கிழங்குகளும், ஏராளமாகவிருக்கின்றன. யாதினாலாவது தன்வயிறு நிறையும்படிச்செய்துகொள்ளலாம். மனைவி புத்திரபௌத்திராள்சகோதரர்பந்துவர்க்கங்கள் அதிகமாகஇருக்குமாயின் இவர்களுடையவயிற்றை நிரப்புவதற்குஅதிகமானமுயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும், இதுதுக்கத்திலும்பெருந்துக்கந்தானே. இப்படியிருக்க, இதைச்சுகமென்றுஎப்படிக்கூறலாம். ஆதலால் எனக்கு யோகசாஸ்திரத்தையும், சன்மார்க்கத்தையும்எடுத்துச்சொல்லும். இதுதான் சொல்லுதற்கரிதான சுகத்தைத்தரத்தக்கது. கர்மகாண்டத்தைப்பற்றி, எவ்வளவுபுகழ்ந்துரைப்பினும்அதில்என்மனம்விருப்பங்கொள்ளாது. இனி, நீர்கர்மமூலமாகிய ஆகாமியசஞ்சிதப்பிராரத்தங்களானமூன்றையும்ஒழிக்குமுறை

யையேவிதிப்படிக்கூறும். அட்டையைப்போல்எப்போதும்புருஷர்களுடையரக்தத்தை ஸ்திரீகள்பானஞ்செய்கிறார்களென்கிறவிஷயத்தை மூடர்களறியாமல் அவர்களுடைய அங்கசேஷ்டைகளைக்கண்டு மோகிக்கிறார்கள். ஸ்திரீகள் போகத்தினால்மலத்தையும்செல்வத்தையும்சொற்சாதுரியத்தினால்மனதையும்அபகரிக்கிறார்கள்.ஃஸ்திரீயோடுசிநேகம்செய்கிறவன்எல்லாமகத்துவத்தையும்இழக்கின்றான். ஆதலால் இதைவிடவேறு என்ன வைரி இருக்கின்றது? மூடன் நித்ராசுகத்தை இழப்பதற்காகவே மணம்புரிகிறான். ஆனால் அவன்அது கெடுகிறதென்கிறதையறிகிறதில்லை. மாயையால் அவன்துக்கத்தைச்சுகமென்றெண்ணி மோசம்போகிறான் என்றனர்.

(உக-௩ரு) இவ்வாறுசுகர்கூறிய சொற்களைக்கேட்டவியாசர் அதிக துக்கத்தையடைந்து, கண்ணீர்சொரிந்து, வேர்வையரும்பி, இனி நான் என்செய்யப் போகின்றேனென்றுசோகமாயினர். சுகர் தந்தையைப்பார்த்து நகைத்துக்கூறுகின்றார்:—ஆ! இதுஎன்னஆச்சரியம். மாயையின் வலி மிகக்கொடியதுகொடியது. பண்டிதராகிய இவரும், மாயைக்குட்பட்டுத்துயரப்படுகின்றாரென்றெண்ணி, ஓ தந்தையே! நீர்பிரம சூத்திர முதலியவேதாந்த சாத்திரங்களையியற்றினவர். எல்லா முணர்ந்தவர். உம்மிடத்தில் இக்கொடியமாயையானது எப்படிவசிக்கிறதோ அறியேன். இதையோசிக்குங்கால் அது கொடிதென்பது சொல்லாமலே யமையும். பண்டிதராகியஉம்மைக்கூட மோகிக்கச்செய்கிறதல்லவா? நீர் வேதங்களையும் வரையறுத்தவர். புராணங்களையும்பாரதத்தையுமியற்றினவர். நீர் இப்படிப்பட்ட மோகத்தை யடைகிறீர்.ஃபிரம விஷ்ணு ருத்திராதிகளும் அந்த மாயைக்கு வசப்படுவாராயின் ஏனையரைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ, மூன்றுலகத்தினும்மாயைக்குட்படாத மேதாவியர்எவரிருக்கின்றனர். ஆகையால், மாயையின் வலிவு இவ்வளவென்றுசொல்லவியலுமா. அதனது செளரியம் எத்தகையதோ? இது தேவியினால் எப்படி உற்பத்தி செய்யப்பட்டதோ? அது மூன்றுலகத்தையும் எப்படி மோகிக்கச் செய்கின்றதோ? யானறியேன். சர்வஜ்ஞான ஈஸ்வரனும் இதை மாற்றாம லிருக்கின்றனரே. ஆகையால், அந்த மாயையை யாள்கின்றதேவியையான் சரணமடைகின்றேன். அவள் எனக்குத்தக்க ஞானோபதேசத்தைச் செய்தருளுவள். புராணிகர் வியாசரை விஷ்ணு அம்சமாகக் கூறுகின்றார். இவரும்மாயாசமுத்திரத்தில், மூழ்கிப்போன வோடத்தை யுடைய வணிகர்போல மூழ்கித் தத்தளிக்கின்றனரே! கண்களில் பாமரசனங்களைப்போல்

தாரை தாரையாய் நீரைச் சொரிகின்றனரே! அந்தோ! இவர் கற்றுணர்ந்த அறிவால் மாயையை வெல்ல சாத்யப்பட வில்லையே! இதன் வன்மையே வன்மை இவர்யார்? யாம்யார்? நம்மைப்பற்றி இத்தகைய ப்ரமத்தையடைவானேன்? பஞ்சபூதங்களா லாக்கப்பட்ட தேகத்தில், தகப்பனென்றும், பிள்ளையென்றும் உண்டாகும்படியான பாசம் மாயையினாலன்றோ? இந்தமாயை மிகவலுவானதே. மகான்களையு மோகிக்கச்செய்கிறதே. அந்தோ! இவர் இந்தத்தேகமாயைக்கு வசப்பட்டு வெட்கமின்றி யழுகின்றனரே? என்றிவ்வாறு சுகர் மனதில் ஆலோசித்துக் கொண்டு, எல்லாவற்றிற்குங் காரணியாயும் இந்திராதிதேவர்களுக்கும், பிரமாதிகளுக்கும், மஹேஶ்வரியாயுமிருக்கின்ற அம்பிகையை நன்றாய்த் தியானித்து, துயரக்கடலில் மூழ்கிக் கரை காணாது திகைத்துக் கொண்டிருக்குந் தந்தையைப் பார்த்து, விவேகத்தோடுகூடிய வசனத்தைக் கூறத் தொடங்கினர்:—

(௩௬-௪௨) ஓ பிதாவே! நீர் அறிவிலிகளுக்கு அறிவைவிளக்கும்போதகாசிரியரல்லவா? அத்தகையநீர், துயரப்படுவானேன்? நீர்படுகிறதுயரம் ஒன்றுமறியாதபிராகிருதருக்குண்டாகுந் துயரம்போலிருக்கின்றதே. யானிந்தச்சன்மத்திலுமக்குப் புத்திரனாகப்பிறந்தேன். இதற்கு முந்தியசனனத்தில் எவருக்குப்புத்திரனோ அறியேன். நீர்யார், யான்யார் பரமாத்மாவினால் இத்தகையபிரமையெல்லாங்கற்பனைப்பட்டுவருகின்றது. இனியாவது, மனதைத்தைரியப்படுத்திக் கொண்டு விழித்துப்பாரும். வீணான விஷயத்தில் துயரப்படும்படி மனதை விடாதேயும். இவையெல்லாம் மாயையின் கூற்றெனத் தெளிந்து துயரத்தைவிட்டொழிப்பீராக. ஒருவனுக்குப்பசியுண்டாகுமாயின் அதற்கேற்ற ஆகாரத்தை யுட்கொண்டாற் றீருமேயன்றிப் புத்திரனைப் பார்ப்பதாற் றீருமா? தாகமெடுக்குங்கால் சலபானஞ் செய்தாற் றீருமேயன்றிப்புத்திரனைப்பார்ப்பதினாற்றீருமா. மூக்கு, வாசனையினாற்சுகிக்கின்றது. செவி, இனியவோசையினாற்சுகிக்கின்றது. ஸ்திரீசுகம், ஸ்திரீயினாலேயே யுண்டாக வேண்டும். யானோ பிள்ளை, என்னால் என்ன சுக முண்டாகும். நான் என் செய்வேன். அரிச்சந்திரன்செய்யத் தொடங்கியவேள்விக்குஅஜீகர்த்தர் தன்புத்திரனையாகபசுவாகத்திரளான திரவியத்துக்குவிற்றுவிட்டனர் ஆதலால், சுகங்களுக்கெல்லாஞ் சாதனமாயிருப்பதுசெல்வம். செல்வத்திற்றான் சுகமிருக்கின்றது.

(௪௩-௪௭) அப்படி உமக்குச்சுகம்வேண்டுமாயின்பொருளைச் சம்பாதியும்; யானோ புத்திரன். என்னாலெப்படிச் சுகமுண்டாகும்

ஓ தந்தையே! நீர்சிறந்தஞானியல்லவா? எனக்குநல்லஞானமுண்டாகும்படிச் செய்யும். இப்போதுநீர் உத்தேசிப்பதுமீண்டும்எனக்குக் கர்ப்பவாசமுண்டாகாமைக்கேயாகவேண்டும். கர்மபூமியான இவ்வுலகில் மானுடசனனமெடுப்பது அருமையினும் அருமை. அதிலும் பிராமணசன்மம் எடுப்பது மிகவும்அரிது அதிலும்உத்தமகுலத்திலுதிப்பது அதனினுமரிது. அதிலும் எனக்கு மீண்டும் கர்ப்பவாசமுண்டாகாமலிருக்கவேண்டுமென்கிறநிச்சயபுத்திபுண்டானதுஎவ்வளவு அரிதானதோ அதைநீரே அறிந்துகொள்ளும். நான்கட்டுண்டவனுனேனென்கிற புத்தியானது என்னைவிட்டுச்சிறிதுமகலவில்லை. என்னைப்பற்றியமாயையானது,ஜன்மஜன்மாந்திரங்களில்அளவிறந்ததுன்பங்களை யனுபவிக்கச் செய்து, கிழத்தன்மையை யடைந்து இப்போதுஎன்னைவிட்டுவிலகிப்போயிற்றுஎன்றனர். இவ்வாறு மீண்டுங்கூறக்கேட்டவியாசர், இவன்நல்லபரிபாகியாயுள்,சந்நியாச ஆச்சிரமத்திலேயே அதிக ஊக்கமுடையவனுயுமிருக்கின்றுன்; இனி இவனுக் கிரண்டாவது ஆச்சிரமத்தைப் பற்றிவிசேடமாய்க் கூறுவதிற்பயனில்லையென நினைத்துச் சுகரைப்பார்த்துக் கூறுகின்றுர்:—

(௪அ-௯எ) புத்திரனே! யான் பாகவதமென்கிற சுருக்கமான புராணமொன்றிபற்றியிருக்கின்றேன். அது, வேதசம்பந்தமானது. பன்னிரண்டுஸ்கந்தங்களோடு கூடியது. ஸர்க்கம், பிரதி ஸர்க்கம், வம்சம், மந்வந்தரம், வம்சானு சரிதம்என்று கூறப்படும்ஐந்துலக்ஷணங்களோடு கூடியது.எல்லாப்புராணங்கட்கும்மகுடமாய்விளங்கத்தக்கது. இதைக்கேட்டமாத்திரத்தில் சதசத்தாகிய ஆத்மவிசாரஞ் செய்யும் நல்லறிவு உண்டாகும். அதை நீ இப்போதுபடிக்கத்தொடங்குவாயாக. ஓர்காலத்தில், விஷ்ணுமூர்த்தி அரசிலையின் மீது பாலரூபத்தோடு படுத்துக்கொண்டுஅடியில்வருமாறு ஆலோசிக்கத் தொடங்கினர். “யான்யாதுகாரணம்பற்றிச்சிதாத்துமாவினுல்பாலரூபனுய்இதிலடைக்கப்பட்டேன். இந்த வுலகத்தை எந்தக்கருவியினுல் எவ்விதமாயறிகிறேன்” என்றிவ்வாறு ஆலோசித்துக்கொண்டிருக்க, அவரதுசந்தேகம்நிவிர்த்தியாமாறு அம்பிகைஎல்லாப்பொருளும்அடங்கியிருக்கிறஒருபாதிசுலோகத்தைக்கூறினள்:—“காணப்படும்இவ்வுலகமெல்லாம்யானே, என்னைத்தவிர அனுதியானதுவேறென்றுமில்லை” என்பது அதிலுள்ளபொருள் அந்தசுலோகத்தைக்கேட்டு விஷ்ணு, இவ்வரியபொருளோடுகூடியசத்தியமானசொல் யாரால்கூறப்பட்டது? பெண்ணுல்கூறப்பட்டதா? புருடனுல்கூறப்பட்டதா? நபும்ஸகனுல்கூறப்பட்டதா? இதனைஎப்படியறியமுடியும்

என்று ஏக்கமுற்றிருக்குந் தருணத்தில், இந்தப் பாகவதச் செய்யுளாகிய அந்தப் பாதிச்செய்யுள், அவருடைய ஹ்ருதய கமலத்திற் றரிக்கப்பட்டு, அடிக்கடி உச்சரித்துக்கொண்டே வடபத்ரத்தில் சயனித்துக் கொண்டிதன்பொருளை விசாரித்திருந்தனர். அப்போது அம்பிகை சாந்தையாயும் சங்குசக்கர கதை பத்மம் என்கிறஆயுதங்களை புஜங்களில் தரித்தவளாயும், திவ்யவஸ்திராபரணலங்கிருதையாயும் தனக்குச்சமானமான வசின்னியாதி சகிகளால் சூழப்பட்டவளாயும், அளவற்றவொளியையுடையவளாயும், விஷ்ணுவினெதிரில் நின்று, மந்தகாசஞ் செய்தனள். இவளைக்கண்ட மகாலட்சுமியும், தேவியென்றுணராது, புன்னகைசெய்து மலர்ந்த முகமுடையவளாயினள். அவ்வாறே, விஷ்ணுமூர்த்தியு முணராது அற்புத வேஷத்துடன் ஆதாரமில்லாமல் பாற்கடலில் நின்றுகொண்டிருக்கும் அம்பிகையைப்பார்த்து அதிக ஆச்சரியமடைந்து சிரித்தனர். மற்றொரு கணத்துக்குள், அந்த அம்பிகையின் பக்கங்களில் ரதி, புத்தி, பூதி, கீர்த்தி, ஸ்மிருதி, திருதி, ஸ்ரத்தை, மேதை, ஸ்வதை, ஸவாஃ, நித்திரை, தயை, துஷ்டி, புஷ்டி, க்ஷமை, லச்சை, ஜ்ரும்பை, தந்திரை முதலிய சக்திகள் நானாவிதமான ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டும் அநேகவிதமான ஆபரணங்களை அலங்கரித்துக் கொண்டும், சாதி முதலிய புஷ்பமாலை, முத்துமாலை முதலிய மாலைகளைத் தரித்துக்கொண்டும், அந்தப் பாற்கடலிலேயே தோன்றினர். இவைகளையெல்லாங் கண்ட விஷ்ணு அளவிறந்தஆச்சரியமடைந்து இதனை யாலோசிக்கலாயினர்:— இதுஎன்ன மாயை, கண்டவர்களுக் கெல்லாம் வியப்பைத் தருகின்றது. இந்தப் பெண்கள் எப்படி உண்டானார்கள்? இப் பரிவாரங்களோடு நிற்கின்றவள் நம்மாதாவா? அல்லது மாயையா? இதனுண்மையறிய முடியவில்லையே. யாதுகாரணம்பற்றி இங்கு இவர்கள் காணப்பட்டனர்? இது விஷயத்தில் என்னாற் சொல்லத்தக்கது என்ன விருக்கிறது. இவர்களிங்கிருக்க வேண்டியவரோ, போகவேண்டியவரோ, ஒன்றுந் தெரியவில்லை, நாம் சிறுவனைப்போல் மௌனமாயிருத்தலே நலமென்றிருந்தனர்.

பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

## பதினாறும் அத்தியாயம்.

காமேஸ்வர சுகப்ரதாயைநம:

# தேவீபாகவதோத்பத்தி ஸ்வரூப கதனம்.

(க - கரு) வியாசர் கூறுகின்றார்:—மகாலக்ஷ்மி, விஷ்ணுமூர்த்திவடபத்திரத்தில் சயனரூபியாய்ப் புன்னகையோடு கூடியிருப்பதைப்பார்த்துக் கூறுகின்றாள்:—நீர் என்ன சிரித்துக்கொண்டிருக்கின்றீர். மகாசக்தியுடைய மாயாப் பிரபாவத்தினால், இங்கேதோன்றிய தேவியை, தேவியென்றுணராது நகையாடுகின்றீர். அப்பராசத்தி, இவ்வுலகம் லயமடைந்து சிருட்டியாகுந்தோறும் சகுணையாய் (வடிவமுள்ளவளாய்) ஆவிர்ப்பவிக்கின்றாள். யான் அவளுடைய சகுணை; என்னை, சாத்வீக சக்தி அம்சமா யறிந்து கொள்வாய். உன் நாபிக்கமலத்தில்பிரமனுதிக்கப் போகிறான். அவன் தவம்புரிந்துஒப்பில்லாத ராஜஸ சக்தியோடு கூடி, செந்நிறமுடையவனாய் பூவுலகத்தைப் படைப்பான். அப்பிரமன் தனது புத்திவிசேஷத்தால் பஞ்சபூத சம்பந்தமான உருவங்களையும், இந்திரியங்களையும், அறிகருவிகளான மனமுதலியவைகளையும், முன் வினைக்குத் தக்கவாறு கூட்டிமுடித்தலாகிய உற்பத்தியைச் செய்துவருவா னாதலால், சிருஷ்டிகருத்தா வென்று கூறப்படுவான் நீரோ, அவனால் படைக்கப்பட்ட இவ்வுலகத்தைக் காக்கின்றவ ராவீராதலால், காவற்கடவுளெனப் பெயர்பெறுவீர். அந்தப் பிரமனுடைய புருவநடுவிலிருந்து, உக்கிரத்தோடு கூடிய * உருத்திரமூர்த்தி தோன்றி, கோரமான தவம்புரிந்து தாமச சக்தியுக்தராய், கற்பாந்த காலத்தில் எல்லாவற்றையுஞ் சங்கரிக்கும் சம்ஹார கர்த்தராவர் ஓ விண்டுவே! பிரமனுக்கும், உருத்திரமூர்த்திக்கு முரிய சக்திகளைக் கூறினேன். உனக்குச் சக்தியாரெனில், சாத்வீக சக்தியாகிய யானே யென்றறிவீர். யான், எப்போதும் இந்த சாத்வீக வுருவத்தோடுமே உன்சமீபத்தில் வசிப்பேன். அந்த சமீபத்தானம் எதுவென்றால் உன்னுடைய ஹ்ருதயமாகும்என்றனள். விஷ்ணுமூர்த்தி வினவுகின்றார்:—ஓ தேவி! யான்முன்னர் நல்ல பொருளமைந்த பாதி சுலோகமொன்று கூறக்கேட்டேன். அது யாரால்கூறப்பட்டது? அதை எனக்குச் சொல்லவேண்டும். அதில் பெருஞ் சந்தேகமிருக்கின்றது. தனமில்லாதவன், எப்படி சார்வகாலமுந் தனத்தையே சிந்தித்துக் கொண்டிருப்பானோ அப்படியே யானும் அடிக்கடி சிந்தித்துக்கொண்டிருக்கிறேன் என்றனர். இவ்வாறு கூறிய விஷ்ணுவின் வசனத்தைக் கேட்டமகாலக்ஷ்மி சொரூபியாய் வந்த தேவி, நகைத்து அதிகபிரேமையோடு கூறுகின்றாள்:—

* இவர்காலாந்தங்களைச் சங்கரிக்கும் மஹா ருத்திரரன்று, பிரகிருதி தத்வபுவனங்களைச் சங்கரிக்கின்ற குணருத்திரரென்றறிக.

(கூ - ௩க) ஓ விஷ்ணுமூர்த்தியே! என் சொல்லைக் கேட்பாயாக. என்னை, நீ இப்போது கண்ட சகுணசொரூபமாக அறிந்தனையே யன்றி, நிர்குணையென வறிந்தாயில்லை. அறிந்திருப்பையாயின், அந்த சுலோகம் யாரால் சொல்லப்பட்டதென்று கேட்கமாட்டாய். அது நிற்க, நீகேட்பது பகவதியால்சொல்லப்பட்டபாகவதசாரமாம். இதிற்சந்தேகம்வேண்டாம். அதில்பாகவதத்தின்தாத்பரிய விசேஷங்கள் தெளிவுபடுத்தியிருக்கிறது. ஆகையால் அது வேதசாரமான பாகவதமென்றே அறிந்துகொள்ளலாம். உனக்குத் தேவியின் கிருபை மிகவும் விசேடமா யிருந்தபடியினால் பாகவதத்தின் ரகஸ்யாமிசத்தைக் கூறினள். அதனை நீர் மறவாமல் மனத்திலிருத்தி எப்போதும் நினைத்துக்கொண்டிருக்க வேண்டும். இது, எல்லா சாஸ்திரங்களிலும் ரகசியமான அமிசம். இதைவிட சிறந்தசாத்திரங்கள்மூவுலகினுமில்லை என்றனள். அதைக்கேட்டவிஷ்ணு, பாகவத சாரமான அம்மந்திரத்தை அநுதினந் தியானித்துவந்தனர். இவ்வாறு சிலகாலஞ்சென்ற பிறகு அந்த விஷ்ணுவினுடைய நாபிக்கமலத்தி லுற்பவித்த பிரமன் மதுகைடப ருடைய பீதியினால் அவரைச்சரணமடைய உடனே மதுகைடபரோடு போர்புரிந்து, சங்கரித்துவிட்டு, பின்னர் பாகவதசார மந்திரமாகிய பாதி சுலோகத்தைச் செபித்தனர். அவ்வாறு செபித்துக்கொண்டிருக்கும் விஷ்ணுவை, பிரமன்பார்த்து, நீர் என்னசெபஞ் செய்கின்றீர்? உம்மைவிட மேலான தெய்வ மொன்றிருக்கிறதா? நீர்செபிப்பதால், உம்மைவிடச் சிறந்ததெய்வ மிருப்பதென்பது நிச்சயம். அது எது? என்றனன். விஷ்ணுமூர்த்தி கூறுகின்றார்:—ஆம் அப்படியேசிறந்ததெய்வ மொன்றிருக்கின்றது. என்னிடத்திலும் உன்னிடத்திலும் தொழில்களையியற்றுஞ்சக்தியொன்றிருக்கிறதல்லவா? அது,இத்தன்மைத்தெனவிசாரித்துப்பார்ப்பாய்.அத்தகைய சிவ சக்தி சொருபமாய் விளங்கும் அம்பிகையே, நம்மிருவருக்கும் மேலான தெய்வம். அத்தேவியை ஆதாரமாக வைத்துக் கொண்டிருப்பதனாற்றான், இப்பூவுலகமும் சலமயமான சமுத்திரத்தில் விளங்கிக்கொண்டிருக்கிறது. அவளது பெருமையானது இப்படிப்பட்டதென்று ஒருவராலுங் கூறமுடியாது. அவள் தான், ஆதியந்த ரகிதமான மேலான தெய்வம். அவளாற்றான் தாவர ஜங்கம ,மாத்மகமான இவ்வுலகம் படைக்கப்படுகிறது. அவளது கருணையினாற்றான், மானுட ஜன்மமெடுத்தோர் முத்திபெறவேண்டும். அதள்தான், முக்திக்கதிஷ்டான தேவதை. பந்தத்தில் கட்டுண் டுழல்வதற்கும், அவள்தான் தாரகம். யாமும், இப்பிரபஞ்ச மனைத்தும், அவளது சிற்சத்தியாற்றோற்றப்பட்டவர்களே. இதிலையமொன்று மில்லை. இதனை யதார்த்தமென் றுணர்வாயாக. அவ்வம்பிகை, என்னிடத்தில்

கருணைகூர்ந்து பாகவதசாரமான அர்த்த சுலோகத்தை உபதேசித்தனள். அந்த சுலோகார்த்தமானது, துவாபர யுகாரம்பத்தில் விஸ்தாரமான பாகவதமாகப் போகின்றது என்றனர். இவ்வாறு கூறியவுடனே, பிரமன், அப்பாகவதசார மந்திரத்தை அவரிடத்திலுபதேசம் பெற்றனன். அவர் தன் புத்திரனாகிய நாரதருக்குபதேசிக்க அவர், என்னிடத்தில் கருணைவைத்துபதேசித்தனர். அவரது கிருபாபலத்தினால், துவாபரயுகாதியில் அந்த பாதிசுலோகார்த்தத்தைப் பன்னிரண்டு ஸ்கந்தமாகச் செய்தேன். இதனை, நீ என்னிடம் உபதேசம் பெற்றுக்கொண்டு படிப்பாயாக.

(௩௨-௩௯) இது, பஞ்ச லக்ஷணத்தோடு கூடினதாயும், அம்பிகையின் லீலாவினோதாதி சரித்திரங்களடங்கினதாயும், தத்துவ ரகசியங்கள் நிறைந்ததாயும், எல்லாப் புராணங்களிலுஞ் சிறந்ததாயும், தருமசாத்திரத்துக் கொப்பானதாயும், வேதார்த்தப் பிரதிபாதகமாயும், விருத்திராசுர வத சரித்திரமுதலிய அநேக சரித்திரங்களடங்கியதாயும், பிரமவித்தைக்கு ஆதிகாரணமாயும், சம்சார சமுத்திரத்தைத் தாண்டிவைப்பதாயு மிருக்கின்றமையால், இதனை நீ என்னிடம் உபதேசம்பெறுவாயாக. இதற்கு, நீ தான் யோக்யனாவாய், இதை நீ இடைவிடாமற் பாராயணஞ் செய்துவருவாயாக. இது பதினெண்ணாயிரஞ் சுலோக சங்கியையுடையது. அஞ்ஞானத்தை நசிக்கச்செய்வது. மேலான ஞானமென்னுஞ் சூரியனைப்பிரகாசிக்கச்செய்வது. சுகத்தையும், செல்வத்தையும், ஆயுள் விருத்தியையுந் தரத்தக்கது. இதைப் படிப்பவர்களுக்கும், கேட்பவர்களுக்கும், புத்திரபௌத்திர தனதானியாதி சம்பத்தைத் தரத்தக்கது. இப்புராணசங்கிதை, உன்னுடன் எவர் படிக்கின்றாரோ அவர், எனக்குச் சீடராவர் என்றனர். சூதர் கூறுகின்றார்:—இவ்வாறு இப்புராண சங்கிதையை, வியாசர் தன்புத்திரனாகிய சுகருக்குபதேசித்த பின்னர், ஓ முனிவர்களே! எனக்குபதேசித்தனர்.

(௪0-௪அ)வியாசர் ஆசிரமத்தில் அதுமுதல் அச்சுகர் பாராயணஞ்செய்து கொண்டு இதற்குப் புறம்பான கர்மமொன்றுஞ் செய்கிறதில்லை. தன் சுகத்தையும்நாடுகிறதில்லை. ஏகாந்தத்திலேயேயிருப்பர். அதிகமாக ஆகாரமுங்கொள்ளார். உபவாசத்திலேயே விருப்பம். அவரைப் பார்க்கும்போதெல்லாங் கேவல ஞானநிஷ்டராகவே தோன்றுவர். தனக்கு வேண்டுமென்றொன்றையும்விரும்பார். யாவரையும் வேற்றுமையின்றிச் சமமாக நினைப்பர். எக்காலத்திலும் சிந்தா சக்தராகவேயிருப்பர். இவ்வாறு சுகமுனிவரிருப்பதைக்கண்ட வியாசர் கூறுகின்றார்:—அப்பா குழந்தாய்! நீ யாதுகாரணத்தால் சித்தாகுலனாகவும். எங்குப் போவோமென்று துவரிதப்பட்டுக்கொண்டிருக்கிறவனாகவும், காணப்படுகின்றாய்? அன்றி, கடன்கார

ரால்பிடிக்கப்பட்ட நிர்த்தனனைப்போல், சர்வகாலமும் ஏக்கமுற்ற வனாயு மிருக்கின்றாய். அத்தகைய வியாகுலம், யானிருக்கும்போது உனக்கெப்படி வந்தது? இனி விசனப்படுவதை யொழித்து, இஷ்டப்படி வேண்டியசுகங்களை அனுபவிப்பாய். ஞானசாஸ்திரத்தை சாத்திரவிதிப்படி அநுஷ்டிப்பாய். மேலான ஞானவழியில் அறிவைச் செலுத்துவாய். என்னுடைய உபதேசத்தால் உனக்கு மனமொடுக்கம் உண்டாகாமற் போனால் சனகமகாராஜனால் பரிபாலித்துவரும் மிதுலாபட்டினஞ் சென்று அவரைக்கண்டு அவருடன் சிலகாலம் பழகிவருவையானால் அவர் உனது அஞ்ஞானத்தை யொருங்கே யொழித்துவிடுவர். அவர் சாமானியமானவரல்லர், தர்மபுத்தியுடையவர், சத்யசந்தர், ஜிதேந்திரியர், அவரை யாவரும் விதேகரென்று கூறுவர். அப்படிப்பட்ட மஹாத்மாவானசனகரையடைந்து, உனது ஐயத்தை யெல்லாம் நிவிர்த்தித்துக்கொள்வாய். அவர் சீவன்முத்ததிசையிலிருப்பவர், தெளிவானபிரமஞானமுடையவர், நல்ல சீலர், ராஜரிஷி, மிகவும் சாந்தகுணமுடையவர், யோகியென்றனர்

(சகூ-சுக) வியாசரது இதவார்த்தைகளைக்கேட்டசுகர்வினவுகின்றார்:—ஓ பிதாவே! நீர்கூறிய சனக சக்கிரவர்த்தி, அதிகமான டம்பமுடையவரென்று என்மனத்திற் றோன்றுகின்றது. அவரை நீர் ஜீவன்முக்தரென்றும், விதேகரென்றும் தர்ம சாஸ்திரப் பிரவீண ரென்றுங் கூறியது, மலடி மைந்தன் கதைபோலிருக்கிறது. அவர் ராஜ்யத்தைப் பரிபாலித்துக்கொண்டிருக்கும் போதே விதேகரெனக் கூறிய விஷயத்தில் எனக்குச் சந்தேக முண்டாகின்றது. அப்படிப்பட்ட விதேகரான அரசனைப் பார்ப்பதற்கு எனக்கு அதிக விருப்ப முண்டாகிறது. சம்சாரத்தில் தாமரையிலையி லிருக்கும் நீரைப்போ லெப்படி யிருக்கமுடியும். இதை யோசிக்குங்கால் சம்சயமுண்டாகின்றது. ஓ தந்தையே! மோக்ஷமென்பது என்னை? அநுபவித்தும் அநுபவிக்காம லிருப்ப தெப்படி? இந்திரியங்களுடைய தொழில்களை விலக்குவதெப்படி? தாய், புத்திரன், மனைவி, உடன்பிறந்தார், வியபசாரி இவர்களிற் பேதாபேதம் எப்படி யுண்டாகாமற்போகும். உண்டாகுமானால் முக்தலக்ஷண மென்பது எப்படி? கசப்பு, உவர்ப்பு, தித்திப்பு, புளிப்பு, காரம், முதலிய ரசவர்க்கங்களை நாவு அறியுமாயின் போகத்தை யநுபவிக்கிற தாகிறது. சீதம், உஷ்ணம், சுகம், துக்கம், இவை தோன்றாமலிருப்பது எப்போது? முக்தனாக விருப்பது எப்படி? முக்ததிசை யடைந்திருக்குங்காலத்தில் சத்ருவையும் மித்ருவையும் எப்படி யறிவது? சத்ருவானவன், நன்மையைச் செய்வான்போல் நடிப்பானாயின் அவனை எவ்வாறறிவது? விவகாரதிசையில் மிக வூக்கமில்லாதவனாயின் அதனையெவ்வா றறிந்து கொள்

வன்? சோரனையும், தபசியையும் சமானமாக யெப்படி எண்ணு வன்? சமானமான புத்தியுடையவனல்லவோ முக்தனுவன். ஆகை யால் அரசரில், ஒருவனுவது சீவன் முக்தனுக விருப்பனென்று யானிதுவரையிற் கேட்டதில்லை. அன்றியும், கிருகஸ்தாச்சிரமத்தி லிருந்தவண்ணமே முக்தனுவா னென்கிற விஷயத்தில் மேன் மேலு மெனக்குச் சந்தேக முண்டாகிறது. ஒருவன் அரசனுக விருந்தே ஜீவன்முக்தனுக விருக்கிருனென்று நீர் குறிப்பிட்டுக் கூறினமையால் அந்தச்சந்தேகத்தை யொழித்துக் கொள்ள அவ் வரசனிருக்குப் மிதுலாநகரம் செல்லுகின்றேன் என்றனர்.

பதினுரும் அத்தியாயம்.

முற்றிற்று.

---

உ

காமேஶ்வர சுகப்ரதாயைநமஃ

பதினேழாம் அத்தியாயம்.

## * மிதுலாம்பிரதி சுக கமனம்.

---

(க-டு) சூதர் கூறுகின்றார்:—இவ்வாறு சுகமுனிவர் வினவித் தன் றந்தையை நமஸ்கரித்து கைகூப்பி நின்று கூறுகிருர்:—யான் மிதுலைக்குப் போகவிருக்கின்றேன். என்றந்தையே!சனகசக்ரவர்த்தி சனங்களைத் தண்டிக்காமலே நீதி வழியினிறுத்திஆண்டுவருகின்ரு னென்றுகூறினீர். எந்தராஜ்யத்தில் பிரஜைகளிடத்தில்தண்டத்தை அரசன் செலுத்தாமலிருக்கின்ருனே, அந்த ராஜ்யத்தில் பிரஜை கள் நீதிமார்க்கத்தில் சரியாகச்செல்லமாட்டார்கள். மநுமுதலிய தருமசாஸ்திரங்களில், அரசன் தன்றேயத்தில்தருமம் நிலைக்கவேண் டுமென்றெண்ணுவானுயின், அதுநிலைப்பதற்குத் தண்டமே முதற் காரணமெனக்கூறப்பட்டிருக்கிறதல்லவா? இங்ஙனமிருக்க, மிதுலா நகரத்தில் தண்டமில்லாமற் பிரஜைகள் நீதியில் நிற்கின்றார்களென் பதையோசிக்குங்கால், இதோ இருக்கின்ற எனதுதாய்மலடியெனக் கூறுங் கதைபோலிருக்கின்றது. ஆகையால் இவ்வற்புதத்தைப் பார்க்க விரும்புகின்றேனுகையால் அங்கு செல்ல விடைதரவேண்டு மென்றனர்.

(கூ-கஅ) வியாசர், புத்திரனைக்கட்டித் தழுவிக்கொண்டு கூறு கிருர்:—ஓ குழந்தாய்,உனக்குமங்களம் உண்டாகுக, நீசிரஞ்சீவியா யிருக்கக்கடவாய். எனக்குறுதியான வார்த்தை யொன்று சொல்லி விட்டு, உன்னிஷ்டம்போற் போய்வருவாய். அஃதாவது நீபோய்

---

* மிதுலாபுரிக்கு சுகர் செல்லுதல்.

வரும்போது, என்னுச்சிரமம்வந்து சேரவேண்டும். இதைவிட்டு வேறோரிடமுஞ் செல்லக்கூடாது. இதுதானெனக்குச் சொல்ல வேண்டிய உறுதிமொழி. இதுகாறும் உனதுமுகத்தைப் பார்த்துக்கொண்டே சந்தோஷமாய்க் காலங்கழித்து வந்தேன். இது முதல் உன்னைக்காணுமளவும், உன்முகம் பாராமையாகிய துக்க சாகரத்தில் மூழ்கிக்கிடப்பேன். என்பிராணன் நீதான். நீஇங்கிருந்து சனகனிடஞ்சென்று சந்தேகங்களை நிவிர்த்திக்கொண்டு, இங்கு வந்துசேர்ந்து வேதாத்தியயனஞ்செய்துகொண்டே காலத்தைச் சுகமாய்க் கழிப்பா யென்றனர். சுகமுனிவர் வியாசமுனிவரை பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து, வில்லினின்றும் வெளிப்பட்ட பாணம்போல், அதிவேகமாய் வெளிப்பட்டு, அநேக தேசங்கள், நதிகள், ஆரணியங்கள்புண்யக்ஷேத்திரங்கள், தபோவனங்கள், ஆகிய இவற்றைக் கடந்து, அங்கங்கு தவம்புரிகின்றவர்களையும் யாகஞ்செய்கின்றவர்களையும் யோகிகளையும் வானப் பிரஸ்தர்களையும் பாசுபதர்களையும் சாக்தேயர்களையும் தரிசித்துக்கொண்டு இரண்டு வருடத்தில் மேருவையும் ஒருவருடத்தில் ஹிமாசலத்தையுந்தாண்டி சர்வசம்பத்துக்க ணிறைந்துள்ளதும் சதாசார நிரதர்களான அந்தணர்களாற் சூழப்பட்டதுமானமிதுலாநகரத்தை யடைந்து சுற்றிப்பார்த்து வருந்தருணத்தில்அங்குஒருகாவலாளி என்வந்தாய்? உனக் கிங்கென்ன காரியம்? சொல்லென்று கேட்கப்பதிலொன்றுங்கூறாதுமௌனமாயிருந்தனர்.

(கஃ - உக) இருக்கவே, அவன் நகர வாசற்படியிற் றள்ளிக்கொண்டுவந்துவிட அவ்வாசற்படியிலேயே கட்டையைப்போல் நின்று நகைத்துக்கொண்டு பேசாதிருந்தனர். காவலாளி வினவுகிறான்:—நீஎன்ன ஊமையா? எவ்வளவுகேட்டும் பதிலொன்றும்பேசுவதில்லை, பேசாத நீஇங்கு யாதுகாரணம்பற்றிவந்தனை? எவ்வளவு மூடனுனாலும் ஒருகாரியமின்றி ஓரிடமுஞ் செல்லான். அது நிற்க யாவராயினும் இந்நகரத்தில் பிரவேசிக்க வேண்டுமானல் அரசனுத்தரவு வேண்டும். ஊர் பெயர் தெரியாத புதுமையானவன் இந்நகரத்தில் பிரவேசிக்கக்கூடாது. உன்முகத்தைப் பார்த்தால் பிரமதேஜஸு ஜொலிக்கிறது. வேதவித்தகனைப்போலுங்காணப்படுகின்றது. ஆகலான் இனியாவதுகுலம் பெயர் ஊர் வந்தகாரியம் ஆகிய இவையிற்றைச் சொல்லிவிட்டு உன்னிஷ்டம் நகரத்துக்குட் செல்வாயென்றனன்.

(உஉ-உகூ) சுகர் அவனைப்பார்த்துக்கூறுகின்றார்:—ஓ துவாரபாலகனே! யான் எந்தக்காரியத்தை யுத்தேசித்து இவ்விடம் வந்தேனே அந்தக்காரியம் உன்வார்த்தையினல்கைகூடிவிட்டது. நகரத்துட்பிரவேசிப்பதே துர்லபமா யிருக்கும்பொழுது என் காரியத்தைச் சொல்வதினுற் பயனென்னை? என்னறிவின்மையால்

அந்தோ! இரண்டுமலைகளை வெகு கஷ்டப்பட்டுத் தாண்டி வழிதெரியாமற் றிரிந்தலைந்து வருத்தத்துடன் அரசனைப் பார்க்கவேண்டுமென்னும் அவாவினா லிங்குவந்தேன். வந்தகாரியம் வீணாயிற்று. என் தகப்பனார் என்னை வஞ்சித்தனர். பிறரைப்பழிப்பதிற் பயனென்னை? யான் எவ்வளவு திரியவேண்டுமோ, அவ்வளவுந் திரிந்தாயிற்று. ஓரிடத்திலும் இவ்வளவு கடுமையான சொல்லைக் கேட்டறியேன். தனத்தில் விருப்பமுடையவனுக்கு; உலகத்தைச் சுற்றித்திரிவதும், ஒவ்வோ ரிடத்திலும் இச்சகம்பேசிப் பொருளைத் தேடுவதும் இயற்கை எவற்றிலும் ஆசையற்றவனுக்கு சுகந் தானாகவே யமையுமல்லவா? அவன் வீணாகக் கண்டவிடங்களிற் றிரிவது அறிவின்மையன்றோ, எனக்கோ பொருள் தேடவேண்டுமென்றாவது, அதனால் விஷயசுகத்தை யனுபவிக்கவேண்டு மென்றாவது, விருப்ப மிருக்கின்றதோ வெனின்? ஒருசிறிதுமில்லை. அப்படியிருக்க நான் அரசனைக் காணவேண்டுமென்று பேராவாகொண்டு தேசம்விட்டுத் தேசம்வந்து பயனற்றுப் போயினேனே. இதைவிட அறிவின்மையான செய்கை என்ன விருக்கின்றது. மேருபர்வதமெங்கே? மிதிலைநகரமெங்கே? இதற்கும் அதற்கும் எவ்வளவுதூரமிருக்கின்றது. இவ்வளவு தூரமுங் காலால் நடந்து வந்தேனே? அப்படிவந்தும் என்ன பலன்கண்டேன், யான் மிகவும்தெய்வத்தினால் வஞ்சிக்கப்பட்டவ னானேன். நன்மையாயினும், தீமையாயினும் வருவது வந்தேதீரும். பிராரத்தம் அவசியம் அனுபவிக்க வருமென்பது நிச்சயம். புருஷப் பிரயத்தனமும், அதற்கொத்ததாகவே யிருக்கும். இவ்விடத்தில் தீர்த்த மிருக்கின்றதா? வேத மிருக்கின்றதா? ஒன்று மில்லையே. இவ்வலைச்சலில் எனக்குச் சிரமந்தான் பிரயோஜனம். இது பிராரத்தந்தானே? இந்நகரத் தரசனோ தன்னகரத்தில் ஒருவரும் பிரவேசிக்கக் கூடாதென்று கட்டளையிட்டிருக்கின்றான் என்றனர்.

(௩௦-௩௫) இவ்வாறு சுகர் பலவாறாய் மனவருத்தத்துடன் சொல்லிவிட்டுமௌனமுற்றிருக்க, இதைக்கேட்ட துவாரபாலகன். இவரைச் சிறந்தஞானியென்றறிந்து, அதிக விநயத்தோடுகூறுகின்றான்:— ஓ!பிராமணோத்தமரே இனி உம்மிடம் என்னதிகாரத்தைச் செலுத்துவேனாயின் என்குலம் நாசமாய் விடும். ஆதலான் நீர்எங்கு செல்லவேண்டுமோ அங்குசெல்லலாம். உமது காரியத்துக்கு என்னால் ஒருதடையும் வேண்டாம். இது வரையில் என்னாலுண்டான அபராதத்தைப் பொறுத்தருளல் வேண்டும். நம்மைப் போன்ற மகான்களுக்குப் பொறுமையன்றோ சிறந்த பூஷணம் என்றனன். சுகர் கூறுகிறார்:—ஓ துவாரபாலகனே! உன்பேரில் சினங்கொள்ளக் காரணமென்னை? நீ பராதீனனன்றோ. சேவகன் பிரபுவின் உத்திரவின்படி காரியத்தைச் சரிவர நடத்தவேண்டியது நீதிதானே. இவ்

விஷயத்தில் அரசனைப் பழிப்பதுந் தகுதியன்று. சோரன் பகைவன் முதலியோர் நகரில் பிரவேசிக்காமற்காப்பதே புத்திமான்களிலக்கணம். பிறராஞைக்குட்பட்ட பிரதேசத்தில் சுலபமாய்ப் பிரவேசிக்க எண்ணியது அறிவின்மை யாதலால், இவ்விஷயத்தில் என்னிடத்திற்றான் குற்ற மிருக்கின்றது என்று அவனுக்குச் சமாதானங் கூறினர்.

(௩௧ ௫௫) அவன், ஓ சுகமெது? துக்கமெது? சத்ரு எவர்? மித்ரு எவர்? சுபத்தை யபேக்ஷிக்கிறவனாலே செய்யத்தக்கது என்ன? இவற்றைநன்றாய்ச் செல்லவேண்டுமென்றுகேட்கச் சுகர்கூறுகின்றார்:— எல்லாவுலகத்திலும் இரண்டுவிதமிருக்கிறது; அதி லிருக்கும் பிரஜைகளும் அராகி விராகி என இரண்டுவிதமாயிருக்கின்றனர். அவர்களுடைய சித்தமும் இரண்டு விதம். இவற்றுள் விராகி என்பவர் அறிந்தவர், அறியாதவர், அறிந்தும்அறியாதவர் எனமூன்றுவிதமாயிருப்பர். ராகி என்பவர், மூர்க்கர், சதுரர்எனஇரண்டுவிதமாயிருப்பர். அந்தச் சதுர்ப்பாடு சாஸ்திரவிசாரத்தால் வருவதாகியசாமர்த்தியம், புத்தி ஸூக்ஷ்மத்தால் வருவதாகியசாமர்த்தியம் என இருவிதம். அந்தப்புத்தி, யுக்தம் அயுக்தமென இரண்டுவிதம் என்றுகூறிவரும்பொழுது துவாரபாலகன் கூறுகின்றான்:— ஓபிராஹ்மணோத்தமரே! நான் அர்த்த ஞானமுடையவனல்லன். ஆகையால் நீரிப்போது கூறிய சொற்களுக்குப்பொருள் நன்றாய்விளங்கவில்லை. ஆகலான், சற்றுத் தயவுசெய்துவிளங்கச்சொல்லவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனன். சுகர்கூறுகின்றார்:—எவனுக்குச்சம்சாரத்தில் விருப்பமிருக்கின்றதோ, அவன் ராகி எனப்படுவன். அவன்றான்எல்லாவற்றிலுமோகமடைகின்றமூர்க்கன். அவனுக்குச்சுக துக்கங்கள் அநேக விதங்களாகவிருக்கின்றன. என்னவென்றால், தனம் புத்திரன், செல்வம், மனைவி, மானம், விஜயம் முதலியவற்றையும், காரியசாதனத்தையும்பெறுவதினாற்சுகமும், அதைப்பெறாததனாற்றுக்கமும், நிமிஷந்தோறும்மாறிமாறிவந்துகொண்டே இருக்கின்றன அவனது செய்கையெல்லாம்சுகத்தையடையவேண்டுமென்கிறவிருப்பத்தையடைந்திருக்கிறது. அச்செய்கைக்கு மாறானசெய்கைகளை யியற்றித் தடைப்படுத்துகிறவன் சத்ருவாகின்றான். அச்செய்கைக்குச் சாதகனாயிருக்கிறவன் மித்ரனாகிறான். விராகி, விஷய சுகங்களொன்றிலும் ஆசைவையாமல் ஏகாந்தத்தில்வேதாந்தவிசாரஞ்செய்து ஆத்மசுகத்தையநுபவித்துக்கொண்டிருப்பன். அவன்றான்எந்த விஷயத்திலுமோகமடையாத பண்டிதன். அவனுக்கு சம்சார வாழ்க்கையின் சுகமெல்லாந் துக்ககரமாகவேயிருக்கும். ஆயினும் அப்படி ஆத்மசுகத்தைநாடுகின்றவனுக்குக்காமக்குரோத லோபமத மாச்சரியமுதலிய கொடியசத்ருக்கள்பலவுண்டு. இப்படிப்பட்டசத்

வியாசரே! நீர் என்னை வினவிய வினாக்களுக்கு என்பிதா எனக்குச் சொல்லிய வண்ணஞ் சொன்னேனென்றார். வியாசர் நாரதரிடத்தில் தெளிந்தவண்ணம் ஜனமேஜயனைப்பார்த்துக் கூறுகின்றார்.

(ருடு-சஅ) ஓ அரசனே! இதுவரையில் தேவி பிரமனுக்குச் சொல்லியதும், பிரமன் நாரதருக்குச் சொல்லியதும், நாரதர் எனக்குச் சொல்லியதும் முறையாகச் சொல்லிவந்த வகையினால் நீ என்னைக்கேட்ட சந்தேகங்கள் நிவர்த்தியாயிருக்கலாம். ஆயினுஞ் சில கூறுகின்றேன். யாவராலும் பூஜிக்கப்பட்ட பராசத்தியாகிய பரதேவதையானவள் காரியபேதத்தினால்சகுணையாகவும், நிர்க்குணையாகவும், தனக்குமேலொரு கடவுளும், துன்பமுமில்லாமல் சர்வவியாபகராய், நாசரகிதராய், பராபரராயிருக்கின்ற புருஷனாக (சிவரூபமாக)வும் இருக்கின்றாள். இந்த மஹாமாயா சொரூபிணியாகிய தேவியே சதசத்சொரூபமாகிய ஆன்மாக்களைப் படைக்கின்றாள். விநாயகர், சுப்பிரமணியர், பிரமன், திருமால், உருத்திரர், மற்றுமுள்ள தேவர்கள், சூரிய சந்திரர்கள், இந்திராதிதிக்பாலகர், அஸ்வனி தேவதைகள், அஷ்டவசுக்கள், துவஷ்டா முதலாகக்கூறப்பட்ட இவர்களெல்லாரும் சத்தியம்சபூதர்களாக விருந்தாற்றான் தங்கள் தங்கள் காரியங்களைச் செய்வதற்குச் சத்தியுடையவர்களாவார்; சத்தியம்சம் இல்லாமற் போமாயின் சலிப்பதற்கும் முடியாதவர்களா யின்னமுங் கடவுளராகவிரார். ஓ அரசனே! அந்தப் பரமேஸ்வரிதான் ஜகத்துக்குக்காரணம். ஆகையால் அந்தத் தேவியை நன்றா யாராதனஞ்செய்யக்கடவாய். அத்தேவியினுடைய தந்திரத்தை யனுசரித்துச் சிறந்த பக்தியுடன் தேவி பூஜாத்மகமாயிருக்கின்ற யாகத்தைச்செய்வாய். அந்தச்சத்தியே மஹா லக்ஷ்மீ, மஹாகாளி, மஹாசரஸ்வதி, சர்வ பூதங்களுக்குந் தலைவி, சர்வ காமார்த்தங்களைக் கொடுக்கிறவள், சாந்தை, சுக முண்டாகும் பொருட்டுச் சேவிக்கத்தக்கவள், தயையோடு கூடினவள், நாமத்தையுச்சரித்த மாத்திரத்தில் அபீஷ்டபலன்களைக் கொடுக்கின்றவள், பிரஹ்ம விஷ்ணு ருத்திரர்களால் பூர்வம் ஆராதிக்கப்பட்டவள், ஜிதேந்திரியர்களாய் மோக்ஷத்தை யபேக்ஷித்து முனிகணங்களால் ஆராதிக்கப்பட்டவள், புலி முதலிய துஷ்டமிருகங்களால் பயகம்பனாதிகளடைந்து தேவி திருவுருவத்தைப் பார்த்து ஹே தேவீ என்றமுற்றுஞ் சொல்வதற்கு நாவெழாமல் ஏ ஏ என்றுகுளறுபடையாய்ச் சொன்ன போதிலும் அடைதற்கரிய அபீஷ்டங்களை அளிப்பவள், மந்திர பீஜாக்ஷரத்தைப் பிந்து ஹீனமாகச் சொன்ன போதிலும் இஷ்டசித்தியைக் கொடுக்கின்றவள். இதற்குச் சத்தியவிரதனுடையசரித்திரமே உதாரணமாகவிருக்கின்றது. ஓ அரசனே! வைதிக நிஷ்டராய்ப் பிரமபாவனையிற் சிறந்த எங்களுடைய பிராஹ்மண கூட்டத்திற் சொல்லப்பட்டிருக்கிற சத்தியவிரதனுடைய சரித்திரத்தை வரன் முறையாகச் சொல்லக் கேட்டி

ருக்கிறேன். எங்ஙனமெனில் சத்திய விரதனென்பவன் பிராஹ்மணனும், எழுத்தென்பதே யறியாத மூர்க்கனும், அவன் பன்றியினுடைய வாக்கினின்று மெழுந்த தொனியில் தொனிக்கும் எழுத்தைக்கேட்டு அதைத் தான் உச்சரிக்கும்பொழுது பிந்துஹீனமாக "ஐகாரத்தை" உச்சரித்தனனும். அதற்குத்தயாவதியாகியும் பாவபேதினியாயுமிருக்கின்ற பரமேஸ்வரியானவள் சந்தோஷ மடைந்தவளாய் அந்தப் பிராஹ்மணனைக் கவிராஜ னாக்கினளாம். இவ்வற்புதத்தை என்ன சொல்லுவேன் அரசனே! என்றனர்.

ஒன்பதாம் அத்யாயம் முற்றிற்று.

---

உ

லப்தயௌவனசாலிந்யை நம:

## பத்தாம் அத்யாயம்.

## சத்தியவிரதோ பாக்கியானம்

(௧-௩) ஜனமேஜயன் வியாசரை வணங்கி ஓ தயாநிதியே! சத்திய விரதனென்கிற பிராஹ்மணன் யார்? எத்தேசத்திற் பிறந்தவன்? எப்படிப்பட்டவன்? பன்றியினுடைய சப்தத்தை எவ்வண்ணங் கேட்டான்? அது எப்படி மந்திர சித்தியையுண்டு பண்ணிற்று? எங்கும் நிறைந்தவளாகியும் சர்வஜ்ஞையாகியும் இருக்கின்ற அத் தேவிஎப்படிச் சந்தோஷமடைந்தாள்? இவ்வற்புதமாகிய சரித்திரத்தை விரிவாய்க்கூறவேண்டுமென்று பிரார்த்தித்தனன்.

(௪-௧௩) வியாசமுனிவர் அரசனுடைய வினவைக் கேட்டுக் கம்பீரமாகியும், கேட்பதற்கு இன்பமாகியும் உள்ள விடைகளைச் சந்தேகத்துக் கிடமில்லாத சொற்களால் கூறலுற்றனர். ஓ அரசனே! யான் மஹாருஷிகளுடைய கூட்டத்தில் எவ்வண்ணங்கேட்டிருந்தேனோ அவ்வண்ணமே புராணபத்ததியாயுள்ள அச்சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஓ அரசனே! நான் முன்னொரு காலத்தில் தீர்த்தயாத்திரைசெய்து வரும்பொழுது முனிவர்கள் வசிக்கப்பட்ட தாகியும், பரிசுத்தமாகியும் விளங்குகின்ற நைமிசவனத்தை யடைந்து அங்குள்ள இருடிகளை வணங்கி அவ்விடத்திற்றானே தங்கியிருந்தேன். அங்கு மஹா நியமத்தை யுடையவர்களும், ஜீவன் முத்தர்களுமான பிரஹ்ம புத்திரர்களுமிருந்தனர். அப்பொழுது அவ்விடத்தில் கதாப்பிரசங்கம் நடந்தது. அச்சமயத்தில் சமதக்னி என்னும் மஹருஷி சபையாரைப் பார்த்து மஹானுபாவர்களான ஓ மஹருஷிகாள்! என்னுடையமனதில் ஓர் சந்தேகமிருக்கின்றது. அது மகத்துக்களாகிய உங்கள் கூட்டத்திற்றான் தெளிய

வேண்டும். பிரஹ்மா, விஷ்ணு, உருத்திரர், இந்திரன், வருணன், அக்கினி, குபேரன், வாயு, துவஷ்டா, சூரியன், அஸ்வனி தேவதைகள், பகன் என்கிற சூரியன், பூஷா என்கிற சந்திரன், ஏனைய கிரகங்கள் ஆகிய இவர்களுக்குள் பூசிக்கதக்கவரும், அபீஷ்டத்தைக் கொடுக்கின்றவரும், சுகத்தின் பொருட்டுச் சேவிக்கத்தக்கவரும், சீக்கிரத்தில் சந்தோஷித்து அருள்செய்யத்தக்கவரும் யாவர்? விரைவில் கூறுங்களென்றனர்.

(கஊ-கஎ) அப்பொழுது அங்கிருந்த லோமசமுனிவர், ஓ சமதக்னி முனிவரே! நீர் கூறியவைகட்கெல்லாம் உரியவர் பராசக்தியாகிய தேவியே யாவள். அவளெத்தன்மையாளெனின் பரா (எல்லாவற்றிற்கு மேலானவள்) பிரகிருதி (காரணம்-ஆதி) சர்வவியாபினி சர்வதாசிவா (நித்தியமங்களே) தேவர்களிற் சிறந்த பிரமன் முதலிய மூத்தேவருக்குந் தாயாயுள்ளவள், தியானித்தாலும் துதித்தாலும் இஷ்டார்த்தத்தைக் கொடுப்பவள், எப்பொழுதும் இரக்கமுள்ள சித்த முடையவள், வரமளித்தற் பொருட்டுச்சேவிக்கத் தக்கவள். அத்தேவிதான் சீக்கிரத்தி லருள் செய்யத்தக்கவளென்றறிமின். இதற்கு அத்தேவி பீஜாக்ஷர மந்திரத்தை ஹீனமாக வுச்சரித்த அந்தணனுக்குச் சம்பிராப்தமான அற்புதமாகிய ஒரு இதிகாசத்தைச் சொல்லுகிறேன் கேட்பீராக.

(கஅ-ஙரு.) கோசல தேசத்தில் தேவதத்தனென்னும் ஓர் பிராஹ்மணன் புத்திரனில்லாதவனாய் நெடுநாள் வருந்திப் புத்திர சந்தானத்தின் பொருட்டுப் புத்திரகாமேஷ்டியாகத்தை விதிப்பிரகாரஞ் செய்ய வுத்தேசித்து (தமசா) என்னும் சிறந்த நதிதீரத்தையடைந்து சிறப்பாக யாகசாலை மண்டபமமைத்து, சத்கரும விதியுணர்ந்தவர்களாய், வேதாத்தியயன பராளாயிருக்கின்ற அந்தணர்களே வரவழைத்துச் சாஸ்திர விதிப்படி குண்ட நிர்மாணஞ் செய்து காருகபத்திய முதலிய மூன்றக்னிகளேயும் பிரதிஷ்டை செய்து, சுஹோத்ரரென்னு முனிவரைப் பிரஹ்மா வாகவும், யாஜ்ஞவல்கரை அத்வரி (யஜ்ஞத்தை நடத்துவிக்கின்றவர்) ஆகவும், பிரஹஸ்பதியை ஹோதா (ஹோமஞ்செய்கின்றவர்) ஆகவும், பைலரைப் பிரஸ்தோதா (வேதங்களால் தோத்திரஞ்செய்கின்றவர்) ஆகவும், கோபிலரை உத்காதா (சாமவேதகானஞ் செய்பவர்) ஆகவும், ஏனைய முனிவர்களேத் தானப் பிரதி கிரீஹீதா (தக்ஷணைபெறுதற்குரிய சத்பாத்திரர்) ஆகவும் இருக்கும் வண்ணம் நியமனஞ் செய்து யஜ்ஞஞ் செய்யத் தொடங்கி யாக கிருத்தியங்கள் தவறாது நடத்திவரும்பொழுது சாமவேதியாகிய “கோபிலர்” உத்காதாவாயிருந்து சாமகானஞ்செய்கின்றவரானபடியினால் ஸப்தஸ்வரத்தோடுக் கூடிய “ரதந்தர” மென்கிற சாமத்தை ஸ்வரிதத்துடன் கானம் பண்ணும்பொழுது தம்முடைய சுவாசத்தை (மூச்சை) யடக்கிச்

சொல்லுவதொழிந்து அடிக்கடி சுவாசத்தை விட்டு விட்டு சுரபங்கமாகச் செய்து வந்தனர். தேவதத்தன் அதுகண்டு கோபிலரைப் பார்த்துக் கோபித்து ஓ முனி சிரேஷ்டரே! நான் புத்திரா பேக்ஷயினால் நடத்துவதாயிருக்கின்ற இந்த யாகத்தில் நீர் மஹாதேவருக்குப் பிரியகரமா யிருக்கின்ற சாமகானத்தை ஸ்வர ஹீனமாகக் கானஞ் செய்கின்றீர். சுவாசத்தையும் உஸ்ஸென்று விடுகின்றீர். இவ்விரண்டும் அமங்கலக் குறியல்லவா! இதுவென்ன மூடத்தன மென்றனன். இந்தவார்த்தைகளைக்கேட்ட "கோபிலர்" தேவதத்தனைக்கோபித்து நீ என்ன கூறினை? உஸ்வாச நிஸ்வாச ரூபமாயிருக்கின்ற பிராணவாயுவானது எந்தப் பிராணிகளாலும் அடக்கக் கூடுமானதன்று. அங்ஙனமிருக்க, சிறிது தளர்வுற்றிருக்கின்ற சரீர தருமத்தா லெனக்குண்டாகிய ஸ்வரபங்க விஷயத்தில் சிறிதும் என்னைத் தூஷித்தல் கூடாது. நீஇதனை ஆராயாது என்னை மூடனென்று கூறியபடியினால் உனக்குப் பிறக்கப்போகிற புத்திரன் மூடனையும் முருட்டுத்தன முடையவனையும், ஊமையாயும் பிறக்கக்கடவன் என்று சபித்தனர். அச்சாபவார்த்தையைக் கேட்ட தேவதத்தன் மிகவும்பயந்து துக்கமெய்தி இனிஎன்செய்வோமென்றேங்கி மஹாத்மாவாகிய ஓ விப்ரேந்திரரே! நிராபராதியான என்னிடத்தில் நீரேன் வியர்த்தமாய்க் கோபிக்கின்றீர்? பெரியோர்கள் கோபிப்பது அழகாகுமா? பிறரைத் துன்பமுறச்செய்வது அருளுடைமை யாகுமா? இச் சிறுகுற்றத்திற்கு இவ்வளவு பெரிய சாபம் நீ ரிடலாமா? நான் முன்னமே புத்திரனில்லாதவனுப்த் துக்கத்தில் மூழ்கிக்கிடக்க இப்பொழுது மேலுந் துக்கத்தையே அதிகரிக்கச் செய்தீர். அந்தோ! அந்தோ! இது என்னபாவம். வேதவித்துக்கள் மூட புத்திரனையுடையவன் புத்திரப்பே றில்லாதவனென்று சொல்லுகின்றபடியால் அவன் எல்லாராலும் இகழப்பட்டவன்றோனே? அவன் மிருகத்தைப்போலும், சூத்திரனைப்போலும் விலக்கி வைக்கத் தக்கவன்றோனே? அவன் பூஜிப்பபடுவானா? அபூஜ்யன்றோனே? அவன் தானபாத்திரனவனா? அவன் வேதகர்மங்களினின்றும் விலக்கப்பட்டவன்றோனே? இதிற் சந்தேகமு முண்டோ? என்மகன் ஊமையாய்ப் பிறந்தால் அவன் அத்தியயனத்திற்கும் யோக்கியனாகாமற் போவானல்லவா? அவனுலகில் வசிப்பானாயின் அவனை அரசன் சூத்திரனைப்போல் தனக்குப் பகுதி கட்டுகிறவனாக எண்ணப்படுவனேயன்றித் தான் ஆசனமிட்டுத் தானங் கொடுக்குஞ் சத்பாத்திரனாக எண்ணப்படுவானா? அப்படியே பிதிர் யஜ்ஞங்களிலும்தேவ

யஜ்ஞங்களிலும் அந்தணர்களால் பூஜிக்கப்படாதவ னுவானல்லவா? எதற்கும் யோக்கியனாகாத அவன் உழவுத் தொழிலுக்கே உரியவனு வனன்றி வேறெந்த சத்கருமங்களுக்குரியவனுவான் ? ஆகான்.

(௩எ-௪௩) மிருதிகளிலும் வேதாத்யயனமுடைய பிராமணன் கிடைக்காமற்போனால் தர்ப்பை கூர்ச்சம்வைத்து சிராத்தஞ்செய்து கொள்ளலாமே யன்றிப் பிராஹ்மணனுயிருந்தாற் போதுமென்று மூடப் பிராமணனை வைத்துக்கொண்டு ஒரு பொழுதுஞ்சிராத்தஞ் செய்யக்கூடாதெனவும், அவ்வபண்டிதனுக்குப்பசிக்கு அன்னமாத் திரங் கொடுக்கவேண்டுமன்றி விசேஷதானஞ் செய்யக் கூடாதென வும்,செய்தால் செய்தவனும், செய்யப்பெற்றவனும்நரகத்தை யடை வார்களெனவும், எந்த நகரத்தில் கல்வியில்லாதவரும் மூடப் பிரா ஹ்மணரும் தான சன்மானங்களைப் பெறுதற்குரியவரா யிருப்பரோ அந்த நகரத்தை விட்டு நீங்கவேண்டியதெனவும், ஆசனங் கொடுப் பதிலேயும் மரியாதைசெய்வதிலேயும், மூடர் பண்டிதரென்கிற பேத மில்லாமல் சமமாகச் செய்யுந்தன்மை யுடையவர் வசிக்குமிடமும் நிந்திக்கப்பட்டதெனவும், ஆகையால் ஒரு பண்டிதனால் இவன் பண்டிதன் இவன் அபண்டிதனென்றறிந்து கொள்ளல்வேண்டு மெனவும், எந்தநகரத்தில்மூடர்கள் தான சன்மானங்க ளடைவத னல் அகங்காரத்தை யடைகின்றார்களோ அந்த நகரத்தில் ஒரு பொழுதும் பண்டிதனு யுள்ளவன்வசிக்கக்கூடாதெனவுங் கூறுகின் றார்கள். இவ் விசாரங்களை எவனறிவினாலறியாமற்போகிறானோ அவன்தான் துர்ஜனன். அவனுடைய ஆர்ஜிததாகிய திரவியங்க ளெல்லாம் வேம்பினுடைய பழமான துஎப்படிக்காக்கைகளுக்கேவுப யோகப்படுமோ அப்படி அசத்துக்களுக்கே வுபயோகப்படும். சத் துக்களாவார் யாரெனின் வேதாத்தியயனத்தில் வல்ல பிராஹ்மணர் கள். அவர்கள் சத்துக்களென்பதற்குப் பிரமாண மென்னையெனின் முற்கூறிய அந்தணர்கள் எவனுடைய அன்னத்தைப் புசித்துப்பின் னர் வேதபாராயணஞ் செய்வாராயின் அப்புண்ணிய விஷேசத்தால் அவ்வன்னங் கொடுத்தவனுடைய மூதாதைகள் சுவர்க்கலோகத்தில் சந்தோஷ சித்தர்களாய்க்கிரீடித்திருப்பார்களென்பதேயாம். ஓகோ பிலரே! பிராஹ்மண பண்டிதனுடையபெருமைஇவ்வாறெல்லாமிரு க்க எனக்குநீர் என்ன சொன்னீரையா! சம்சாரத்தில் புத்திரனில்லை என்கிறசோபத்தை யனுபவிப்பதைப் பார்க்கிலும் மூடனைப் புத்திர னுகப்பெற்றுவைத்திருப்பது அதிகதுன்பம். ஆகையால் ஓமஹானு பாவரே! ஒ கோபில முனிவரே! சாபநிவர்த்தி யுண்டாகும் வண்ணம்

ஓர் அனுக்கிரக வார்த்தைசொல்லும். நீர் தீனர்களை ரக்ஷிப்பதில் சாமார்த்தியரென்று நான் அறிந்தவனாகலான் என்னை ரக்ஷியுமென மிகவும் தீனபாவத்தை யுடையவனாய்க் கண்ணீர்விட்டழுது அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கித் தோத்திரஞ்செய்து புலம்பி நிற்ப, கோபிலர் துக்காக்கிராந்தனாய்ச் சரணாகதியடைந்த அத்தேவதத்தன்பால் கருணைகூர்ந்து ஓ தேவதத்தனே! பெரியோர்களுக்குக் கோபமுண்டாகுமாயின் ஒரு க்ஷணகால மிருக்குமேயன்றி நெடுங்காலமிருக்கமாட்டாது, பாவிகளுக்குமாத்திரம் நெடுங்கால மிருக்கும். ஆகையால் எனக்கு உன்மேலுண்டாகிய கோபாக்கினி, இயற்கையில் குளிர்ச்சியுடைய தண்ணீரானது நெருப்பு வெய்யில் முதலிய உஷ்ண சம்பந்தங்களால் உஷ்ணமாய்த் தோன்றுவதுபோற்றோன்றி பின்னரந்நீரானது உடனே முன்னிருந்த குளிர்ச்சியையே எப்படி யடைகிறதோ, அப்படித் தணிந்துவிட்டது. இனி நீ துக்கிக்கவேண்டாம். என்னுடைய சாபத்தின்படி மூடனாகப் பிறந்திருந்து பின்னர் நல்ல வித்துவானாவாயென்று அனுக்கிரகஞ்செய்தனர்.

(ருo-கூரு) தேவதத்தன் அதிக சந்தோஷத்தையடைந்து யஞ்ஞத்தைப் பூர்த்திசெய்ய வேண்டுமென்றெண்ணி முன்போல் ஏனைய சடங்குகளையும் விதிமுறையாகச் செய்துமுடித்துப் பிராஹ்மணர்களுக் கெல்லாம் சந்தோஷமுண்டாகும் வண்ணங் கொடுப்பனவாகிய எல்லாப்பொருளுங் கொடுத்தனுப்பி வாழ்ந்து வருநாளில் அழகிற்சிறந்த ரோகிணியைப்போல் அழகுடைய ரோகிணி என்னும் அவன் மனைவியாகிய பதிவிரதை கருப்பமடைந்தனள். அது கண்ட தேவதத்தன் அடங்காத ஆனந்தமடைந்து விதிமுறையே கர்ப்பாதானம் பும்சவனவிதானம் சிருங்காரகாரணம் சீமந்தோந்நயன முதலியவற்றை அவ்வக்காலங்களில் குறைவின்றி நடத்தித் தானமுதலியவைகளுந் தந்து நாம் செய்தயாகம் இப்பொழுதுதான் பிரயோசனமுடைய தாயிற்றென் றெண்ணிப் புத்திரனை எப்பொழுது பார்ப்போமென்று நாளை யெண்ணிக்கொண் டிருந்தனன். அழகிலும் ரோகிணியாயும் பெயரிலும் ரோகிணியாயுமுள்ள அந்தக்கர்ப்பிணி ரோகிணி நக்ஷத்திரங்கூடிய சுபதினத்திலேயே புத்திரனைப் பெற்றனள். அப்புத்திரனுக்கு வேதமுறையாக நல்ல சுபதினத்தில் சுபலக்கினத்தில் ஜாதகரணமும், "உதத்தியன்" என்று நாமகரணமும் கர்ப்பாதானந்தொட் டெண்ணத்தக்க எட்டாவது வயதில் உபநயனச் சடங்கும், அதிக சிறப்பாக நடத்தினன்.

உபநயன விரதத்திலிருக்கின்ற அக்குமாரனுக்கு முன்னர் கற்பிக்க வேண்டிய சந்தியாவந்தனத்துக்குரிய அத்தியயனத்தைக் கற்பிக்க அவன் அதனைக் கற்கும் அறிவில்லாதவனாய் மூடனாயிருந்ததைக் கண்டு தன்னுடைய கஷ்டத்தை நோக்காது அநேகப் பிரகாரங்களாலுங் கற்பித்துவந்தனன். அங்ஙனங் கற்பித்தும் அவன் புத்தி அதிற் பொருந்தாமல் மூடத்தன்மையையே அடைதலைக்கண்டு மிகவும் மனம் வருந்தி அப்புத்திரனை அத்தியயனத்தினின்று விடுவிக்கவுந் துணியாதவனா யின்னமும் பார்ப்போமென்று பன்னிரண்டுவருடம் இரவும் பகலும் இடைவிடாது அத்தியயனஞ் செய்வித்து வந்தனன். அவ்வளவுகாலஞ் செய்வித்தும் அந்த வுதத்தியனுக்குச் சந்தியாவந்தன விதியேனுங் கிரமமாய்ச் செய்வதற்குரிய பாடமும் வரவில்லை இனி தந்தை என்செய்வான். அதனால் அவனுக்கு பிராஹ்மண குலத்தாராலும் ஏனைய குலத்தாராலும் இவனைப்போல் ஒரு மூடனும் இருக்கமாட்டானென்கிற இழிந்தசொல் பெரும்பாலும் உண்டாயிற்று. அதுவுமன்றி அவ்வனத்தின் வழியாகப் போகின்றவரும் வருகின்றவரும் இவனைப் பார்த்து நகைத்து ஏளனஞ்செய்வார்கள். அதைக்காணும் தாய் தந்தையரும் பந்துவர்க்கங்களும் அவர்கள்பேரில் கோபித்து நிந்திக்காமல் தங்கள் பிள்ளையைப்பார்த்து அடா! அடா! ஏன் வெளியிலேவந்து உலாவுகின்றாய், உள்ளே யிருக்கலாகாதா வென்று பயமுறுத்திக் கண்டனஞ் செய்துவருவரேயன்றி, இவனை வித்துவானாக்க வேண்டுமென்கிற எண்ணமில்லாமல் வெறுப்படைந்திருப்பதுமன்றி, பிள்ளை குருடாயிருந்தாலும் மூடமாயிருந்தாலும் கல்வியறிவொன் றமைந்திருக்குமாயின் அவன்தான் சிலாக்கியமானவன், கல்வியறிவில்லாத அழகுள்ளவனா யிருந்தபோதிலும் பிரயோசன மென்னவென்று அவனைப் பார்க்குந்தோறும் நிந்தித்தும் பயப்படுத்தியும் வந்தனர். அப்பிள்ளை அவ்வவமானத்தை ஓர்நாளெண்ணி யாவரையும் வெறுத்து வைராக்கிய முடையவனாய் அந்த வனத்தைவிட்டு வேறொரு வனத்துக்குப்போய் கங்கா தீரத்தையடைந்து தன் மனதுக்குச் சுகமான ஓரிடத்தில் மிகவுஞ் சிரேஷ்டமாகிய ஆச்சிரமத்தை யுண்டுபண்ணிக்கொண்டு இவ்விடத்தில் நாம் ஆகாரமாகக் கொள்ளவேண்டியது கந்தமூல பலன்களென்றும் நமக்கு விரதமாக விருக்கவேண்டியது பொய் சொல்லாமை என்றும் நியமம் வைத்துக்கொண்டு வாழ்ந்திருந்தனன்.

சுலோகம் - சுரு.

மூன்றும் ஸ்கந்தம் பத்தாம் அத்தியாயம் முற்றிற்று.

லப்தாதிசய ஸர்வாங்க ஸௌந்தர்யாயை நமஃ.

## பதினொன்றும் அத்தியாயம்.

## சத்யவ்ரதோபாக்கியானம்.

(க - அ) அசத்தியஞ் சொல்லுகிறதில்லை என்கிற விரதத்தை மாத்திரம் மேற்கொண் டிருந்தனனேயன்றிப் பிராஹ்மண தருமத்துக்குரிய வேதாத்தியயனமும், தேவதைகளைத் தியானஞ் செய்யு முறைமையும், அவர்களைப் பூஜிக்கு முறைமையும், மந்திர ஜபமும், அந்த ஜபத்துக்கங்கமாகிய ஆசனம், பிராணயாமம், பிரத்யாகாரம், பூதசுத்தி, மந்திரம், கீலகம், காயத்திரி முதலிய இந்த முறைமைகளில் ஒன்றும் அறியான். இவைகளையறியாமற் போனுலும் காலையில் எழுந்து முதல் இன்றியமையாமற் செய்யத்தகுவனவாகிய சௌசம், ஸ்நானம், ஆசமனம், சந்தி, அக்கினிஹோத்திரம், பலிதானம் (பலிகொடுத்தல்) அதிதிபூஜை, முதலியவற்றை விதி முறையறிந்து செய்யவாவது அறிந்துகொண்டவனோ வென்றுல் ஒன்றுமறிந்தானல்லன் அவற்றில் அவையாவுமறியா தொழியினும் அக்னிஹோத்திரஞ் செய்கின்றவர்களுக்கு வேண்டுவனவாகிய சமித்துக்கள் இது விதுவென்றுவது, அக்னிஹோத்திரமென்பது இத்தன்மைத்தென்றுவது அறிந்தனனேவென்றுல் அவையுமறிந்தானல்லன் இவ்வறிவிலியாகிய பிராமணச்சிறுவன் காலையிலெழுந்திருந்து அசத் சூத்திரனைப்போல் தந்தசுத்தி செய்யவும், உடம்பிலுள்ள அழுக்குப்போக நீரில்மூழ்கி எழுந்திருக்கவுங் கற்றுக்கொண்டவனுய் உச்சிப்போதில் தான் தேடாமற் கிடைப்பதாகிய கனிவகைகளை எடுத்துப் புசிக்கத்தக்கது இது புசிக்கத்தகாதது இதுவென்றறியும் பான்மையின்றி எல்லாவற்றையும் உண்ணும்வகையில் தெளிவுடையனுயும் நித்திரை செய்வதில் வெறுப்பில்லாதவனுயு மிருந்தான்.

இத்தன்மையனுயினும் ஒருவரிடத்தும் பொய்யான வார்த்தையைக் குறிப்பிட்டுச் சொல்லாதவனுய், மெய்யான வார்த்தையையே குறிப்பிட்டுரைப்பவனுயிருந்தான், அதனுல் "சத்தியதபன், என்று அவனை யாவரும் அழைக்கலாயினர். "பொய்யாமை" என்கிற அவ்வொரு நன்மையன்றிப் பிறருக்கு நன்மைசெய்யுங்காரியம் இதுவெனவும் தீமைசெய்யுங் காரியம் இதுவெனவும் அறிந்து ஒருவருக்கு ஒரு நன்மையாவது தீமையாவது செய்வதில்லாமல்

அந்த ஆரண்யத்தில் நிர்ப்பயனாய் உலாவி வாழ்ந்திருந்தனன். இவ்வளவு அறியாமையிற் பிறந்த சத்தியதபன் ஓர்நாள் தனக்குத் தானே தன்னுடைய தீனதிசையைப்பற்றி எண்ணலாயினன்.

(கூ-கந) எவ்வாறெனின், நமக்கெப்பொழுது மானம்வருமோ என்பதும், நாம் இந்தக்காட்டில் மிருகத்தைப்போல் எவ்வளவு காலம் உலாவிக்கொண் டிருப்போமென்பதும் தெரியவில்லை இப்படிச் சீவித்திருத்தல் மூடர்களுடைய கஷ்டசீவனமல்லவா? இந்த மூடப்பிழைப்பும் ஓர் பிழைப்பாகுமா? இவ்வண்ணமான பிழைப்புடைய என்போலிகளுக்கு நன்மையாவது யாதெனில் சீக்கிரத்தில் மரணம் வருவதுதானன்றி வேறன்று நமக்கு இந்த மூடத்தன்மைவந்தது நம்முடைய புத்தி பூர்வத்தினாலன்று தெய்வத்தின் செயலினாலேயென்று தோன்றுகிறது, வேறுகாரணந் தோன்றவில்லை, ஏனென்றால் நாம் உத்தமமாகிய ஜன்மமெடுத்தும் நல்ல ரூபவதியானவள் மலடியாய்ப் போனதுபோலும், தழைத்திருக்கும் விருக்ஷம் பலங்கொடாததுபோலும் செழிப்புடைய பசு பால் கொடாததுபோலும் வீணாய்ப்போயிற்று. ஓ மஹாருஷிகாள்! பின்னரும் அந்தச் சத்தியதபன் நாம் ஏன் தெய்வத்தை நிந்திக்கவேண்டும். நாம் செய்த கன்மம் இவ்வாறாகவிருந்தால் என்செய்யலாம். அதனை யோசிக்குங்கால் நாம் பூர்வ ஜன்மத்தில் உத்தமமான பிராஹ்மணரிடத்தில் மறுபடியுங் கொண்டுவந்து கொடுப்பதாகப் புத்தகத்தைப் பெற்றுக்கொண்டு கொடாமலிருந்திருக்கலாம், வித்தையை விரும்பி நம்மைக் கேட்டவர்க்கு நாம் வஞ்சனையோடு சொல்லியிருக்கலாம். இந்தப் பாவங்களால் மூடமும், பிராஹ்மண தர்ம ஹீனமும் உண்டாயிற்றென்று அறியற்பாலது.

(கச - ௨௦) இந்தப் பாவகன்மம் செய்ததுபோல் இதற்குப் பரிகாரமாயுள்ள புண்ணியதீர்த்த ஸ்நானமாவது, மந்திர ஜபாதிகளாவது, மகத்துக்களுடைய தரிசனமாவது, திரவியங்களால் திருப்தி யுண்டாகும்வண்ணம் பிராஹ்மண பூஜையாவது செய்திருப்போமாயின் இந்த மூடத்துவமாகிய துர்ப்புத்தி நீங்குவதற்கு ஓர் பரிகாரம் நேரிடும். நாம் பரிகாரமானபுண்ணிய கிருத்தியங்களுஞ் செய்யவில்லை, பரிகாரமு முண்டாகவில்லை. அந்தோ! அந்தோ! நம்மைப்போன்ற முனிபுத்திரர்களெல்லாம் சகல சாஸ்திர சம்பன்னராக விருக்கின்றார்கள். நாம் மூடப்பிரசன்னனாக விருக்கின்றோம். என்று தன்னு பூர்வஜன்ம கன்மத்தையும், இந்த ஜன்மத்தில் நேரிட்ட மூடத்தின் கொடுமையையும் பலவாறாக எண்ணி

எண்ணி எக்கமுற்று இனியாவது பரிகாரந் தேடிக்கொள்ளலா மென்றாலோ பரிகாரமாயுள்ள தவமும், அதற்குரிய விதிமுறை யும் ஒரு சாதனமும் அறியாத நாம் என்செய்வோம் இப்பொழுது நாம் எண்ணுவதெல்லாம் அப்பிரயோசனமே நமக்குப் பூர்வ புண் ணியம் நன்றாயில்லை, நமக்குத் தெய்வந்தான் துணைசெய்யவேண் டும் அதுதான் மேலானது, அந்தத் தெய்வப்பிரயத்தினமில்லாமல் மானிடன், செய்யும் பிரயத்தினமும் ஓர் பிரயத்தினமாமா சி! சி!! மானிடப் பிரயத்தினத்தினாற்செய்யுங் காரியத்திற்குத் தெய் வசகாயம் இல்லாமற்போமாயின் அது வீண்சிரமமாய் முடியும். பிரம்ஹா, விஷ்ணு, உருத்திரர், இந்திரன் முதலியோரெல்லாம் தேவர்களா யிருந்தபோதிலும் உருவத்தோடு கூடினவராகலின் அவர்களெல்லாம் கால தத்துவத்தினுடைய சுவாதீனத்தில் அகப் பட்டவர்களேயன்றி அதனைக் கடக்கும் ஆற்றலுடையவராகார், என்றெண்ணிக்கொண்டே உறங்கி நித்திரை செய்தனன். பின் விழித்தெழுந்தும் முன்னெண்ணிய வெண்ணத்தை மறவாமல் இர வும்பகலும் அதனையே மனதில் தர்க்கித்துக்கொண்டு மகா பரி சுத்தமாகிய கங்காதீரத்தில் மானுட சஞ்சாரமில்லாத தனியிடத் தில் விரக்தனாய் ராகத்துவேஷமற்றவனாய் பதினான்கு வருடங் காலங்கழித்து வந்தனன்.

(உக-ந) அந்தப் பதினான்குவருடகாலத்தைக் கழித்தும் அவ னுக்கு வைதீக தர்மமாகிய பூஜையுமில்லை, ஜபமுமில்லை, மேலாகிய காயத்திரி இதுவென்றறியத்தக்க அறிவுமில்லை. இவ்வாறான வைதீக தர்மஞ் சிறிது மில்லாதவனாயினும் பொய்சொல்லா நெறியிற்றவரா திருந்தானாகையால் இவனைக்காணும் யாவரும் இகழாமல் இவர் பொய் சொல்லாதவர் என்கிற புகழையே கொண்டாடினார்கள். இவன்பால் ஓர் நாள் ஒரு பன்றியானது ஒரு வேடனால் அதி வேகமாகவிட்ட பாணத்தினால் அடிக்கப்பட்டு ஒட்டமெடுத்து நடப் பதற்குஞ் சக்தியற்றுப் பயமுற்றுவந்து விழுந்தது. அதனைச் "சத்தியதபன்" கண்டு ஆ! ஹா!! இந்தப்பன்றி என்ன நடுங்கு கிறது உதிரம் எப்படிப் பெருக்கெடுத் தோடுகிறது என்ன வேக மாய் ஓடிவந்தது உடம்பெல்லாம் ரக்தமயமாயிருக்கிறது என்று மிகவும் இரங்கிய மனமுடையவனாய் அடிக்கடிபார்த்து சரீரம் நடுங் கினவனாய் ஊமையாகையான் நன்றாய்ச் சொல்லளவையாற் கூச்ச லிடுவதற்குக் கூடாமல் "ஹ்ரு - ஹ்ரு" என்கிற தொனியோடு பயந்து கூச்சலிடத்தொடங்கினன். தொடங்கும்பொழுது எக்கா

லத்திலுந் தன்னுவினல் உச்சரிக்கக்கூடாததாகியும் காதினல் கேட்கப்படாததாகியும் உள்ள ஸ்ரீவித்யா மந்திரசம்பந்தமாகிய பீஜாக்ஷர உச்சரிப்பு, பூர்வ புண்ணியவசத்தாலோ தேவியினுடைய கருணு விசேஷத்தாலோ தெய்வகதியாய் வந்துவிட்டது. அது வந்தும் அந்தச் சத்யதபன் அது தேவீ பீஜாக்ஷரமென்றும், அதன் சொரூபம் இத்தன்மைத்தென்றும், அறியப்பெற்றிலனுய்ப் பன்றியைப்பார்த்து அப்போ துண்டாகிய கோபத்தோடு தனக்குள்ள மூடகிலைமையையும் எண்ணித் துக்கித்திருந்தனன். அப்பொழுது அந்தப்பன்றியும் எந்தப்பக்கமும் ஓடிப்போவதற்குக் கூடாமல் பாணத்தால் உடம்பெல்லாம் புண்பட்டு மிகவும் துக்கமுடையதாய் அங்குள்ள ஓர் புதரிற்போ யொளித்திருந்தது. ஒளித்துக்கொண்ட ஒரு க்ஷணத்துக்குள் அந்தப் பன்றியைப் பாணத்தினுற் புண்படுத்தியவேடன் அதைத் தேடிக்கொண்டு காலனைப்போலங்கு வந்தனன். அவன் எத்தன்மையனெனில் கடினமாகிய குரூர தேகத்தையும் வேட்டையாடுவதில் அதிக பிரியத்தையும் கண்டோர் யமனென்று அஞ்சத்தக்க பயங்கரத்தன்மையையும் தனுசும் பாணமும் நீங்காத கணையும் விசாலமாயுள்ள வனமெங்குந் திரிந்துலாவி எவ்வுயிரையுங் கொலைசெய்வதில் மிகுந்த சாமர்த்தியத்தையும் உடையவன். அந்த மகா மூடனுகிய வேடன் அறங்களிற் சிறந்த பொய்யாமையையே மேற்கொண்டொழுகும் ஒப்பிகந்த சத்தியதபனென்கிற முனிபுங்கவனைத் தர்ப்பாசனத்தில் வீற்றிருக்கக் கண்டு நமஸ்கரித்து எதிரில் நின்று ஓ பிராஹ்மணரே! ஓர் க்ஷணத்துக்குமுன் இவ்வழியாய் என்னுடைய பாணத்தினு லடிபட்டுவந்த பன்றி எவ்வழிபோயிற்று. உம்மை நான் சத்திய விரதரென்றறிவேன் பொய்சொல்லவேண்டாம், என்னுடைய குடும்பமானது பசியினல் மிகவும் வாட்டத்தை யடைந்திருக்கிறபடியால் நான் அதை ரக்ஷிக்கவேண்டியவன், எனக்குப் பிரமன் இவ்விதமான விருத்தியை ஏற்படுத்தி யிருக்கின்றுன், சீவிப்பதற்கு வேறு விதமான விருத்தியில்லை. இனி நாளுெருவுண்மை சொல்லுகிறேன். என்னையெனில் புண்ணியகரம், பாபகரம் என்கிற எவ்விதமான விருத்தியினுலாவது தன்னுடைய குடும்பத்தை ரக்ஷிக்கவேண்டியது முக்கியமென்று சொல்லியிருக்கிறது. ஆகையால் என்னுலே போஷிக்கத்தக்க குடும்பமானது தவித்துக்கொண் டிருக்கிறது. இது பொய்யென்று எண்ணவேண்டாம், நான் பொய் சொல்ல மாட்டேன், நீரும் பொய் சொல்லமாட்டீர். ஆகையால் என்னு

டைய பாணத்தினல் அடியுண்டுவந்த பன்றி எங்கேயிருக்கிறது, உம்மை நான் மிகவும் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்ளுகிறேன், சீக்கிரமாகச் சொல்லுமென்று ஒருமுறைக் கிருமுறை கேட்டனன்.

(௩௪-௪௬) அவ்வேடன் வாய்மொழியைக் கேட்ட ருஷிபுத்திரன் ஆலோசிக்கலாயினன். என்னையெனில் இந்த வேடன் குடும்பத்தைப் போஷிப்பதே முக்கிய தருமமென்றும் அதற்காகத் தனக்கமைந்த தொழில் கொலைத்தொழிலென்றும், அதுதான் தனக்கு விதித்த விதி என்றும் இது பொய்யல்ல மெய்யென்றுங் கூறுகின்றான், இதுவுண்மையே. நாம் அவன்கூறும் உண்மையை நாடி நீ தேடிவந்தபன்றி இதோவிருக்கின்றது என்று சொல்லிவிடுவதுதான் உண்மைநெறியென்று சொல்லிவிடுவோமாயின் அதுவுண்மையாகமாட்டாது. பொய்மையேயாகும். ஏனென்றால் சத்தியம் அசத்தியம் (மெய் - பொய்) என்பது அஹிம்சை, இம்சை என்று சொல்லப்படும் விஷயங்களெவைகளோ அவைதானாகும். எனவே உயிர்களுக்குச் சவுக்கியம் செய்வது (துன்பஞ்செய்யாதிருப்பது) எதுவோ அது அஹிம்சை, அசவுக்கியம் செய்வது (துன்பஞ்செய்வது) எதுவோ அது இம்சை, இந்த இம்சைதான் அசத்தியம், அந்த அஹிம்சைதான் சத்தியம். சத்தியா சத்தியங்களுக்கு இப்பொழுது சொல்லிவந்த ஞாயத்துக்குவேறாக ஒரு ஞாயமுங் கிடையவேகிடையாது. நாம் இப்பொழுது பன்றியிருக்கிறது என்று சொல்வோமானல் பன்றிக்கு இம்சையும், வேடனுக்கு அஹிம்சையும் செய்தவனாகிறோம். பன்றியைக் காட்டிக்கொடுக்காமலிருந்தால் பன்றிக்கு அஹிம்சையும் வேடனுக்கு இம்சையும் செய்தவனாகிறோம் இந்தப் பன்றிக்கும் வேடனுக்கும் அஹிம்சை செய்யாதவிதம் எப்படி? சத்தியதபனென்கிற நம்முடைய பெயரையுங் காத்துக்கொள்ளும் விதம் எப்படி? இது விருத்ததரும (மாறுபட்டதரும)மா யிருக்கின்றதே என்று தோன்றிய தரும சங்கடமாகிய சங்கைகளில் மிகவும் மூழ்கினவனாய் வேடன் கேட்ட கேள்விக்கு யுக்தமானவார்த்தை சொல்ல வறியாமல் பன்றியிருக்கும் புதருக்குச் சமீபத்திற்போய் அதைப்பார்த்து இரங்கியமனத்துடன் முன்போல் தேவியினுடைய வித்யாபீஜோச்சாரணையைச்செய்ய தேவி கருணை கூர்ந்தவளாய் எழுந்தருளிவந்து யாவராலும் அடையவொண்ணாத வித்தையை அனுக்கிரஹஞ் செய்து மறைந்துபோயினள்.

இவ்வாறு தேவியால் அனுக்கிரகிக்கப்பெற்ற ருஷிபுத்திரன் அப்போதே சகல சாஸ்திர பாரங்கதனாய் பூர்வத்திலுள்ளவராகக்

கேள்விப்படுகிற வான்மீகியைப்போல் கவீஸ்வரராய்த் தன்னெதிரில் நின்ற வில்லாளியாகிய வேடனைப்பார்த்து *"யாபஸ்யதி" என்கிற சுலோகஞ் சொல்லியருளினர். அந்தச் சுலோகார்த்தமாவது எவன் பார்க்கின்றானோ அவன் சொல்லுகின்றானில்லை, எவன் சொல்லுகின்றானோ அவன் பார்க்கின்றானில்லை, தேகப் பிரயோசனத்தையே கருதியிருக்கிற ஓ வேடனே! அடிக்கடி என்ன கேட்கிறாய் ஆ! ஆச்சரியம் என்பதாம். இந்த அர்த்தமுடைய சுலோகத்தைக் கேட்ட வேடன் அந்த அருள்வாக்காகிய சுலோகத்தைக் கேட்கப் பெற்ற புண்ணிய விசேடத்தால் அப்பன்றியினிடத்தில் ஆசையற்றவனாய் ஒரு வார்த்தையுஞ் சொல்லாது வீட்டுக்குப் போயினான். தேவியினுடைய அனுக்கிரக சீலராய் விளங்கிய ருஷிபுத்திரர் சத்தியத்திலேயே பிரியமுடையவராய்ச் தர்மாத்மாவாய், சர்வஜீவ தயாபரராய் இரண்டாவது வால்மீகி என்னக் கவீஸ்வரராய்க் கங்காதீரத்திலிருந்து ஸ்ரீவித்தையை விதிமுறையாகச் செபித்து நிறைந்த கல்விக் களஞ்சியமாய் எங்கும் மஹா பண்டிதரென்று பிரசித்தி பெற்றனர். இவரது மகிமையைக் கேள்வியுற்ற மஹாருஷிகளெல்லாம் இவருடைய கீர்த்திகளைப் புண்ணியகாலங்கடோறும் பாராயணம்போ லெடுத்துப் பாடுகின்றவராயும் இவருடைய சரித்திரத்தை விரிவாயெடுத்துத் தோத்திரரூபமாகச்செய்து தோத்திரஞ் செய்கின்றவராயு மிருந்தனர். இவ்வற்புதத்தைத் தாய்தந்தையர்களுங் கேள்வியுற்று அதிசயித்தவர்களாய் மிக்க ஆவலோடும் அவராச்சிரமத்தை யடைந்து தமது புத்திரசிகாமணியாரைக் கண்டு அதிக மரியாதையுடன் அழைத்துக்கொண்டுத் தங்களாச்சிரமத்தைப் போய்ச்சேர்ந்தனர்.

(சஅ-ருஅ.) ஓ அரசனே! பன்றிமொருவிய ஒலிக்குறிப்பைக் கண்டு தானும் மொருவ அவ்வொலியைத் தேவியானவள் தன்னுடைய மந்திரபீஜாக்ஷரத்தை யுச்சரித்ததாகத் திருவுளத்திலெண்ணி அவனைக் கவிவாணனாக்கி யாவராலும் புகழும்வண்ணஞ் செய்தாளென்றால், அவள் கருணையை என்னவென்று சொல்லலாம். ஆகையால் அக்கருணாமூர்த்தியாகிய பரதேவதையையே எப்பொழுதுஞ் சேவிக்கத்தக்கவளும், பக்தியுடன் பூஜிக்கத் தக்கவளுமாவள். ஓ அரசனே! எல்லா உலகங்களுக்கும் ஆதிகாரணியாயிருக்கின்ற அந்தத்தேவீ யஜ்ஞத்தை வேதவழியாகச் செய்வையாயின் அது எப்பொழுதும் சர்வாபீஷ்டங்களையுங் கொடுக்கும்; இது சத்தியம். அந்தத் தேவி மனதால் நினைக்கப்பட்டவ

ளாகவும், பக்தியுடனே பூஜிக்கப்பட்டவளாகவும், தியானிக்கப் பட்டவளாகவும், உச்சரிக்கப் பட்டவளாகவும், துதிக்கப்பட்ட வளாகவும், வேண்டுவார் வேண்டும் அபீஷ்டங்களைக் கொடுக்கத் தக்கவளாகவும் இருக்கின்றாளாகையால் அத்தேவியைப் பண்டிதர்கள் "காமதா" என்று துதிக்கின்றார்கள். அத்தேவியைத் துதித்தல் உச்சரித்தல் தியானித்தல், பூஜித்தல், நினைத்தல் முதலியன செய்யாதவர்கள் யாரோ அவர்கள்—ரோகமுடையவராயும், அன்னமில்லாமற் பசித்தவராயும், ஏற்போருக்குக் கொடுக்கும் பொருளில்லாதவராயும், அறிவில்லாதவராயும், பிறராற் பீடிக்கப் பட்டவராயும், சாஸ்திரவுணர்ச்சி யில்லாதவராயும், சத்ருபத்தை யுணரும் உணர்ச்சி யில்லாதவராயும், ஏவலாளிகளுக்கு ஏவலாளராயும், அற்பபுத்தி யுடையவராயும், அங்கஹீனராயும், மந்தபுத்தி யுடையவராயும், போஜனத்திலும் போகத்திலும் திருப்தி பெறுதற் கில்லாதவராயும், இந்திரியங்கள் போகுமார்க்கத்தைத் தடுப்பதற்குக் கூடாதவராயும், பேராசை யுடையவராயும், அஞ்ஞானத்தாற் பீடிக்கப்பட்டவராயும் இருப்பர். தேவியினுடைய தியானமுதலியவற்றோடுங் கூடினவர்கள்—வேதாத்தியயன முதலிய பண்டிதத் திறமையோடும், தேக காந்தியோடும், புத்திர சம்பத்தோடும், ஐஸ்வர்யத்தோடும், திருப்தியான போகத்தோடும், இராஜ்ய லக்ஷ்மியோடும், சூர பராக்கிரமத்தோடும், ஜன வாச்சல்யத்தோடும், சூழ்ந்த பந்துக்களோடுங் கூடியிருப்பர். ஓ அரசனே! இவ்வாறான ஐஸ்வரியங்களைக் கொடுக்கின்ற தேவியைப் பூஜிக்காதவர்கள் யார்! மஹா தாபரூபமாகிய இந்தச் சம்சாரத்தில் தேவியினுடைய அனுக்கிரஹம் பெற்றவர்கள் தாம் சுகமாக விருக்கின்றவர்க ளென்றும், அனுக்கிரகம் பெறாதவர்கள் தாம் முன் கூறியவாறு ரோகமுதலிய வற்றால் பீடிக்கப்பட்டுச் சம்சாரத்தில் துக்கமுற் றிருக்கின்றவர்க ளென்றும் அனுமானிக்கற் பாலது, என்று வியாசமுனிவர் தாம் நைமிச வனத்திற் போயிருந்தபொழுது அங்கிருந்த முனிவர் கூட்டங்களில் உரோமச முனிவர் தேவியினுடைய மகிமையை எடுத்துரைத்ததாக வியாசமுனிவர் ஜனமேஜயனுக்குக் கூறினர்.

பதினொன்றும் அத்தியாயம்

முற்றிற்று.



உ

லப்தவிப்ரமாயை நமஃ.

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

## * தேவீயஜ்ஞவிதி.



(க - ங.) ஜனமேஜயன் வியாசமுனிவரைப் பணிந்து ஓ வியாச பகவானே! தேவியினுடைய யஜ்ஞவிதியில் கூறப்பட்டுள்ள பூஜா விதியையும், மந்திரங்களையும், ஹோமசாதனத் திரவிய விசேஷங்களையும், பிராம்ஹண சங்கியையும், தக்ஷிணை சங்கியையுமாகிய இவைகளில் ஒன்றேனும் விடாமல் பூர்த்தியாகச் சொல்லல் வேண்டும். அங்ஙனஞ் சொல்லுவீராயின் நான் அந்த விதிகளைக் கேட்டு என்னுடைய சக்திக்கேற்றவாறு செய்கிறேன் என்று விண்ணப்பஞ்செய்ய, வியாசர் ஜனமேஜயனை நோக்கி ஓ அரசனே! நீ கேட்டவாறு தேவியினுடைய யஜ்ஞத்தை விதி முறையாகச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

(ச-ரு) அந்த யஜ்ஞவிதியானது சாத்வீகம், ராஜசம், தாமசம் என மூன்றுவிதமா யுள்ளதென்று நூல்களில் சொல்லப்பட் டிருக்கின்றன. அவற்றுள் அந்தணர்களுக்குச் சாத்வீகயஜ்ஞமும், க்ஷத்திரியர்களுக்கு இராஜச யஜ்ஞமும், அசுரர்களுக்குத் தாமச யஜ்ஞமும், இம் மூவரல்லாத ஞானிகளாகிய முத்தான்மாக்களுக்குக்

---

* தேவியானவள் தனதருளை மிக வெளிமையாக வழங்கும் திறத்தை இதுகாறுங் கூறியதாகும். இனி இந்த மூன்ருவது ஸ்கர்கம் முதலத்யாயத்தில் ஜனமேஜயன் வியாசபகவானை "அம்பாமிதம் என்கிற தேவியஜ்ஞத்தைப் பற்றிய விதிமுறைகளை வினவிய வினக்களுக்கு அவர் அருளுடையராய் அந்த யஜ்ஞத்தின் உண்மைப்பொருளையும் அதன் விதிமுறையையும் சிவசத்தியின் பிரபாவத்தை மேன்மேலுஞ் சிரவணஞ்செய்ய அவாவி நிற்கும் அந்தணர்களாகிய நைமிசாரண்ணிய முனிவர்களுக்குச் சூதமுனிவர் எடுத்துக்கூறிய வரலாறு வருதல் காண்க.

குண ரகிதமாகிய ஞானயஜ்ஞமும் விதித்திருக்கின்றன. இந்தப் பேதங்களை விவரமாய்ச் சொல்லக் கேட்பாயாக.

(௬ - ௯) சாத்வீக யஜ்ஞமாவது—தேசம், காலம், திரவியம், மந்திரங்கள், பிராம்ஹணர்கள், சிரத்தை ஆகிய இவைகளோடு கூடியதாகும். இவற்றுள் திரவியமும், கிரியையும், மந்திரமும் சுத்தமாயுள்ள பக்ஷத்தில் அதற்குரிய பலன் குறைவின்றிவரும். இம் மூன்றில் திரவியம் சுத்தமற்றதாகிய அன்யா யார்ஜ்ஜிதமாயுள்ள பக்ஷத்தில் இம்மையிலும் மறுமையிலும் கீர்த்தியுண்டாக மாட்டாது. ஆகையால் இம்மையில் சுகத்தின்பொருட்டும் மறுமையில் பரலோகத்தின் பொருட்டும் இந்தச் சாத்வீக யாகத்தை ஞாயார்ஜ்ஜிதமாகிய திரவியத்தினாலேயே செய்யவேண்டும். ஓ அரசனே! ஞாயார்ஜ்ஜிதத்தாற் செய்வது எதுவோ அதுதான் இகத்திற்கும் பரலோகத்திற்கும் ஏதுவாகும்.

(௰ - ௨௨) அன்னியாய ஆர்ஜ்ஜிதம் ஆகாதென்பதற்குச் சில வரலாறு கூறுகின்றேன். ஓ ஜனமேஜயனே! குறைவற்ற தக்ஷிணையோடு கூடியதாகியும், யஜ்ஞ சிரேஷ்டமாகியும் விளங்கும் இராஜசூயயாகத்தை உன்னுடைய வம்சத்தவராகிய பாண்டவர்கள் மிகவும் பிரசித்தமாய் நடத்தினார்களல்லவா? அந்த யாகத்தில் சுத்தாத்மாவும், யாதவ சிரேஷ்டரும், சாக்ஷாத் நாராயணருமாகிய கிருஷ்ண மூர்த்தியும், சாங்கமாக அத்தியயனஞ் செய்த பரத்வாஜர் முதலிய பிராம்ஹணர்களும் பிரவர்த்தகர்களாக விருந்தன ரல்லவா? இவ்வண்ணம் எவ்விதத்திலுங் குறைவின்றி முடித்த ஒரு மாதத்திற்குள் மஹா கஷ்டமும், வருத்தமாகிய வனவாசமும் அடையப்பெற்றனர். அந்தோ! அவர்களுக்குச் சொக்கட்டாணுடுவதில் அபஜயமும், திரௌபதியினுடைய மானபங்கமும், கஷ்டதரமாகிய வனவாசத்தில் விராடராஜனுடைய சேவகாவிருத்தியும், திரௌபதிக்குக் கீசகனால் மிகவுங் கிலேசமும் வந்துவிட்டதல்லவா? அச்சமயங்களில் யாகபலனும், சுத்தமாகிய இருதயமுடைய பிராம்ஹணனுடைய ஆசீர்வாதமும், கிருஷ்ணரிடத்திலிருந்த பக்தியும் எப்படிப்போயின? ஓ தருமசீலனாகிய அரசனே! திரௌபதியினுடைய நீண்ட கூந்தலைத் துச்சாதனன் பிடித்திழுத்தன னல்லவா? அக்காலத்தில் எந்தப்பலனுந் துணைசெய்யவில்லையே? தெய்வத்தன்மையுடைய கிருஷ்ணமூர்த்தியும், தருமப் பிரபுவாகிய தருமரும் இருந்தார்களே? இவர்களிருக்கிறபொ

மூது தருமத்துக் குறைவுவந்த காரணம் எதுவென்று யோசிக்கற்பாலது? ஆனால் நடக்கவேண்டியது எதுவோ அது நடந்தது என்று உலகத்தார் சொல்லுவதுபோல் சொல்லும் பக்ஷத்தில் சாஸ்திரம் நிஷ் பிரயோஜனமாகிறது. வேதமந்திரங்களும், ஏனைய விதிகளும் வீணாகவே முடிகின்றன. இதிற் சந்தேகமில்லை. சந்தேகமில்லையாயின் புண்ணியார்ஜிதங்களுக்குரிய சாதனங்களையும், அவ்வப் புண்ணியங்களுக்கு விதித்த விதிகளையும் எடுத்துக் கூறும் சாஸ்திரங்களெல்லாம் அப்பிரமாண்யமாய் அபலமாவதிற் றடையில்லை. அபலமாகும்பொழுது சுவர்க்க நிமித்தமாகச் செய்யுந் தவ முதலியவைகளும், வருணதருமங்களும் பயனற்றனவாய் முடியும். இதுபோலவே எல்லாப் பிரமாணங்களும் வீணென்று சொல்லுவதற்கே வரும். ஆகையால் தெய்வப் பிரயத்தினமும் சிந்திக்க வேண்டும். இதற்குப் பண்டிதர்கள் கூறுவது என்னையெனின், ஒருவன் கர்மானுஷ்டானஞ் செய்யும்பக்ஷத்தில் அதனால் அவனுக்கு வரும் பிரயோஜனம் மாறுபாடாக முடியுமாயின் அதனை அவன் செய்யுந் தொழிலினுண்டாகிய தவறினாலென்று கூறுவரேயன்றிச் சாஸ்திரங்கள் தவறுடையனவென்று கூறார். ஆனால் கன்மகாண்டமாகிய ஸ்மிருதிகளைச் செய்திருக்கின்ற வித்வான்களாலே சத்கர்மங்களை அநேக விதமாய்ச் சொல்லப்பட்டிருப்பானேனென்னில், செய்கிறவனுடைய குற்றத்தினாலும், மந்திர தோஷத்தினாலும், திரவிய தோஷத்தினாலும், செய்கையும் அதனால் விளைவதாகிய சுக துக்கரூபமான பிரயோஜனங்களும் பலவகையாய் முடிதலால் அங்ஙனஞ் சொல்லப்பட்டனவென்க.

(௨௩-௩௨) எங்ஙனமெனின், முன்னொருகாலத்தில் இந்திரன் யஜ்ஞஞ்செய்யு நிமித்தம் விஸ்வரூப னென்பவனைக் குருவாகக் கொண்டான். அவன் தேவர்களுடைய சுகத்தின் பொருட்டுச் செய்யத்தொடங்கிய அந்த யாகத்தில் அசுரர்கள் திதியினுடைய புத்திரர்களாதலால் அந்தத் திதியினுடைய சுகத்தையும் உத்தேசித்து "அசுரர்களுக்கும், தேவர்களுக்கும் மங்களம் உண்டாகுக" வென்று அடிக்கடியுஞ் சொல்லிச் செய்துவந்தனன். அதனால் அசுரர்கள் முன்னினும் விசேஷமான வலியுடையவராயினர். அதனைக் கண்ட இந்திரன் கோபமுடையவனாய் அந்த விஸ்வரூபனுடைய தலையை வெட்டினான். அதனால் அந்த யாகம் விபரீதமாகப் போயிற்று.

துருபதமஹாராஜன் அதிகமான குரூரத்துடன் துரோணாச்சாரியரைக் கொல்வதற்கும், புத்திரோற்பத்திக்கும் யாகஞ்செய்

தனன். அவனெண்ணியவாறே த்ருஷ்டத்தூய்மனும் யாகாக்னியில் திரௌபதையும் உண்டாயினர். புத்திரஹீனனாகிய தசரத மஹாராஜன் புத்திர காமேஷ்டி யாகஞ்செய்தான். அதனால் நான்கு பிள்ளைகளும் பிறந்தார்கள். இங்ஙனங் கூறிவந்த இவர்களெல்லாம் யாகங்களைச் செய்தவர்களாகவும், அதனதன் பலனைப் பெற்றவர்களாகவும் இருந்தபோதிலும் குற்றம் விளைவித்தவர்களேயாவர்.

எங்ஙனமெனின், விஸ்வரூபன் அசுரர்களுக்கும் மங்களம் உண்டாகுகவென்று கூறியதை எண்ணுங்கால் அவ்வெண்ணம் தேவர்களுக்கு மங்களம் உண்டாக வேண்டுமென்று எண்ணியதாகுமா? ஆகலான் எண்ணம் வேறுபட்டவனை அதில் வைத்ததனால் அவனாலும் அவன் சொல்லிவந்த மந்திரத்தினாலும் தோஷமுண்டாயிற்றென்றும்; தருமபுத்திரரை யோசிக்குங்கால் அவர் சத்தியவாதி, அவருடைய தம்பிமார்களும் அத்தன்மையாளர், பத்தினியோ மகாபதிவிரதை, இவர்களெல்லாம் அத்தன்மையராயிருந்தும் அவர்கள் சொக்கட்டானாடிய காலத்தில் தோல்வியடையவும், அதுகாரணமாக வனவாச முதலிய அநேக கஷ்டங்களை அனுபவிக்கவும் வந்ததற்குக் காரணம் ராஜசூய யாகத்திற்கு ஆர்ஜித்த திரவியதோஷ சம்பந்தத்தால் அங்ஙனமான விபரீதமாகிய பலங்கள் உண்டாயிற்றென்றும்; தசரதனும், துருபதனும் பின்வருங்கெடுதிக்குப் பரிகாரம் யுக்தியினாற் றேடிக்கொள்ளாமற் போனதனால் துக்கங்கள் விளைந்தனவென்றும் அறியற்பாலன.

(௩௩ - ௩௬) ஓ ஜனமேஜயனே! முன்கூறிய எஜ்ஞத்தை அதி துர்லபமாகவும், க்ஷத்திரியர் முதலியோரால் செய்யப்பட்ட ராஜச யஜ்ஞாதிகள்போல் தோஷமுடைய தல்லாததாகவும், வைகாநசர் முதலியோரால் யுக்தமாகக்கொண்டு அங்கிகரிக்கப்பட்டதாகவும், வனத்திலே யுண்டாகப்பட்ட பரிசுத்தமாகிய திரவியங்களோடு கூடினதாகவும் நினைக்கவேண்டும். * புரோடாசபரமாயும், மிகுந்த யூபஸ்தம்ப முள்ளதாயும், மிகுந்த விதி பூர்வகமான மந்திரங்களோடு கூடினதாயும் உள்ள யாகங்கள் எவைகளோ அவைகளையும் சாத்வீக யஜ்ஞங்களென்றே கொள்ளல்வேண்டும். இந்தச் சாத்வீக யஜ்ஞத்தைச்செய்யும் மஹருஷிகள் நாடோறும் சாத்வீக போஜனத்தையே செய்வார்கள்.

---

* புரோடாசம் என்பது அவிசுவோமத்தில் ஓர் விதமானபாகம்.

(௩எ - ௪௨) இனி ராஜசயஜ்ஞமாவது ;—திரவிய மிகுதியை யுடையதாகியும், பொறாமையோடு கூடினதாயும், பக்ஷபாதத் தோடு கூடினதாயும், க்ஷத்திரிய வைசியர்களால் செய்யப்பட்ட தாயு முள்ளதெனவும், தாமச யஜ்ஞமாவது,—கோபத்தோடும், அகங்காரத்தோடும், குரூரபாவத்தோடும் கூடினதாயும் உள்ள தெனவும் பெரியோர் கூறுவர். இம் மூவகை யஜ்ஞங்களன்றி மான சிக யஜ்ஞமொன் றுளதென்று கூறுவர். அது, விரக்தர்களாய் மோக்ஷாபேக்ஷிகளாயுள்ள மகத்துக்களாகிய மஹருஷிகள் மனோ தர்மத்தினால் சர்வ சாதனத்தோடுஞ் செய்யப்படுவதாகும். இந்த மானசிக யஜ்ஞமல்லாத மற்ற யஜ்ஞங்களில் திரவியத்தினாலாவது, சிரத்தையினாலாவது, கிரியா விதியினாலாவது அந்தணர்களாலா வது, தேச காலங்களினாலாவது, வெவ்வேறாயுள்ள சாமக்கிரியை களினாலாவது சிறிதாயினுங் குறைபாடுண்டாகும். மானசிகமா கிய அந்தர்யாகமானது யாதொரு குறைவின்றி நடக்கும். அது போல் புறம்பே செய்வதாகிய முன்கூறிய பகிர்யாகங்கள் குறை வின்றி நடக்கமாட்டா. ஆனால் அந்தர்யாகத்தை யபேக்ஷித்த அதிகாரியானவன் முன்னர் முக்குணங்களுடைய விருத்திகள்தோ ன்றுவண்ணம் மனோசுத்தியைச் செய்யவேண்டும். மனம் சுத்தத் தையடையுமாயின் தேகமும் சுத்தியை யடைந்ததேயாம். இதிற் சந்தேகமில்லை. இந்திரியங்களுக்குப் பிரயோஜனமான விஷயங் களினின்றும் நீங்குவதாகிய மனோசுத்தி எவனுக்கு எப்பொழு துண்டாகிறதோ அப்பொழுதுதான் அந்தர் யாகத்துக்கு அவன் அதிகாரியாவானென்று பெரியோர் கூறுகின்றனர்.

(௪௩-௫எ) இனி யஜ்ஞவிதியைக் கூறுகிறேன். எங்ஙனமெ னில், பிரமத்தியானமுடைய பிராஹ்மணன் தன்னுடைய இருதயத் தில் யஜ்ஞத்துக்குரிய விருக்ஷத்தினின்றும் நீண்டதாயும் அழகாகி யும் எடுத்துக்கொண்ட ஸ்தம்பங்களால் அநேகயோசனை விஸ் தீர்ணமாக மண்டபத்தைக் கற்பித்துக்கொண்டு அதில் நிர்மலமா கிய குண்டத்தையும், அக்குண்டத்தில் அக்னியையும் ஸ்தாபித்து, அப்பொழுது வேதமூர்த்திகளாகிய அந்தணரநேகர் தன்னுள் வந் ததாகவெண்ணி அவரவரதிகாரத்துக்கேற்றவாறு * அத்வரி, ஹோ

* அத்வரி-நடத்துவிக்கின்றவர், ஹோதா - ஓமஞ்செய்துகொண்டிருக் கிறவர். பிரஸ்தோதா-அக்காலத்தில் வேதமந்திரங்களைத் தோத்திரஞ்செய் கிறவர். உத்காதா-சாமகானம் பண்ணுகிறவர். பிரதிஹர்த்தா - பிராயச் சித்தத்திற் கிடமில்லாமல் நடத்துவிப்பிக்கின்றவர். சபிகர் - கோஷ்டி களாயுள்ளவர்.

தா, பிரஸ்தோதா, உத்காதா, பிரதிஹர்த்தா, மற்றுமுள்ள சபிகர் முதலானவர்களாக நியமித்து விதிப்படி பூசித்து, பிராணன் அபானன், வியானன், உதானன், சமானன் என்கிற பஞ்ச வாயுக்களை முறையே காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினி, அவசகம் சத்யன் என்னும் நாமங்களையுடைய அக்னிகளாகப் பாவித்து அந்த ஓமகுண்டத்தில் பிரதிஷ்டை செய்யவேண்டும். ஏனைய ஓமத்திரவியங்களையும் தோஷமில்லாத தாகவும், மிகவும் பரிசுத்த முள்ளதாகவும், மனதை எஜமானனாகவும், குணரகிதமாகிய பரமாத்மாவை யஜ்ஞத்துக் கதிதேவதையாகவும், பாவித்து; எப்பொழுதும் சர்வ பலத்தையும் சகல சந்தோஷத்தையும் கொடுக்கின்றவளாய், நித்ய மங்களையாய், வேதசொரூபிணியாய் எல்லாவற்றிற்கும் ஆதார பூதையாய், சர்வ வியாபினியா யிருக்கின்ற யாதொரு பராசத்தியோ அந்தச் சத்தியை உத்தேசித்துப் பிராணனாகிய அக்னியில் முன்சொல்லிய திரவியங்களைக்கொண்டு குண்டலி முகமாக ஹோமஞ்செய்தல் வேண்டும். பின்னர் சித்தத்தையும், பிராணாதி வாயுக்களையும் சுத்தமாக்கிச் சுவானுபூதியினால் தன்னாத்மாவோடு அத்வைதமாயிருக்கிற சாக்ஷாத் பராசத்தியைத் தியானித்து அவ்வருணைக்கத்தோடு சமாதியோகத்தை யடைதல் வேண்டும். சமாதியோகமாவது,-பராசத்தியோ டத்வைதமாயிருக்கிற பரமாத்மா எல்லாப் பூதங்களிலும் நிறைந்திருக்கிறதாகவும், எல்லாப் பூதங்களும் அப்பரமாத்மாவினிடத்தி லிருக்கிறதாகவும் கண்டதுவாயிருத்தலாம். எவன் சர்வ பூதாத்மாவாகக் காண்டலாகிய நிலையை எப்பொழுது சிந்திக்கின்றானோ அப்பொழுதுதான் சச்சிதானந்த சொரூபிணியாகிய அந்தக் தேவியைத் தரிசித்தவனாவன். அவன் தான் பிரமவித்தென்று சொல்லப்படுவான். அவன் தான் மாயாவிலாசத்தைச் சுட்டெரித்தவனாவன். அவன் தேக முள்ளளவும் பிராரத்தானுபவத்தை யனுபவிப்பவனாவான். அனுபவிப்பவனயினும் அவனைச் சீவன்முத்தனென்றே சொல்லப்படும். தேகாந்தத்தில் இனிப்பிறவா நெறியாகிய மோக்ஷத்தை யடைகிறான். இதனால் எவனொருவன் சகன் மாதாவாகிய பராசத்தியைப் பஜிக்கிறானோ அவன் கிருதகிருத்தியனாய் விடுவானென்றறியற்பாலது.

(ரு அ - சுரு.) ஆகையால் எவ்வித பிரயத்தினத்தினாலாவது ஸ்ரீபுவநேஸ்வரியானவள் தியானஞ்செய்யத்தக்கவள். ஆகவே அவளது மந்திரம் குருபதேச மூலமாய்க்கேட்டுச் செபிக்கத்தக்கது. ஓ பூபாலகனே! இப்பொழுது கூறிவந்த தேவியினுடைய யஜ்ஞமுறையில் சாத்விகமாகிய ஓமமும், சமாதியுத்தமான தியான சாட்

சாத்கார தரிசனமும் செய்யப்பெறுமாயின் அந்த யஜ்ஞம் மோட்சத்தைக் கொடுக்கும். இவ்விஷயத்திற் சந்தேகமில்லை. இதுவல்லாத ஏனைய யஜ்ஞங்கள் காமத்தோடு கூடினவைகளாயும், நாசமடைவதற்கிடமாயும், யுக்தியுளதாயின் சித்தி கொடுப்பதாயும், அது இலதாயின் சித்தி கொடாததாயும், இருக்கின்றன. ஆனால் பண்டிதர்கள் சுவர்க்காபேக்ஷையுள்ளவன் சாஸ்திரத்திற்சொல்லிய வண்ணம் அக்னிஷ்டோமத்தில் யஜனஞ் செய்யவேண்டுமென்று வேதங் கூறுவதாகச் சொல்லுகின்றார்களே என்றால் சுவர்க்காபேக்ஷையுள்ளவன் அதற்குக்கூறிய முறைப்படி யஜ்ஞத்தைச் செய்ய அப்புண்ணிய விசேஷத்தால் சுவர்க்கத்தையடைவது உண்மையே; அப்புண்ணியம் க்ஷீணத்தையடையுந் தன்மைத்தாகலின் அங்ஙனம் க்ஷீணமடையுங்கால் முன்போல் பூலோகத்தையடைவன். அடைந்த பின்னர் செய்யற்பாலனவாகிய புண்ணியபாவங்களுக் கேற்றவாறு மரணசமயத்திலுதிக்கு மனோசங்கற்பப்படி மீட்டும் நற்கதி துற்கதிகளை யடைவன். இதனால் சாத்வீகமல்லாத ராஜச தாமச யஜ்ஞங்களுக்குமூலங் காமமெனவும், அந்தக் காமம் நாசரூபமாதலால் அதுகாரணமாகச் செய்யும் யஜ்ஞமும் அதனால் விளையும் புண்ணியமும் அப்புண்ணியத்தால் அடையுங்கதியும் நாசத்தையடைகின்றன எனவும், மானசீகமாகிய சாத்வீக யஜ்ஞம் காமமற்றதாகலான் அந்த யஜ்ஞமும், புண்ணியமும் முத்தியாகிய கதியும் நாசரகிதமாய் நித்தியமாய் விளங்குகின்றதெனவும் அறியலாயிற்று. ஆனால் மானசீகயாகம் சாதிப்பதற் கெளிதானதன்று. ஜயத்தை யபேக்ஷித்திருக்கிற ஓ அரசனே! முன் உன்னால் செய்யப்பட்ட சர்ப்பயாகமும் தாமசமென்றே சொல்லப்படும். ஏனெனில், அந்தயாகத்தில் துராத்மாவாகிய தக்ஷகனிடத்தில் வைரங் கொண்டு அநேகஞ் சர்ப்பங்கள் உன்னால் கொல்லப்பட்டன. ஆகவே அந்தயாகத்தில் வைரமும் கொலையுங் காரணமாயிருந்ததேயன்றி வேறில்லை. இந்த இரண்டுகுணமும் தாமசகுணங்களாகையால் அங்ஙனங் கூறியதென்க.

(கூச - கூஎ) ஓ தருமசீலனாகிய அரசனே! இனி உனக்குச் சிருட்டிக்கு முன் எந்த யஜ்ஞஞ்செய்யப்பட்டதோ அந்தத் தேவியினுடைய யஜ்ஞவிதியை விதி முறையாகச் சொல்லுகிறேன். நான் சொல்லப்போகும் அந்த விதி தவறாமல் நீ செய்யவேண்டும். தேவீயஜ்ஞத்தை விதிவழி யறிந்தவர்களாயும் மந்திரமார்க்கத்தில் சமர்த்தர்களாயும் வேதபண்டிதர்களாயும் உள்ள அந்தணர்கள்

இப்பொழுது மிருக்கின்றார்கள். அவர்கள் உன்னுடைய யாகத்தை நடத்திவைப்பதற் குரியவராவர், நீயும் அந்த யாகத்திற்குத் தக்க வனே, ஆகையால் சாஸ்திரமுறையாக அந்த யஜ்ஞத்தைச்செய்து அதனாலுண்டாகத்தக்க புண்ணியத்தை நரகத்தை யடைந்திருக்கிற உன் பிதாவுக்குத் தத்தஞ்செய்து அவனை அதினின்றுங் கரை யேற்றுவாய்.

இதுவரையில் உன்னுடைய வம்சத்தில் உன் பிதா செய்த பாவத்தைப்போல் ஒருவருஞ் செய்ததில்லை, அவன் அடைந்த துர் மரணம்போல் ஒருவரு மடைந்ததில்லை. ஓ அரசனே! பிரபஞ்சத் தோற்ற மில்லாமல் பிரம நிஷ்டையிலிருந்த பிரஹ்ம ஞானிகளுக்கு மானஹானி யுண்டாகும்படிச் செய்தால் அதனால் விளையும் பாவம் சகிக்கக் கூடுமானதா? அன்று. அங்ஙனஞ் சகிக்கக் கூடாத தாய்க் கொடிய நரகத்தைக் கொடுக்கத் தக்கதாயுள்ள வலிய சாபத்தை அந்தப் பிரஹ்மரிஷியினாலேற்று மாயாவிசித்திரமான சர்ப்பத்தினாற் றீண்டப்பட்டு மரணமடையுங்காலத்தி லிருக்கத் தக்க தர்ப்பசயனம், யுத்தமுகம், கங்காதீர முதலிய விடங்களி லோரிடத்திலாவதிருந்து நல்ல மரணத்தை யடையாமல் மேலுப் பரிகையில் ஸ்நானதான சூன்யனாய்த் துர்மரணத்தை யடைந் தான். இதற்குக் காரணம் யோசிக்குமிடத்து ஒன்றுந் தெரிய வில்லை. பிராணிகள் எந்த எந்த விடங்களில் இருந்தபோதிலும் அவர்கள் தங்களுக்கு நிர்யாணகாலம் வருவதை முன்னரறிந்து கொண்டு அதற்குரிய பிராயச்சித்தாதி கருமங்களைச் செய்துகொள் ளல்வேண்டும், அதற்குரிய சாதனங்களுக்குக் குறைவும், தானபரா தீனனாய்ப் பரிதவிக்கவும் வருமாயின் ஆத்மானாத்மவிசாரஞ் செய் தல்வேண்டும். செய்வானாயின் பிராயச் சித்தாதிகள் செய்துகொண் டவனேயாவன். அவ்விசாரம் யாதெனின், "இந்தத் தேகம் பிரி திவிமுதலிய பஞ்ச பூதாத்மகமா யுள்ளதெனவும், துக்கமுடைய தெனவும், இத்தேகக் கூட்டிலுள்ள தத்துவங்களெல்லாம் நாச முடையன எனவும், இத்தேகம் பூர்வகர்மத்தின்படி நம்மைவிட்டுப் போகட்டும் எனவும், இந்தத் தேகத்தில் நமக்குச்சம்பந்தமேயில்லை நாம் இந்தத் தேகமுமன்று, இந்தத் தத்துவங்களுமன்று, நாம்

வேறாயுள்ளேம், குணங்களுக்கும் வேறாயுள்ளேம் எனவும், நாம் நாசமடைய மாட்டோம் எனவும், நாசமடையாத நாம் ஏன் துக்கிக்க வேண்டுமெனவும் எண்ணி, நிர்மலமாயிருக்கின்ற சித்தத்தினால் சுகத்தையடைந்து, பின்னர் நாம் சம்சாரியல்ல, எப்பொழுதும் முத்தத்தன்மை யுடையோம், அநாதியாயுள்ளோம், பிரம சம்பந்த முடையோம் என்று தெளிந்து, நமக்கு இந்தத் தேகம் கன்மத்தினா லுண்டாகியது, அது உண்டாகவே இதாகிதந்தோன்றியது, அது தோன்றவே புண்ணியபாவப் பலனாகிய சுகதுக்கானுபவம் வந்தது, இப்பொழுது அதிகோரமாய்ச் சம்சார சங்கடமாயுள்ள அக்கன்மானு பவத்தினின்றும் விடுபட்டோம்" என்று எண்ணுவதாகும். இவ்வித எண்ணத்தோடுகூடிய சிந்தனையுடன் மரணமடைந்தவன் சென்ம துக்கத்தினின்றும் விடுபடுவான்.

(அ௦ - அஎ.) ஓ தருமசீலனாகிய அரசனே! உன்றந்தையோ பிராயச் சித்தாதி கருமமறிந்து செய்துகொண்டதுமில்லை. ஆத்மானாத்ம விசாரஞ் செய்ததுமில்லை. வீணான விசாரமும், பிரயோஜனப்படாத செய்கையும் செய்து துர்மரணத்தை யடைந்தான். அவனெண்ணியதும் செய்ததும் என்னையெனின், பிராஹ்மணசாபம் நேரிட்டவுடன் தேகம் போய்விடுமேயென் றேங்கித் தேகாபிமானங் கொண்டவனாய் என்னுடைய தேகம் இச்சாபரோகத்தை அடையாதிருத்தல் வேண்டுமே! என்னுடைய இராஜ்யம் சத்ருபயமில்லா திருத்தல்வேண்டுமே! நானெப்படிப்பிழைப்பேன்! ஐயோ மந்திரிகளெங்கே! மாந்திரிகர்களெங்கே! மணிமந்திர அவுடதங்களெங்கே! அவைகளைத் தேடவில்லையா! என்று மேலுப்பரிகையில் கதறிக்கதறி அலைந்திருந்தனனேயன்றி, ஸ்நான சந்தியாதிகள் செய்தவனுமன்று, தேவியை ஸ்மரணை செய்தவனுமன்று தெய்வமே துணையென்று பூமியிற் சயனித்தவனுமன்று, இவ்வாறு ஒன்றுஞ் செய்யவொட்டாது தடைபடுத்திய சாபவசத்தனாய்க் கோரமாகிய அஞ்ஞான சமுத்திரத்தில் மூழ்கினவனாய் ஒருவராலும் அழிக்கக்கூடாத மேலுப்பரிகையி லிறந்துபோயினன். இவ்விதமான மரணத்தால் அவனுக்கு நரக முண்டாய் விட்டது. ஆகையால் உன் தந்தையை அந்த யமபயத்தினின்றுங் கரையேற்றுவாயென்று வியாசமுனிவர் கூற, ஜனமேஜயன் தன் தந்தையின் பரிபவத்தைக்கேட்டுத் துக்கத்தால் பீடிக்கப்பட்டுக் கண்ணீராறாய்ப்பெருக்கி நம்முடையதந்தை நரகத்திலாழ்ந்துவிடக்க நாமிங்கு

வாழ்ந்திருப்பது ஆஹா! நல்லவாழ்வு! நம்முடைய பிழைப்பும் நல்லபிழைப்பு! என்றிகழ்ந்து இனி நான் என்றந்தை சுவர்க்கம் போய்ச் சேரும் மார்க்கத்தைத் தேடுவேனென்று புலம்பிக் கூறினன்.

பன்னிரண்டாவது அத்தியாயம்

முற்றிற்று.



லப்தராகாயைநமஃ.

பதின்மூன்றாம் அத்தியாயம்

## * விஷ்ணுகிருததேவீ யஜ்ஞவிதி.



தந்தையின் பரிபவத்தைப் போக்க மனோவேகங்கொண்ட பரிக்ஷித்து வியாசபகவானை வணங்கி என்னுடைய தந்தை சுவர்க்காரோகணஞ்செய்ய நானிப்பொழுது எண்ணிய கருமம் தேவரீர் கூறிவந்த தேவீயஜ்ஞமே; அதனினும் சிறந்த சத்கருமம் வேறொன்றில்லை என்றெண்ணுகிறேன். ஆகையால் உம்மால் சொல்லப்பட்ட விண்ணுமூர்த்தி அந்த யஜ்ஞத்தை எவ்வண்ணஞ் செய்தனர் என்றுகேட்ட வரலாற்றைக் கூறுகிறேன் மஹா சாம்பவராகிய மஹருஷிகாள்! அதனைக் கேட்டுய்வீர்களாக வென்று சூதபகவான் கூறத்தொடங்கினர்:—

(க - உஎ) தந்தையைக் கரைசேர்க்க வெண்ணிய அரசன் வியாசரைவணங்கி ஓ பிதாமகராயுள்ள பெரியோரே! சகத்காரணரூபியாய், ஒப்பிகந்தவராய், பிரஹ்ம தேஜோவாசராய், சர்வ வியாபகராய் விளங்கும் நாராயணமூர்த்தி முன்னர் தேவீயஜ்ஞஞ் செய்தாரென்றீரே, அவர் எவ்வண்ணஞ் செய்தனர்? அவரந்த யாகஞ் செய்யத்தொடங்கிய காலத்தில் அதற்குச் சகாய பூதர்களாய் வேத தத்வார்த்த முணர்ந்தவர்களாய் ருத்விக்குகளாயிருந்த அந்தணர்கள்யாவர்? இவற்றை நன்றாயெடுத்துக் கூறுவீராயின் நானவற்றைக்கேட்டு நின்மல சித்தனாய் சாஸ்திரத்திற் கூறியவண்ணம் அந்த யஜ்ஞத்தைச் செய்கிறேன் என்று விண்ணப்பஞ்செய்ய, வியாசபகவான் அந்த ஜனமேஜயனை அன்புடனேநோக்கி ஓ மஹா

* விஷ்ணுவினுற் செய்யப்பட்ட தேவியினுடைய யாகவிதி.

னுபாவனே! விஷ்ணு மூர்த்தியினால் விதிமுறையாகச் செய்த அந்த அற்புதமாகிய யஜ்ஞப் பிரபாவத்தைக் கூறுகிறேன் கேட்பாயாக.

* "முன்னர் பிரஹ்மா விஷ்ணு உருத்திரர்களாகிய மூவரும் பராசத்தியை ஓர் த்வீபத்தில் ஸ்திரீ ரூபங்கொண்டு தரிசித்தார்களென்றும், அவர்களுக்கு அத்தேவி சரஸ்வதிமுதலிய மூன்று சத்திகளை அவரவர் தொழிலுக்கேற்றவாறு தந்து விடைகொடுத்தனுப்ப அவர்கள் முன்போல் புருஷரூபிகளாய்த் தெய்வத்தன்மையுடைய விமானரூடராய்க் கண்டோர்க்குப் பயத்தை யுண்டு பண்ணத்தக்க மஹாப் பிரவாகத்தோடு முன்னிருந்த சமுத்திரத்தை யடைந்தனரென்றும், பின்னர் வெள்ளமாறிப் பூமியைக்கண்டு அதில் நின்று தங்கள் தங்களுக்குரிய சத்யலோகமுதலிய உலகங்களைப்படைத்து அவரவரும் அவ்வவ்வுலகங்களில் வீற்றிருந்து சிருட்டியாதி தொழில்களைச் செய்யத் தொடங்கின ரென்றுங் கூறியிருக்கின்றேன். அவற்றுள் சிலவற்றை ஈண்டெடுத்துக் கூற வேண்டியவனாயிருக்கின்றேன் அம்முறையைக்கேட்டு வருவையேயாயின் பின்னர் நீ கேட்கவிரும்பிய தேவியஜ்ஞவிதியை எடுத்துக் கூறுகிறேன். என்னேயெனின், திரிமூர்த்திகளும் பூலோகத்திற்கு வந்தபொழுது தேவியினுடைய ஆஜ்ஞையினால் நிச்சலையாகிய ஆதார சத்தியானவள் அவர்களுடன் வந்தனள். அந்தச் சத்தி, எல்லாப்பொருளையுந் தரிப்பதனால் "தரை" என்றும், அகண்டமாயிருப்பதனால் "பிரிதிவி" என்றும், ஆதிசேஷனுடைய மத்தகத்தில் தரிக்கப்பட்டிருக்கிற சத்தியினுடைய சிரேஷ்டத் தன்மையை அடைந்திருப்பதனால் "மகீதலம்" என்றும், மதுகைடபருடைய மேதையோடு கலந்திருப்பதால் "மேதினி" என்றும், பெயர் பெற்ற இந்த மேதினியிற் கலந்து பூமிசொரூபமாய் விட்டாள். ஓ பூபாலகனே! பின்னர் இந்தப்பூமி அசையாமலிருத்தற்குப் பர்வதங்களை யுண்டுபண்ணி அப்பர்வதங்களை மரத்துக்கு இருப்பாணிவைத் தடித்திருப்பதுபோல் அதில் ஆழ்ந்திருக்க வைத்தனர். அதனால் அம்மலைகளைப் பண்டிதர்கள் "மகீதர" மென்று கூறுவர். அம் மகீதரமாகிய மலைகளுக்குள் மேருமலை மிகப்பெரிதாயும், பொன்மயமாயும், இரத்தினமயமாயிருக்கின்ற அநேக சிகரங்களால் பிரகாசமாயும், பரமாத்புதமாயு முள்ளது.

---

* மூவரும் தேவியைக்கண்ட விவரம் ௩-வது ஸ்கந்தம் ௩-வது அத்தியாயத்திற்காண்க.

பூமியின்செய்தி இங்ஙன மிருக்க, மரீசி, நாரதர், அத்திரி, புலஸ்தியர், புலகர், கிருது, தக்ஷன், வசிஷ்டர் என்று சொல்லப் பட்ட இவர்களனைவரும் பிரஹ்மாவினுடைய பிரசித்தமான புத்திர ராவர். இவருள் மரீசி காசிபரைப் பெற்றூர். அவருக்கு மனை வியாயுள்ளார் தக்ஷனுடைய பதின்மூன்று பெண்கள். அப்பெண் கள் வழியாகவே தேவாசுரர்களுண்டாயினர். ஏனைய மானிடர், மிருகங்கள், சர்ப்பங்கள் முதலிய பலவகைச் சாதிபேதங்களாயுள்ள உயிர்களெல்லாமு முண்டாயின. பிரமனுடைய சரீரத்தில் வலப் பாதியில் "ஸ்வாயம்புமநுவும்" இடப்பாதியில் "சதரூபி" என்கிற பெண்ணும் உண்டாயினர். சதரூபி என்பவளுக்குப் பிரியவிரதன் உத்தானபாதன் என்கிற இரண்டு பிள்ளைகளும், அதிக சுந்தர வதிகளாயுள்ள மூன்றுபெண்களும் பிறந்தார்கள். இவ்வண்ணம் பிரமவம்ஸம் விருத்தியானபிறகு பிரஹ்மா மேருபர்வதத்தினுச்சி யில் தன் பெயரால் பிரமலோகமொன் றுண்டாக்கிக்கொண்டு அதி லிருந்தனன். பகவானுகிய விஷ்ணுமூர்த்தியானவர் இலக்ஷ்மிதேவி யினுல் விரும்பத்தக்கதும், எல்லா வுலகங்களுக்குமே லுள்ளது மான வைகுண்டத்தைக் கிரீடார்த்தமாக வுண்டுபண்ணிக்கொண்டு அதிலிருந்தனர். உருத்திரதேவரும் கைலாசமென்கிற திவ்யமா கிய ஸ்தானத்தை யுண்டாக்கிக்கொண்டு அதில் நந்தியாதி பிர மதகணங்களோடு உல்லாசமாய் உலாவிக்கொண் டிருந்தனர். மேருவினுடைய சிகரத்தில் நாஞவித ரத்னமயமா யுண்டுபண்ணப் பட்ட சுவர்க்கம் தேவாதிபதியாகிய இந்திரனுக்கு அமைக்கப்பட் டிருக்கிறது. அந்த ஸ்வர்க்கத்தில் முன் பாற்கடலைக் கடைந்தகாலத் தில் தோன்றினவைகளா யிருக்கின்ற விருக்ஷங்களுக்குள் சிரேஷ்ட மாகிய பாரிஜாதமும், நான்கு கொம்புகளோடுகூடிய ஐராவத மும், உச்சைஸ்ரவ மென்கிற குதிரையும், காமதேனுவும், அரம்பை முதலிய தேவஸ்திரீகளும் பூஷணமாக அமைக்கப்பட்டுள்ளன. அவைகளை இந்திரன் பரிபாலித்துக்கொண்டு அதில் சுகித்திருக் கின்றனன். அந்தச் சுவர்க்க லோகத்திலேயே, பாரிஜாத முத லியவைகள் பாற்கடலிற் றேன்றியபொழுது தோன்றினவர்களான தன்வந்திரியும், சந்திரனும் பிரகாசித்து வசிக்கின்றனர். பிரஹ்மா விஷ்ணு உருத்திரர் நீங்கலாக ஏனைய சராசரங்களெல்லாம் நாஞ வித பேதங்களாய்க் கற்பிக்கப்பட்டுள்ள தேவ திரியக் மானிட மென்னு மூன்றுவிதமாய்ச் சிருட்டிக்கப்பட்டுக் கன்மபேதங்கட் கிடாய் சராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உற்பீஜம் என்னும் நால் வகை யோனிவாய்ப்பட்டு வெளிவருகின்றன.

(உஅ-சங) திரிமூர்த்திகளும் சத்தியிடத்திலிருந்து இவ்வித மான சிருட்டிபேதங்களைச் செய்துகொண்டு வரும்பொழுது அவருள் ஒருவராகிய விஷ்ணுபகவான் தம்மிடமாகிய வைகுண்டத்தில் இலக்ஷ்மிதேவியோடு கிரீடித்திருக்குஞ் சமயத்தில், முன் பாற்கடலிற் கண்ட இரத்தின வகைகளா லலங்கரிக்கப்பட்டிருக்கின்ற த்வீபத்தையும் அதில் மஹாமாயா சொரூபிணியாகிய எந்தத்தேவியைத் தரிசிக்க ஸ்திரீரூபத்தை யடைந்து மந்திரோபதேசஞ் செய்யப்பட்டதோ அதனையும், நினைத்து அத் தேவியையுந் தியானித்து வைகுண்டத்தைவிட்டுக் கைலாயத்துக்குச் சென்று மஹாதேவரை யழைத்துக்கொண்டு தேவிசம்பந்தமாகிய யஜ்ஞத்தை நடத்துவதற்கு உத்தேசித்து, பிரஹ்மன், வருணன், இந்திரன், குபேரன், அக்னிமுதலிய தேவர்களையும், வசிஷ்டர், காஸ்யபர், தக்ஷப் பிரஜாபதி வாமதேவமுனி பிரகஸ்பதி முதலிய தேவருஷி பிரஹ்மருஷிகளையும், பூசுர ஸ்ரேஷ்டர்களையும் வரவழைத்து வைத்துக்கொண்டு, மஹா வைபவத்தோடு கூடினதாகியும், சாத்வீகமாகியும், ரமணீயமாகியும், யஜ்ஞப் பிரயோஜனங்களாகியுமுள்ள திரவியங்களை மிகவும் விசேஷமாக எற்படுத்திக் கொண்டும், சில்பிகளால் யாகசாலையை விஸ்தாரமாகச்செய்தும், நல்ல அநுஷ்டான பராளாயும் நல்ல இருதயத்தோடும் இருக்கின்ற ருத்விக்குகளை வரவழைத்து மண்டலங்களையும் குண்டலங்களையும் அலங்காரஞ் செய்வித்தும், யஜ்ஞஞ்செய்ய ஆரம்பித்துத் தேவியினுடைய மந்திரங்களைப் பீஜாக்ஷரங்களோடும் ஜபிக்கத் தொடங்கினர். முன் கூறிய அனைவரும் அவரவர் செய்யவேண்டிய விதிகளையும் முறை தவறாமற் செய்துவந்தனர். அந்தணர்களும் விதிமுறையாய்ப் பிரதிஷ்டை செய்திருக்கிற அக்னிகளில் அவிசுகளை விசேஷமாக ஒமஞ் செய்துவந்தனர். அச்சமயத்தில் நல்ல சுரத்தோடும், தெளிவான அக்ஷர விளக்கத்தோடுங்கூடிய ஓ ரசரீரி வாக்கொன்றெழுந்தது. அதுவருமாறு:—ஓ விஷ்ணுவே! நீ தேவர்களுக்குள் சிரேஷ்டனாயிருக்கக் கடவாயென்று முன்னர் மங்கலமொழி யொன்றுகூறி மீளவும் இனி நீ யாவராலுங் கொண்டாடத்தக்கவனும், ஆராதிக்கத் தக்கவனும், தேவர்களுக்குள் சமர்த்தனும், பிரமன் இந்திரன் முதலிய எல்லாத் தேவராலும் பூஜிக்கத்தக்கவனும், இவ்வுலகின்கண் நான் கெல்லைக் குட்பட்டவர்களால் உன்னிடத்தில் பக்திசெலுத்தத் தக்கவனுமாவாய். அங்ஙனம் செய்கின்றவர்களுக்கு நீ வரம் கொடுக்கின்றவனுமாவாய், எல்லாத் தேவர்களுக்கும் வேண்டிய வேண்டியாங்கருள் செய்பவனுமாவாய், இதுவே

யுமன்றி சிரேஷ்டரென்று அழைக்கப்படுவோரில் சிரேஷ்டத்துவமும், சகல ஐஶ்வர்ய சம்பன்னத்வமும், சகல யஜ்ஞங்களில் முக்கிய கர்த்திருத்துவமும், யஜ்ஞஞ் செய்வோரால் பூஜ்யத்துவமும் உடையவனுயுமாவாய். அன்றியும், எல்லாச் சனங்களும் ஆத்மார்த்தமாகப் பூஜிக்கவும், அங்ஙனம் வழிபடுவோருக்கு வேண்டியாங்கருள் புரியவும், அசுரர்களால் பாதிக்கப்பட்ட அமரர்கள் உன்னை அடைக்கலம்புகுங்கால் அவர்களுக்குச் சுகத்தைக்கொடுக்கவும் உரியவனுயுமாவாய். இங்ஙனங் கூறிவந்த விசேடணங்க ளமைவதனுல் ரக்ஷகமூர்த்தி என்றும் பேர்பெறுவாய். இப்படியே சர்வ புராணங்களாலேயும் வேதங்களாலேயும் பூஜிக்கப்பட்டவனுயு மாவாய். அவைகளா லுனக்குண்டாகுங் கீர்த்திக் களவேயில்லை. அன்றியும் உலகின்கண் எப்பொழு தெப்பொழுது தருமத்துக்கு ஹானி வருகின்றதோ அப்பொழு தப்பொழுது உன்னுடைய ஓர் அம்சத்தினுலே பூமியிலவதரித்துத் தர்மரக்ஷணஞ் செய்துவருவாய். அவ்வவதாரங்கள் சிறுமையுடையனவா யிருந்தபோதிலும் அவையெல்லாம் இகழப்படாமல் மிகவும் புகழப்பட்டவைகளாகவும், மகத்துக்களால் கொண்டாடத்தக்க வைகளாகவு மிருக்கும்.

(சச-ருஅ) எனெனில், நீ எந்த அவதாரங்க ளெடுத்தபோதிலும் அவ்வவதாரங்களில் என்னுடைய அம்சங் கலந்திருப்பதால் அந்த அவதாரங்களிற் செய்யுங்காரியங்கள் சித்தியாய்ப் புகழப்படுகின்றன. என்னுடைய அம்சத்தினின்றும் சனிக்கின்ற சத்திகளெவையெனின், வாராஹி, நரசிம்ஹிமுதலிய பல பேதங்களாயுள்ள சத்திகளாகும். அச்சத்திகள் உன்னுடன் கலந்திருந்து எல்லாவற்றையுஞ்செய்து உனக்கே புகழையுங்கொடுக்கப் போகின்றபடியால் நானுவிதமான இழிந்தயோனிகளிற் பிறந்தபோதிலும் அவை உனக்குப் பிரசித்தமான புகழையே கொடுக்குமென்பதிற் சிறிதுஞ் சந்தேகிக்கவேண்டாம், ஓ விஷ்ணுவே! முன்கூறிய வாராஹி முதலிய சத்திகளுடைய ரூபலாவண்ய முதலியவற்றைக்கேட்டு அந்தச் சத்திகளுடைய பலத்தால் எல்லாக் காரியங்களையுஞ்செய்து முடிப்பாய். அச்சத்திகளை ஒருவாறு மதிக்கக்கூடாத ரூபலாவண்ணியத்தோடுங் கூடினவர்களாயும், சர்வாபரண லங்கிருதர்களாயும், அநேக ஆயுதங்களை யுடையவர்களாயும் தியானித்து அவர்களுடைய கலப்பினுல் சாதிக்கப்படாத தேவகாரியங்களையும் எளிதிற் சாதித்துவிடுவாய். இவையாவும் நான் உனக்குக் கொடுத்த வரங்களாகும். நீ எப்பொழுதும் சிறிதேனும் அகங்காரத்தையடைந்து அந்தச் சத்திகளை அலக்ஷியமாய் நினையற்க. பரதகண்டத்தில்

லாமல் சிரேஷ்டமாகிய காமராஜமென்னும் ஓ ரக்ஷரமாகிய மந்திரத்தைச் செபித்திருந்தான். வழிவிடவந்த சுபாகுமாத்திரம் சிந்தாகுலமடைந்திருந்தான். அரசர்களெல்லாம் சுதர்சனன் சசிகலேயோடு வருவதைப்பார்த்து சேனைகளைக்கூட்டிக்கொண்டு கோலாகலஞ்செய்து கன்னிகையைக் கொள்ளைகொள்ளும் இச்சையுடையவர்களாகக் கிளம்பினர்கள். சுபாகு அவர்களைப்பார்த்து யுத்தஞ்செய்யவேண்டுமென் றெண்ணும்பொழுது ஜயத்தையடையவேண்டியவனாகிய சுதர்சனன் தடுத்தனன். தடுத்தும் அவன் றடைபடாது சைனியங்களோடெதிர்த்துவர அவர்களும் இவனோடெதிர்த்து ஒருவரையொருவர் வெற்றிகொள்ளவேண்டுமென்னும் அவாவுடன் சங்கம் பேரிகை துந்துபி முதலிய வாத்தியங்களை முழங்கும்படிச் செய்தனர்.

சத்துருஜித்தென்கிற சுதர்சனனுடைய சகோதரன் தன் தமையனைச் செயிக்கவேண்டுமென்கிற எண்ணமுடையவனாய்த் தனதுபாட்டனாகிய யுதாஜித்தைத் தன்னோடு துணையாகவரும்படியழைத்துக்கொண்டு வந்தனன். வரும்பொழுது சிலவரசர்கள் அவர்களைப்பார்த்து இவர்கள் மஹாபலசாலிகளாகையால் இவர்களே வெற்றியடைவார்க ளென்றெண்ணி அவர்களுடன் கலந்து சைனியங்களையுங் கூட்டிக்கொண்டு யாவருஞ் சுதர்சனனை எதிர்க்கச் செல்லும்பொழுது இடையே கூட்டமாயிருந்த சேனைகளைக் கண்டு மகாகோபங்கொண்டு அவைகளைத் துவசஞ்செய்யும்பொருட்டு பாணசமூகங்களை ஒன்று நூறு ஆயிரமாக ஒன்றின்பின்னென்றாகவிட்டு எங்கும் பாணவருஷங்களாக்கினர். அதுகண்ட சுபாகு நமதுமருகன் நமக்குத்துணையாக வருவானால் இவர்களை வெல்லலாமென் றெண்ணித் தன்னுடைய பரிவாரங்களாயுள்ள யாவரையு மழைத்துக்கொண்டு சுதர்சனனைச் சமீபித்து ஓ தேவித்தியானத்திலிருக்கின்ற மஹாபுருஷனே! இப்பொழுது அதிபயங்கரமாயும மகாவீரர்களுக்கும் உடலம் நடுங்கும்படியாயுமுள்ள யுத்தம நடந்து வருகின்றது. ஆகையால் என்னுடன் நீ துணையாகவரவேண்டுமென்று சொல்லும்பொழுது அந்தச்சுதர்சனனுக்குத் துணையாயுள்ள மஹாதேவி திவ்ய வஸ்திரந் தரித்தவளாயும், மந்தாரபுஷ்பமாலை சூடிக்கொண்டிருக்கிறவளாயும், திவ்யாபரணலங்கிருதையாயும், நானாவிதமான ஆயுதங்களைத்தரித்தவளாயும், சிங்கவாகனரூடையாயும் பிரசன்னையாயினள்,

(௨0-௨௫௪.) அத்தேவியை அரசர்களெல்லாங்கண்டு இதுவென்ன ஆச்சரியம்! சிம்ஹத்தின்மேலிருக்கிற இவள் யார்? எங்கிருந்துவந்தாள்? நமக்கொன்றுந் தெரியவில்லையே என்று தியங்கி ஏங்கியிருக்கும்பொழுது சுதர்சனன் அந்தத்தேவியைத்தரிசித்து சுபாகுவைப்பார்த்து ஓ மாமா! நம்முன் பிரசன்னையாய் அற்புதமாகிய காட்சியைத்தருகின்ற தேவியைத் தரிசனம்பண்ணும். எனக்கிப்போது வேண்டியவற்றை அனுக்கிரகஞ் செய்யக் கருணையுடன் வந்திருக்கிறாள், மிகுந்தபயத்திலிருந்த நான் அந்தப்பயத்தினின்றும் இப்பொழுது விடுபட்டவனாயினேனென்றான். சுபாகுவும் நானும் அப்படியே ஆயினேனென்றான். இவ்வண்ணம் இருவரும் தேவியைப் பயமற்றவர்களாய்ப்பார்த்து நமஸ்காரஞ்செய்து நாங்கள் கிருதார்த்தராயினோம் என்று கூத்தாடி நிற்கும்பொழுது தேவியினுடைய வூர்தியாகிய சிம்ஹமானது ஓர் ஹுங்காரஞ்செய்தது அந்தத் தொனியால் பெருஞ்சேனையாயிருந்தயானைக் கூட்டங்களெல்லாமுயிரிழந்தன. பின்னர் அச்சிங்கம் ஓர் பெருமூச்செறிந்தது. அது மகாகோரமாகிய பெருங்காற்றாய் மற்றப்படைகளையெல்லாம் அதாகதப் படுத்தித் திக்குகளில் ஒதுங்கியது.

(௨௬-௫௫) இவ்வண்ணம் சிம்ஹமானதுபடைகளை நாசஞ்செய்கிறபொழுது சுதர்சனன் தனது சேனாதிபதியைப்பார்த்து ஓ சேனாபதீ! என்பேரில் கோபமுள்ளவர்களாகியும் துர்ப்புத்தியுள்ளவர்களாகியும் வந்த அரசர்களெல்லாம் இப்போது எவ்விடத்திலிருந்து என்னசெய்கிறார்கள்? அந்தவிவரத்தைத் தெரிந்துவருவாயென்றேவ அவனஞ்சி நின்றான். அவனைப்பார்த்து நம்மைரக்ஷிக்கு நிமித்தம் தேவியானவள் வந்திருக்கிறபோது இந்த அரசர்கள் நெருங்கியிருக்கின்ற இந்தமார்க்கத்திற் போக நீயேனஞ்சுகிறாய். நான் இந்தப்போர்முகத்தில் வந்து அஞ்சி நினைத்தவுடன் எழுந்தருளி வந்து என் பயமகற்றியதை நீயறியவில்லையா! நீ அஞ்சாமற்போவென்றான். சேனாதிபதியும் பயமற்றுப் போய்வரத் தலைப்பட்டு அரசர்கணெருங்கி யிருக்கும் மார்க்கத்திற் போயினான். அப்பொழுது யுதாஜித்து மிகவுங் கோபக்கொண்டவனாய் அரசர்களைப்பார்த்து ஓஅரசர்களே! சிம்மத்தின்மேலுட்கார்ந்திருக்கிற ஒரு பெண்பிள்ளையைப்பார்த்து நடுங்கமுற்று என் பயப்படுகிறீர்கள்? இவள் நம்மை என்ன செய்வாள்? நாம் இவளைப்பார்த்து மருண்டிருப்போமாயின் இப்பொழுது அதிகபலமுள்ளவனாய் நம்மை அவ

மானப்படுத்தி ராஜகன்னிகையைக்கிரகித்து அவளோடுபயமற்றவனாய் வேகத்துடன் போகத் தலைப்பட்ட அந்தப் பலஹீனனாகிய சுதர்சனனென்னும் பாலன் நம்மை மதிப்பானா? அவன் நம்மால் உதாசீனமாகப் போக்கத்தக்கவனா? அவன் எவ்வளவுபெரியவேலை செய்திருக்கிறான். ஆகையால் அவனை நாம் அடித்துத்திவ்யாபரணவதியாய் விளங்கும் கன்னிகையை கிரகிப்போம். அவன் அவளைகொண்டுபோகத் தக்கவனா? சிம்ஹத்தினால் கொள்ளத்தக்க ஒருஆகாரத்தை இடையே ஒரு நரியானதுவந்து தடுத்துத் தான் கொண்டுபோவதற்கு யோக்கியமுடைய தாகுமா? இவ்வாறெல்லாஞ்சொல்லி அதிககோபமுள்ளவனாய்த் தன்சேனைகளோடு சத்ருஜித்தையுமழைத்துக்கொண்டு யுத்தஞ்செய்யவேண்டுமென்கிற எண்ணத்துடன் அகங்காரத்தோடெழுந்து பூண்கள்கட்டியிருக்கும் தனுசைக்கையிலெடுத்துக் காதளவுமிழுத்துவளைத்துக் கூர்மையுள்ள சிலீமுகம் விசிகம் என்கிற பாணங்களைச் சுதர்சனனைக்கொல்லும்படி மாறி மாறி விட்டான். அவைகளைச்சுதர்சனன்கண்டு இவைகள் தன்னைக் கொல்லவேண்டுமென்கிற துன்மதியுடைய யுதாஜித்தினால் விடப்பட்ட பாணங்களென் றுணர்ந்து அவைகட்குமாறானவைகளைவிட்டு அப்பொழுதப்பொழுதுவெட்டிவந்தனன். இவ்வண்ணம் இருவரும்போர்செய்யும் பொழுது அநேக ஆயுதங்களைத் தரித்தவளாய் வந்திருக்கிற உலகமாதாவாகிய மகாதுர்க்கையானவள் மிகவுங்கோபவேசங்கொண்டு அநேகவுருவங்கொண்டு யுத்தஞ்செய்கிறவள் போல்காட்டி யுதாஜித்தையும் சத்ருஜித்தையும் கொன்றனள். மாண்ட இருவரும்ரதங்களிலிருந்து யாவருமறியப் பூமியில்விழுந்தனர். உடனே சுதர்சனனுடைய சேனைகள் வெற்றிச்சங்கங்களை முழக்கி ஜய ஜய வென்கிற சத்தத்தை யுண்டாக்கினர். இவ்வொலியைக்கேட்ட அரசர்களெல்லாம் அவ்விருபாணங்களையும் பார்த்துமிகுந்த ஆச்சரியமடைந்தனர்; சுபாகுவும் துர்க்கதியை நாசம்பண்ணுகிறவளாகிய துர்க்காதேவியை மிகுந்த சந்தோஷத்துடன் அடியில்வருமாறு தோத்திரஞ் செய்தனன்.

"நமோதேவ்யை ஜகத்தாத்ரை சிவாயை சததம்நம:
துர்க்காயை பகவத்யை தேகாமதாயைநமோநம:"

"நமஶ்ஶிவாயை சாந்த்யை தேவித்யாயை மோக்ஷதேநம:
விஶ்வவியாயதைஜகன்மாத ஜகத்தாத்ரை நமஶ்ஶிவே" என்றும்;

குணசகிதனுகிய நான் குணரகிதையாயிருக்கின்ற உன்னுடைய நிலையை என்னுடைய புத்தியினால் எண்ணிப்பார்த்தும் எட்டவில்லை. ஓ உலகமாதாவே! சகலவேதங்களிலும் பிரகாசிக்கின்றவளா யிருக்கின்ற தத்பதலக்ஷ்யார்த்தமாகிய பரப்பிரமம் நீ யன்றி வேறில்லையென் றறிதலாகியநிச்சயமென்னும் பக்தியுடையவர்களுக்கு வருந்துன்பத்தைப் போக்கடிப்பதில் மிகுந்த அன்புள்ளவளாகிய பராசத்தியே! உன்னை நானென்சொல்லி நமஸ்கரிக்கப் போகின்றேன். வாக்தேவதையாகிய சரசுவதி சொரூபிணியாயிருக்கின்றவளு நீயே, எல்லாருடைய புத்தீந்திரியமாயிருக்கின்றவளு நீயே, மனோரூபிணியா யிருக்கின்றவளு நீயே, சகல ஆத்மாக்களும் அந்தத்திலடையும் இடமாவிருப்பவளும் நீயே, எல்லாருடைய மனோ விகற்பங்களைப் போக்கடிக்கின்றவளு நீயே இவ்வண்ண மிருக்கின்ற வுன்மை என்னவென்று தோத்திரஞ்செய்யப்போகின்றேன். இந்திரிய கோசமாகாத உன்னுடைய ஆத்மசொரூபத்தை எப்படி நான் தோத்திரஞ் செய்வேன். பிரமவிஷ்ணு ருத்திரர்களும் ஏனையதேவர்களும் எப்பொழுதும் வேதமுதலியகலைகளால் தோத்திரஞ் செய்கின்றவர்களாயினும் அவர்களே உன்குணங்களுடைய சொரூபம் இப்படிப்பட்டதென்று தெரிந்துகொள்ளவில்லையென்றால பேதபுத்தியுள்ளவனுகியும் குணபேதங்களை யுடையவனுகியும் பெரியோர்களால் ஒருண்மையு மறியப்படாதவனுகியும் இருக்கின்ற நான் உன்னுடையமகிமையைத் தோத்திரம் பண்ணுவதற்கு எப்படியோக்கியனுவேன். இவ்வளவு சிறியனுகிய எனக்குச் சத்துருக்களா லண்டயத்தக்க கதி எப்படியுண்டாகும். என்னுடையசித்தமானது உன்னுடைய பிரபாவத்தை விசேடமாகச் சொல்லவேண்டுமென்கிற ஆவலுடையதாயிருந்தும் அதற்கு அதுசெய்யும்படியான சக்தி யமையவில்லை. இப்பொழுது இந்த மருமகன் காரணமாக உன்னுடைய அற்புதமாகிய இந்த தரிசனங் கிடைக்கப்பெற்றேனேயல்லாமல் என்னுடைய புண்ணியத்தால் கிடைக்கப்பெற்றவனல்லன். பிர்மனுதிமும்மைத் தேவரும் இந்திராதிதேவர்களும், முனிவர்களுமாகிய அவர்கள் தத்வார்த்தங்களையறிந்தவர்களாயிருந்தும் அவர்களுக்கு நீதரிசமானுயில்லை. ஓ தாயே! உன்னுடைய தெரிசனமானது சமதமாதி குணங்களாலல்லாமல் அடைவதற்குக்கூடாது. அந்தத்தரிசனம் நான் கிடைக்கப்பெற்றேன்: அறிவிற்சிறியனுகிய நான் எவ்வளவினன். எனக்

குக்கிடைத்த ஜனனமரண வியாதிக்கு மருந்தாயும் ஒப்பிடக் கூடாததாயுமுள்ள உன்காட்சியானது எவ்வளவு அருமையை யுடையது. அவரவரெண்ணத்தோடு கூடினவளாயும் பக்தர்களுக் கனுக்கிரகஞ் செய்வதில் ஆசையுடையவளாயும் தேவர்களால் பூஜிக்கப்பட்டவளாயுமுள்ள ஓ தேவி! நீஎல்லாமறிந்தவள், உன்பிரபாவமாகிய இதை நான் என்னவென்று சொல்வேன். ஓதேவி! பலிஷ்டர்களாகிய இந்த இரண்டரசர்களும் உன்னால் கொல்லப்பட்டு இந்தச்சுதர்சனன் இந்த ஆபத்திலிருந்தும் ரக்ஷிக்கலாயினன். அடியாரிடங் கருணையுள்ளவளே! உனது மகிமையானது மிகவும் வேத சம்மதமாயுள்ளது.ஹேதேவி!இங்குநடந்த அற்புதத்தையோசிக்கும் விஷயத்தில் இது ஒரு ஆச்சரியமாகவுந்தோன்றவில்லை. நீ எப்பொழுதும் தாவர சங்கமங்களையெல்லாம் ரக்ஷிப்பதை எண்ணுமளவில் ஒன்றுக்கொன்று ஆச்சரியமாகவேயிருக்கிறது. அவற்றில் எது ஆச்சரியமானதன்று, ஒராச்சரியமொன்றிருக்கின்றது என்னையெனின் எந்தமானுடனுக்காவது உன்னிடத்தில் பக்திவருமாயின் அதனை நீ பெரிய வாச்சரியமாக வெண்ணி வெளிப்பட்டு வந்து அவனை யாவரும் புகழ்ந்து கொண்டாடும்படியாகச் செய்கின்றனையே இது தானாச்சரியம். ஹே பவானி! உன்னை எப்போதும் துதிப்பதில் இச்சையுள்ள இந்த த்ருவசிந்து மகாராஜனுடைய குமாரனாகிய சுதர்சனனை வாழ்விக்க அவனுக்கு ஜன்ம சத்துருவாயிருந்த யுதாஜித்தைக் கொன்று இப்பொழுது யாவரும்புகழும்படியாகச் செய்தனையே. இதனால்இவன்புகழ்வெளிப்பட்டதா? உன்புகழ் வெளிப்பட்டதா? இப்படி நீ தயையினால் வாராமற்போவையேயானால் இச்சுதர்சனன் என்மகளைக் கூடவைத்துக்கொண்டே வந்தெதிர்த்த அரசர்களோடு யுத்தத்தைச்செய்து அழிவில்லாதகீர்த்தியையும் க்ஷேமத்தையும் எப்படியடைவான்? உன்னைத்தியானிக்கும் அன்பர்களுடைய சனனமரணங்களைப்போக்கிப்பேரின்பத்தைக்கொடுக்குஞ் சாமர்த்தியமுள்ள வுனக்கு இப்பகைவர்களை யொழித்துச் சசிகலையோடு இவனைவாழவைத்தது ஓராச்சரியமா? ஹேஜனனி! உன்னைஉன்னடியார்கள் அளவைப்பிரமாணங்களால் அளவிட்டறியக்கூடாதவளென்றும், கர்மபந்தமில்லாதவளென்றும், சகுணையென்றும்நிர்க்குணையென்றும்ஸ்தோத்திரஞ்செய்கிறார்கள் அப்படிப்பட்டபுவனேஸ்வரியாகிய உன் தரிசனத்தினால் நான்சுகிர்தமுடையனாயும் கிருதார்த்தனாயும் தன்யமாகிய சரீரத்தைப்பெற்றவனாயுமாயினேன். ஹே அம்

பா! இவ்வளவு பிரயோஜனத்தைப்பெற்றநான்உனது பீஜாக்ஷர மந்திரத்தையேனும் தோத்திரத்தையேனும் அறிந்தவனோவென்றால் ஒன்றுமறியாதவன். ஒன்றுமறியாத எனக்கு உன் தரிசனங்கிடைத்ததனால் இவனது பிரபாவமாகிய மகிமை பிரசித்தியாயிற்று என்று தோத்திரஞ்செய்கின்றஅரசனைப்புன்னகையோடுகூடிய சில. . .பார்த்து ஓ நல்லொழுக்கமுடையவனே! உனக்குவேண்டிய வரங்களைக் கேட்பாயாக வென்றனள்.

இருபத்துமூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஸ்ரீபிரசுந்தர்யை நம:

இருபத்துநான்காம் அத்தியாயம்.

## ஸ்ரீ தேவி மஹிமாதி வர்ணனம்

---

(க-ரு) சுபாகுவானவன் அந்த மகேஸ்வரியினுடைய திருவாக்கைக்கேட்டு மிகுந்த அன்புடையவனாய் ஹே தேவி! தேவலோக சம்பத்தை எண்ணினாலும் அதுவுஞ் சிலகாலவனுபவமா யிருக்கின்றது. பூமண்டல ராஜ்ய சம்பத்தையெண்ணினால் அதுவுஞ்சிலகாலவனுபவமா யிருக்கின்றது. உன்னுடைய தரிசனமாகிய சம்பத்தையெண்ணினால் எப்பொழும் நீங்காத அனுபவமா யிருக்கின்றது. ஆகையால் உன்னுடைய தரிசனத்துக்குச் சமானமான சம்பத்து மூன்றுலோகத்தினு மிருப்பதாக வெனக்குத் தோன்றவில்லை ஆகவே எவ்வுலகத்திலும் இல்லாததாகிய உன்னுடைய தரிசனமாகிய சம்பத்தைக் கிடைக்கப்பெற்றபொழுது வேறெந்த வரத்தைக் கேட்கப்போகின்றேன். உலகில் நான் கிருதார்த்த னாய்விட்டேன். ஆயினும் ஹே அம்பா! சலனமில்லாமலும் பங்கமில்லாமலு மிருக்கின்ற உன் பத்தியானது எனக்கெப்பொழுது முண்டாக வேண்டும். இந்த மனோரதமாகிய வரத்தைத்தான் கேட்பதற்கிச்சித்திருக்கிறேன். ஹே அம்பா! இவ்வரத்தைக் கொடுப்ப துண்மையாயின் அடியேனது கிருகத்தில் நீ எப்போது மெழுந்தருளி துர்க்காதேவியென்றும் பெயருடையவளாய்ப் பிரகாசிக்கவேண்டும். ஹே தேவி! சுதர்சனன் சத்துரு சமுகத்தினின்றும் உபாதியில்லாதவனாக எப்படி காக்கப்பட்டானோ அப்படி நானெப்போதும் இந்த

நகரத்தில் சத்துரு பயமில்லாமல் உன்னால் காக்கப்பட்டவனாயிருக்கவேண்டும். ஏ அம்பிகே! பூமியில் எவ்வளவுகாலல் இந்தக் காசி அழிவில்லாமலிருக்கின்றதோ அவ்வளவுகாலமும் நீ இந்தக்காசியைகாக்குந் தெய்வமாக விருக்கவேண்டும். ஹே துர்க்கே! ஹே கருணாகடாக்ஷி நானிந்நகரத்துக்கு அரசனாகவிருப்பதால் அதற்கேற்ற ஐஸ்வரியங்களுள் எதுவெது கொடுக்கலாமென்று திருவுளத்திற் றோன்றுகின்றதோ அவைகளை யெல்லாங் கொடுத்தனுக்கிரகஞ் செய்வாய். அவைகட் கிடையூறு வாராவண்ணம் என் சத்துருக்களை நிவர்த்திசெய்வாய். சத்துருக்களல்லாத துஷ்டர்களையும் நிக்கிரகஞ் செய்வாயென்றனன். இவ்வாறு பிரார்த்திக்குமரசனைச் சகல பாவங்களையும் போக்கவல்ல துர்க்காதேவி கருணைகூர்ந்தவளாய்க் கடைக்கண்ணாற்பார்த்துக் கூறுகின்றாள். ஓ அன்மனே! உனக்குச் சகலசம்பத்துகளும் உண்டாகுக; இப்பூமியானது எவ்வளவுகாலம் வரைக்கு மிருக்கின்றதோ அதுவரையில் எல்லாவுலகினையுங் காக்கு நிமித்தமாய் விளங்குகின்ற முத்தி நகரமாகிய இங்கு நான் உன் வேண்டுகோளின்படி வசிக்கின்றேனென் றனுக்கிரகித்தனள்.

(கஉ-கரு) பின்பு சுதர்சனன் சந்நிதியிற்சென்று சந்தோஷசித்தனாய்ச் சமீபித்து நமஸ்கரித்து மிகுந்த பத்தியுடன் தேவியைத் தோத்திரஞ் செய்தனன். உன்கருணை மிக ஆச்சரியமானது; நானென்ன சொல்லப்போகிறேன். எந்தக்காரணத்தால் பத்தியீனனாகிய என்னைக்காத்தனை. இதனால் பக்தியீனர்களாயிருந்தபோதிலும் அவர்களை காப்பதே உனக்குள்ள வழக்கமென்பது தெரியவந்தது. அது தெரியவரவே நீ பக்தர்களிடத்தில்தான் தயையுள்ளவளென்பதேது? ஹே தேவி! நீதான் எல்லாப் பிரபஞ்சத்தையும் சிருஷ்டிக்கப்பட்டதைப் பரிபாலிக்கின்றாயென்றும், பரிபாலிக்கப்பட்டதை ஒடுக்கிக்கொள்ளுங் காலத்தில் சங்கரிக்கின்றாயென்றுங்கேட்டிருக்கின்றேன் இதனைப் படைத்தழிக்குந் தொழிலேயல்லாமல் காத்தற்றொழிலையு முடையவளென்று தெரியவந்தது; வரவே நான் எப்போதும் உன்னால் காக்கப்பட்டவனென்றாயிற்று. ஆகவே இப்பொழுதுதான் என்னைகாத்தா யென்றாச்சரியப்படுவது ஆச்சரியமல்ல. என்னை எப்பொழுதும் காத்த உனக்கு நான் வேண்டிய பணிவிடை இதுவரையில் செய்யாதிருந்தது தான் ஆச்சரியம்; இனியாவது உனக்கு நான் செய்யத்தக்க பணிவிடை யாது? என்னபணி செய்யவேண்டும்? எங்கே போகவேண்டும்? அதனைச் சீக்கிரம் அநுக்கிர

கஞ் செய்வாய்; உனக்குச் செய்யவேண்டிய பணிவிடையைச் செய்யாத தரித்திரனாயிருக்கிறேன், நான் உன் கட்டளையினால் போகிறேன் இருக்கிறேன் விளையாடுகிறேன் உன்னையன்றி யாதொரு செயலும் இங்குச்செய்வதில்லை என்று துதிக்கும் சுதர்சனனை தயாமூர்த்தி யாகிய தேவிபார்த்துத்திருவாய் மலர்ந்தருளுகின்றாள்.

(கசு-உச) ஓ மகனீயனே! நீ அயோத்திக்குச்சென்று உனது குலதருமத்துக்கு யுக்தமாகிய இராஜதருமத்தை நடத்திவருவாய். எப்போதும் என்னை மறவாமல் அவசியமாய்த்தியானித்தும் நாடோறும் பூசித்தும் வருவையேயாயின் உன்னுடைய இராஜ்யத்துக்கு வேண்டியசுகத்தைச் செய்து வருகின்றேன். எனக்கு விசேடதினங்களாயுள்ள கிருஷ்ணபக்ஷ அஷ்டமியிலும், நவமியிலும் சதுர்த்தசியிலும், பலிதான முதலியவற்றோடு விதிமுறையாய் நம்முடைய பூசையைச்செய்துவருவாய். இவ்வண்ணம் உன்னுடைய அயோத்திமா நகரத்தில் நித்தியம் மூன்றுகால பூஜையும், பக்திபூர்வகமாய் மிகமுயற்சியோடு நடத்தும்படி ஏற்படுத்துவாய். சரத்துருதுவில் வரும் நவராத்திரியிலும், சைத்ரம் ஆஷாடம் ஆஸ்வீஜம் மாகம் என்னும் 4 மாதங்களிலும், கிருஷ்ணபக்ஷம் அஷ்டமி,சதுர்த்தசி என்னுந் தினங்களிலும், என்னிடத்தில் அன்புள்ளவர்கள் என்னுடைய ஆகமத்திற் கூறியிருக்கும் பூஜையை அவசியமாய் அந்தந்தக்காலத்திற்கு விதித்திருக்கும் விதிப்படி விசேஷமாய்ச் செய்துவர நீ விதிக்கவேண்டுமென் றநுக்கிரகித்து அந்தர்த்தானமாயினள். மறைந்துபோன அந்தத் தேவியைத் தரிசித்த அரசர்களெல்லாம் சுதர்சனனைச் சமீபித்து இந்திரனைத் தேவர்களெல்லாம் நமஸ்காரஞ் செய்வதுபோல் நமஸ்கரித்தார்கள். மாமனாகிய சுபாகுவும் அந்தச் சுதர்சனனை வணங்கிச் சந்தோஷ சித்தனா யெதிரிலிருந்தனன்.

(உடு-நந.) அரசர்களெல்லாம் சுதர்சனனை நோக்கி கூறுகின்றார்:— நீயே எங்களுக்குப் பிரபு, நீயேரக்ஷகர்த்தா, யாங்களனைவரும் உனக்கு அடிமையாளா யிருக்கத்தக்கவர்கள், இனி அயோத்தியில் செங்கோல் செலுத்தி எங்களைப் பரிபாலனஞ் செய்யவேண்டும். ஓ மகாராஜனே! உன்னுடைய அநுக்கிரகத்தால் புருஷார்த்தங்களாகிய அறமுதலிய நான்கையுங் கொடுக்கின்றவளாயும் ஆதிசத்தியாயும் பிரபஞ்ச நாயகியாயுமிருக்கின்ற மகேஸ்வரியானவள் தரிசனமாயினாள். எந்தக்காரணத்தினாலோ இவ்வுல

கின்கண் ஆதிசக்தியாகிய பரமேஸ்வரியை நீயுந் தரிசனஞ்செய்து எங்களேயுந் தரிசிக்கச் செய்தபடியினுல் நீயே தன்யன் நீயே கிருத கிருத்தியன் நீயே வெகு புண்ணியமுடையோன். ஆனல் அந்தப் பரமேஸ்வரி யாதுகாரணத்தினுலுனக்குப் பிரசன்னை யாயினுளோ அறியோம். ஓ இராஜனே! தேவியினுடைய மாயையில் மோகிக் கப்பட்டுத் தமோகுண முடையராயிருக்கிற நாங்களுன்னுடையபிர பாவத்தை எப்படியறிவோம். நாங்களெல்லோம் பொன்னிலும் பெண்ணிலும் பிள்ளையிலும் சிந்தனேயும், ஆசையுமுடையவர்களா ய்க் காமக் குரோத லோப மோக மத மச்சரமென்னு மிவைகள் நிறைந்துள்ள கோரமாகிய இந்தச் சம்சாரத்தில் மூழ்கிக்கிடக் கின்றேம். ஓ மஹாநுபாவனே! ஜ்ஞானவானே! நீ சர்வக்ஞனுகின் ருய்; நீயறியாததொன்றுமில்லை. ஆகையால் இந்தச் சக்தியானவள் எங்கிருந்து வந்தவள்? எவ்விதமான மகிமையுடையவள்? என்ன பிரபாவமுடையவள்? எவ்விதமான சொரூபமுடையவள்? எதிலி ருந்து ஜனித்தவள்? இவைமுழுவதுங் கேட்பதற்குஇச்சையுடைய வர்களா யிருக்கின்றேம் நீ சொல்லல்வேண்டும். சம்சாரசாகரத் தில் வீழ்ந்துகிடக்கும் எங்களுக்கு நீ ஓரோடம்போ லிருக்கின் றனை. அன்றியும் நீ மகாபெரியோன். ஆகவே தயைகூர்ந்து சிரேஷ்டமாகிய தேவி மான்மியத்தைச் சொல்லல்வேண்டுமென்று மீளவும் பிரார்த்தித்தனர்.

(நசு-சுடு.) த்ருவ சிந்துவின் குமாரனுகிய சுதர்சனன் அந்த அரசர்கள் மிகவும் வணக்கத்தோடு கேட்பதற்கிரங்கித் தேவியை மனதிற்றியானித்து சந்தோஷ சித்தனுய்ச் சொல்லத்தொடங்கி னன். ஓ அரசர்களே! அத்தேவியின் சரித்திரத்தை என்னவென்று சொல்லப்போகிறேன். பிரமதேவர் முதலிய தேவர்களும் அறிய மாட்டார்கள். எல்லாவுலகங்களுக்கும் ஆதியாய் மேலாயிருக்கின்ற பராசத்தியானவள் திரிகுணுதீதமாகிய சுத்தசத்துவகுணப் பிரதா னையாய் அழிவில்லாத மோக்ஷசம்பத்தையும், முக்குணத்துளொன் ருகிய இரஜோகுணப் பிரதானையாய்ச் சிருட்டியையும், சத்வகுணப் பிரதானையாய்ப் பரிபாலனத்தையும், தமோகுணப் பிரதானை யாய்ச் சங்காரத்தையுஞ் செய்துவருகின்ருள். இவ்வாறு அவரவர் வேண்டியாங்கருள்புரிந்து நிர்க்குணமாகிய பராசத்தியாய்ப் பிர மனுதியருக்குக் காரணமாயிருக்கின்ருள். ஓ அரசர்களே! தேவியி னுடைய நிர்க்குண சொரூபத்தைப் பெரும்பாலும் யோகிகளானு

மறிவதற்குச் சாத்தியமாகாது. ஆனால் பண்டிதர்களாகிய ஞானிகள் எப்போதும் தேவியைச் சகுணையாகவே தியானித்துச் சுகமாய் வணங்குவரென்று சொல்லியதைகேட்ட அரசர்கள் ஐயா நீர் பாலியத்தில் யுதாஜித்துக்குப் பயப்பட்டு வனத்தை யடைந்திருந்தகாலத்தில் இந்தப்பராசத்தியைஎப்படியறிந்து உபதேசித்து வந்தீர்? அவளெப்படிச் பிரசன்னையாயினாள்? இவ்வளவு சீக்கிரத்தில் எப்படிசகாயஞ் செய்யவந்தனளென்று வினவினர். சுதர்சனன் ஓ அரசர்களே! பால்யனாயிருந்தபோது அந்தத்தேவியினுடைய சாஸ்திரசம்பந்தமாகிய காமபீஜமென்கிற மந்திரத்தைத் தெய்வீகமாய்க் கேட்கப்பெற்று ஜபித்துத் தியானித்துக்கொண்டிருந்தேன். பின்னர் ருஷிகளால் அம்மந்திர அதிதேவதையாகிய மகேஸ்வரியினுடைய பெருமையைச் சொல்லக்கேட்டு மிகுந்த பக்தியுடன் அகோராத்திரம் தேவியைத் தியானித்துச் செபித்துக் கொண்டிருந்தேன். அதனால் அவள் கருணையைக் கிடைக்கப்பெற்றேனென்றான். அரசர்கள் மிகுந்த பக்தியுடையவர்களாய் அந்தச் சுதர்சனனுடைய வாக்கைக்கேட்டுப் பராசத்தியைப் பரப்பிரமரூபிணியாக நினைத்துத் தங்களுடைய கிருகங்களுக்குப் போயினர். சுபாகு சுதர்சனனைக் கொண்டாடிக் காசிநகரத்தை யடைந்தான். தருமாத்மாவாகிய சுதர்சனனும் கோசலதேசத்தை யடைந்தான்.

(சகூ - ௫0.) மந்திரிமரர்களும், மற்றுமுள்ள நகரவாசிகளும், சுதர்சனன் தன்னோடு யுத்தம்செய்யவந்த யுதாஜித்தையும், சத்ருஜித்தையும், வொன்றுவருவதைக் கேள்வியுற்று ஆனந்தக்கடலில் மூழ்கினவர்களாய்ப் பூரணகும்ப முதலியவற்றைச்சிறப்புடனெடுத்துக்கொண்டு சென்றார்கள். அரசர்களெல்லாம் த்ருவசிந்துகுமாரனென்று தெரிந்துக்கொண்டு நானாவிதமான முத்தார முதலியவற்றைத் தாங்கள் செய்யத்தகுங் கையுறையாககொண்டு சென்றார்கள். இவ்வாறு யாவரும் எதிர்கொள்ளச் சுதர்சனன் சசிகலை சமேதனாய் அயோத்தி நகரத்தையடைந்து யாவரையும் நன்மொழியினாற் கொண்டாடி ஆஸ்தானத்தையடைந்து கட்டியக்காரர்கள் புகழெடுத்துப்பாடவும், மந்திரிகள் வணங்கவும், மங்களப்பெண்கள் ஆலஞ்சுற்றி மலர்களை மாரிபாகப் பொழியவும் வீற்றிருந்தனன்.

இருபத்துநான்காம் அத்தியாயம் முற்றிற்று.

---

ஹ்ரீங்கார ஜடேக மணயே நம:

இருபத்தைந்தாம் அத்தியாயம்.

## சுதர்சனஸ்ய பைத்ருக ராஜ்யப் பிராப்தி

(க-கக) இராஜாதி ராஜனாகிய சுதர்சனன் அயோத்தியையடைந்து தனது இஷ்டஜன குடும்ப சமேதனாய்த் தன்றந்தை யிருந்த விடத்திற்குப்போய்த் தந்தையைநினைந்து அந்தப்புரஞ்சென்றுமிகுந்ததுக்கமுடையவளாகியசத்துருஜித்தின்தாயை நமஸ்கரித்துகூறுகின்றான்:—ஓஅம்மணி! உன்குமாரனும்பிதாவும் யுத்தத்தில்துர்க்காதேவியினால் இறந்தார்களேயல்லாமல் என்னால் கொல்லப்பட்டவர்களல்லர்.உன்பாதங்களி லாணையிடுகிறேன்,இவ்விஷயத்தில்என்னால் ஒருகுற்றமும் நடந்ததில்லை. அனுபவிக்கவருவதை ஒருவன் கஷ்டமென்றறிந்துகொண்டு அதனையனுபவிக்காமல் நிவிர்த்திசெய்யவேண்டுமென் றெண்ணுவானாயின் அது நிவர்த்தியாகுமா? ஆகாதுஓஅம்மா! இறந்துபோன உன்புத்திரனுடைய விஷயத்தில் நீ துக்கப்படவேண்டிய தொன்றுமில்லை. ஆன்மாக்கள் தாந்தாம்செய்த வினைக்கீடாயெடுத்த சரீரசுகங்களை யனுபவிக்கின்றார்கள். என்தாயாகிய மனோரமைக்கு நானெப்படியோ அப்படியே உனக்குப்புத்திரனாயும் தாசனாயு மிருக்கின்றேன். எனக்கு உங்களிருவரிடத்திலுஞ்சிறிதும் பேதமில்லையென்று சொல்லுந்தோறும் லீலாவதிக் குண்டாகுந்துயரத்தைப்பார்த்து ஓஎன்தாயே! புண்ணியபாவங்களாகிய வினையையனுபவிக்கவேண்டிய தவசியமாகையால் ஒருபொழுதுஞ் சுகதுக்கங்களைக்குறித்து இன்பத்துன்பங்க ளடையவுங்கூடாது. அவைகளிற் புத்தியைச்செலுத்தவுங்கூடாது,செலுத்தினால் * துக்கத்தில்அதிக துக்கத்தையும் சுகத்தில் அதிக சுகத்தையும் பார்க்க வேண்டுமேயன்றிச் சத்ருத்துதமா யிருக்கின்ற அவைகளில் புத்தியைச் செலு

* துக்கத்தில் அதிகதுக்கத்தைப்பார்த்தலாவது—இப்போது வந்ததுக்கத்துக்கு ஏதுவாயிருந்தது பூர்வஞ்செய்த பாவமல்லவாவென்று எண்ணிப்பார்த்தல், அதுபோலச் சுகத்துக்கேதுவா யிருந்தது பூர்வஞ்செய்த புண்ணியமல்லவா வென்று எண்ணிப்பார்த்தல்.இவ்வாறெண் ணுங்கால்பாவத்தில் அதிகதுக்கமும்,புண்ணியத்தில்அதிகசுகமுந் தோன்றுமென்க.

த்தக்கூடாது. தாயே! நான் வனத்தில் வசித்திருந்த காலமளவும் இந்தவிடத்தில் எது அநுபவிக்கவேண்டுமோ அது அநுபவிக்கவேண்டுமென்ற அறிவுடனிருந்தேனேயன்றி இந்த இராஜ்யசுகத்தை யெண்ணித் துக்கித்தவனன்று.

இந்தச் சராசரமாயுள்ள வுலகமெல்லாம் தெய்வாதீனமாயிருப்பதல்லாமல் ஒருபோதுஞ் சீவர்களுடைய ஆதீனமாயிருப்பதல்ல. இவ்வுண்மையறிந்த புத்திமான் ஆத்மாவைச் சுகதுக்கமாகிய சோபத்தினால் தபிக்கச்செய்யமாட்டான். மரத்தினாற்செய்த பெண்பாவையானது தன்னை ஆட்டிவைக்கின்றவனால் எப்படி யாடுகிறதோ அப்படிச் சீவராசிகளை அவர்கள் கன்மமானதுஆட்டிவைக்கின்றது இப்பொழுது என்வினை என்னையாட்டிவைத்தது நீயு மறிந்ததுதானே ஆயினும் சொல்லுகிறேன்.

இங்கு என் தாயாரைப்பெற்ற பாட்டனா ரிறந்துபோய்விட்டபொழுது என்தாய் துக்கித்துப் பயந்தவளா யென்னை அழைத்துக்கொண்டு மகாரணியத்தி னுழைந்துபோயினள்; போகும் அவ்விடத்தில் திருடர்கள் புரட்டிப் புரட்டியடிக்க வஸ்திரஹீனையாய் வழிச்செலவுக்குள்ள பொருளுமிழந்து அவ்வளவு துன்பத்திலும் பாலனாகிய என்னைக் கைவிடாமல் ஆதரவற்றவளாய்ப் பரத்துவாசுராச்சிரமத்தை அடைந்தனள். என்தாயுடன் சகாயமாய் வந்த பேடியும் தாதியுங் கூடவந்தனர். யாங்களனைவரும் கருணாசாலிகளாகிய முனிவர்களாலும் முனிபத்தினிகளாலும் கொடுத்துவந்த கந்தமூல பலங்களாலுஞ் செந்நெல் முதலிய தானிய வகைகளாலும் உயிரைப் பாதுகாத்து இவ்வளவுகாலமும் அங்கேயே யிருந்தோம் அதுவரையில் நான் வருந்துக்கத்தைப் பார்த்து அதையனுபவித்து வந்தேனேயல்லாமல் நான் துக்கமடையவில்லை. அதுபோலவே இராஜ்யத்துக்குவந்த இப்பொழுதும் வருஞ் சுகத்தைப் பார்த்து அதை அநுபவிப்பனேயல்லாமல் சந்தோஷ மடையப்போகிறதில்லை. இதனால் என் சித்தத்தில் விரோதமும் பொறுமையும் சுகமும் துக்கமும் உண்டாவதில்லை நான் வனத்தில் செந்நெல்லைப் புசித்திருந்ததை இப்பொழுதெண்ணுங்கால் இந்த இராஜ்ய போகத்தைக்காட்டிலும் அது சிறந்ததென்று தோன்றுகிறது. இந்திரிய சமூகத்தை வென்றவன் எப்படி நரகத்தை அடையமாட்டானோ அப்படி செந்நெல்லைப் புசித்தவன் நரகமடையமாட்டான்.

(௨0-௨௬) இவ்வண்ணம்சுதர்சனன் சொல்லக்கேட்டலீலாவதி

மிகுந்த வெட்கமடைந்து புத்திரசோகத்தை விட்டுக்கண்ணீர்வி ட்டழுது சுதர்சனனை நோக்கி கூறுகின்றார்:— ஓ குழந்தாய்! யுதாஜித்து உன் பாட்டனாரைக்கொன்று இராஜ்யத்தை அபகரித் தான். அச்சமயம் என்பிதாவையும் என்குமாரனையும் தடுப்ப தற்கும் சக்தியில்லாதவளா யிருந்தேனாகையால் நானும் அந்த அப ராதத்தை யுடையவளானேன். ஆனால் அவர்களெண்ணியதுபோல் நானெண்ணங்கொண்டவளன்று யுதாஜித்துச் சிறிதுமெண்ணாது செய்த தீவினைக்கீடாக அவனும், சகோதரத்துரோகமுண்டாகுமே என்றஞ்சாததனால் என்குமாரனும் மரணத்தை அடைந்தார்களே யன்றி நீ அவர்களைக் கொன்றவனல்லவென்பது எனக்கு நிச்சயந் தான். என்புத்திர னிறந்தானென்று துக்கிக்கவில்லை. அவன்செய்த துன்மார்க்கத்தைக்குறித்துத் துக்கிக்கின்றேன். ஓ சுதர்சனா நீ தான் எனக்குப்புத்திரன். உன்றாய்தான் என்னுடன் பிறந்தவள் உன்னிடத்தில் எனக்குச்சிறிதேனும் கோபமும் வருத்தமுங்கிடை யாது. இனி நீ தேவியினுடைய அநுக்கிரகத்தால் சத்துருபாதை யில்லாமல் கிடைக்கப்பெற்ற இந்த ராஜியத்திலிருந்து செங்கோல் செலுத்தி அந்தணர்களைப் பரிபாலித்து ஏனையரையும் காத்து வருவாயென் றாசிபுகலச் சுதர்சனன் லீலாவதியை நமஸ்கரித்து முன் தன் தாயிருந்த விடத்துக்குப் போயினன்.

(உஎ-சரு) பின்னர் எல்லாமந்திரிகளையும் சோதிடர்களையும் வரவழைத்து ஒரு சுப முகூர்த்ததினத்தைக் கேட்டுப் பின்னரவர் களைப்பார்த்து ஓ பெரியோர்களே! நான் சுவர்ணமயமாயும் மணி மயமாயுமுள்ள சிங்காதனமொன்றைச்செய்வித்து அதில் தர்மார்த் தகாம மோக்ஷங்களைக்கொடுக்கின்ற தேவியைப்பிரதிஷ்டைசெய்து சர்வோபசாரத்தோடும் பூசித்துப் பின்னர் இராமனாதியர்களால் நடத்திியிருக்கப்பட்ட இந்த இராஜ்யத்தைப் பரிபாலிக்கின்றேன். என்னைப்போலவே நகரவாசிகளனைவரும் தேவியைப் பூசித்துவர வேண்டும். அவள்தான் சர்வகாமார்த்த சித்திகளைச் கொடுப்பவ ளென்றுசொல்லவும், மந்திரிகள் அரசனாணையைக் கடத்தற்கஞ்சி அவனிஷ்டம்போல் சில்பிகளால் மனோகரமாகிய மண்டபத்தை யுண்டாக்கி நல்ல சுபதினங்கூடிய சுபமுகூர்த்தத்தில் தேவியினு டைய திருவுருவத்தைச்செய்வித்துச்சோதிடர்களையும் பிராமணர் களையும் வரவழைத்துத் தேவியினுடைய தந்திரப்படிபூசித்துயக்ஞ முதலியவற்றையும் விதிவத்தாய் நடத்தி மண்டபத்தில் சுதர்சன

னைக்கொண்டு ஸ்தாபனஞ்செய்தனர். அப்பொழுது பிராமணர்களுடைய வேதகோஷங்களும், வாத்தியகோஷங்களும், நானாவிதமான கானகோஷங்களும், அவ்விடத்திலொன்றாய்க் கடலோசைபோற் கோஷிக்க வேதவித்துக்களாகிய பிராமணர்களால் விதிவத்தாய்ப் பரமேஶ்வரிக்குச் செய்யவேண்டிய திருவிழாவாகிய மஹோற்சவஞ் செய்வித்துத் தேவிபூசையைக் கொண்டாடினர்.

அதன்பின்னர் சுதர்சனன் பிதுராச்சிதமாகிய இராஜ்யாதிகாரத்தைச் செலுத்திச் சந்தோஷ சித்தனாயிருந்தான். ஜகன்மாதாவாகிய பரமேஶ்வரியுங் கோசலதேசத்தில் மிகவும் பிரசித்தியாயிருந்தனள், தருமமார்க்கத்தினாற் சயசாலியாயிருந்த சுதர்சனன் சத்ருக்களையெல்லாம் தன்னாணையி னிற்கச்செய்து பூர்வத்தில் ரகு மகாராஜன் திலீபன் இராமமூர்த்திமுதலாயினார் அந்தணர்முதலாயினார்க்கு எப்படி சுகமுண்டாக்கினரோ அப்படியே சுகமும் சத்தியமும் மறியாதையும் வருணாச்சிரம தருமங்களும் வளர்ந்தோங்கும்படிச் செய்தனன் உலகில் யாவரும் அதன்மத்தியில் பிரவேசிக்காமலிருந்தனர். எல்லாவரசர்களும் தங்கள் தங்களிடங்களில் தேவிக்கு ஆலய நிர்மாணஞ்செய்து அயோத்தியில் எவ்வண்ணம் பூசையாதிகள் நடந்துவருகின்றனவோ அவ்வண்ணம் நடத்திவந்தார்கள். சுதர்சனன் மாமனாராகிய சுபாகுவும் தன்னுடைய நகரத்தில் தேவியினுடைய விககிரஹத்தைச் செய்வித்துப் பக்தியுடன்பிரதிஷ்டை செய்து ஆராதித்துவந்தனன். அந்த நகரவாசிகளும் மிகுந்த அன்போடு விசுவநாதருக்கு எவ்வாறு பூசையாதிகளை நடத்திவருகின்றனரோ அவ்வாறே மகேஶ்வரிக்கும் நடத்திவந்தனர். ஓ ஜனமேஜய மகாராஜனே! அரசர்களெல்லாம் மஹேஶ்வரியினுடைய பூஜா துரந்தாளாக விருந்தபடியால் இப்பூமண்டல முற்றும் மகேஶ்வரியே பிரசித்தமாயிருந்தனள், அவளுடைய பக்தியும் அவ்வாறே பிரசித்தியடைந்திருந்தது. அத்தேவியைப் பூசிக்காத வருணத்தவரும் ஆச்சிரமிகளுமில்லை, அப்படியே யோகிகளும் தேவிபக்தி யுள்ளவர்களாய் அவனுடைய ஆகமங்களிற் சொல்லப்பட்ட ஸ்தோத்திரங்களோடு செபத்தியான முதலியவற்றையும் அன்போடு செய்துவந்தனர்என்றனர்.

இருபத்தைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

---

ஹ்ரீங்காரதர்சபிம்பிகாயை நமஃ

## இருபத்தாறும் அத்தியாயம்.

## நவராத்திரி பூஜாவிதி.

(க-ங) ஓ முநிசிரேஷ்டரே! சரத்காலத்தில் நவராத்திரி வருகிறபோது என்னசெய்யவேண்டும்? அதை விதிப்படிச்சொல்லும்? அந்தப் பூஜைசெய்வதனு லென்னபயன்வரும்? இவற்றைவக்கருணையுடன் சொல்லவேண்டுமென்று அரசன்வினவினன். ஓஅரசனே! விசேஷமாகச் சொல்லப்பட்ட சரத்காலத்தில் பரிசுத்தமாய் நடத்தவேண்டியநவராத்திரி விரதத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக அந்தநவராத்திரிபூஜையை வசந்த காலத்திலேயும்அன்புடன் செய்யவேண்டுமென்று வியாசர் கூறுவார்:—

(ச-கள) வசந்தருது சரத்ருது என்னு மிரண்டு ருதுக்களும் இயமனுடைய இரண்டு கோரப்பல்லுக்குச் சமானமாயுள்ளன. அந்த இரண்டும் மாநுடர்களுக்குத் தெய்வாக்கிரகத்துக் கிடங்கொடாமற் றடைசெய்யும் பகையாய் ரோகத்தைச்செய்து நாசம் பண்ணுவதாகும். ஆகையால் பண்டிதர்கள் இம்மை மறுமை யின்பங்களை வேண்டி மாநுடர் இவ்விரு ருதுக்களினு முண்டாகுஞ் சரீரதருமமா யிருக்கின்ற இடையூறுகளுக் கிடங்கொடாமல் தேவியைப் பூசித்தல் வேண்டு மென்று கூறுவர்.

நவராத்திரி பூஜைக்கு விதித்திருக்குஞ் சகலத்திரவியங்களையும் அமாவாசைதினத்திலேயே சேகரித்துக்கொண்டு அன்று ஒருவேளைபோஜனத்துடன் உபவாசியாயிருந்து மறுநாள் பிரதமை முதல் பூஜைக் காரம்பித்தல்வேண்டும். அப்பூஜைக்குரிய மண்டப வேதிகைளுடைய அளவைப் பிரமாணமுதலியன எத்தன்மைத்தெனின்? மண்டப ஸ்தானமானது சமமாயும், பார்ப்பதற்குச் சுகமாயும்,பசுவின் கோமயத் தால் மெழுகிச் செம்மண்ணிட்டதாயும், நான்கு மூலைகளிலும் பதினறு முழமுள்ள நான்குஸ்தம்பங்களைத் துவஜத்தோடு நாட்டப்பட்டதாயும், மேற்கட்டோடுகூடியதாயும், விசித்திரமான தோரணங்களா லலங்கரிக்கப் பெற்றதாயும் மண்டபமிருத்தல் வேண்டும். அதன்மத்தியில் நான்கு முழநிளமும் ஒருமுழ வுயரமுமுள்ள சமானமான வேதிகை யொன்றமைத்தல்வேண்டும்.

(ரு அ-சரு) வேதிகை யமைந்த பின்னர் பராசக்தியாகிய தேவியினுடைய பூஜாதந்திரங்களையும், தத்துவார்த்தங்களையும் உண்மையாயுணர்ந்தவர்களாயும், ஆசாரநிஷ்டர்களாயும், சாதுக்களாயும், விதிமுறையாக வேதமந்திரங்களைச்சொல்லத்தக்கவர்களாயுமுள்ள அந்தணர்கள்ஒன்பதின்மராவது, ஐவராவது, மூவராவது, ஒருவராவது, பிரதமைமுதல் பூசாந்தம்வரையில் நாடோறும் வரும்படியாகப் பிரார்த்தித்து அவர்களலங்கார பூஷணத்தோடிருக்க திரவியமுடையவனு யிருப்பானாயின் விசேடமாயும், இஃதின்றாயின் தன்னளவுக் கேற்றவாறாயும், உலோபமில்லாமல் அவர்மன மகிழும்படியாய் வஸ்திராபரணங்கள் தந்து *மனமகிழ்ந்து வந்திருக்கச்செய்து பிரதமைமுதல் சாஸ்திரோக்தமாய் ஐந்துநாழிகைப் பொழுதி லெழுந்திருந்து சவுசாதிகளை முடித்துக்கொண்டு நதியிலாவது நதத்திலாவது தடாகத்திலாவது நடபாவியிலாவது கிணற்றிலாவது கிருகத்திலாவது விதிப்படி ஸ்நானஞ்செய்து நித்திய கன்மாநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு பூஜார்த்தமாய் முன் வரித்திருக்கிற அந்தணர்களுக்கு மதுசம்பந்தமான அர்க்கிய பாத்திய சமனக்கள்தந்து அவர்களுடன் பூஜாமண்டபஞ்சென்று அவ்வந்தணரெல்லாம் வேதகோஷஞ்செய்ய வேதிகையின்மேல் வெண்பட்டிட்டிருக்குஞ் சிங்காதனத்தைத்தாபித்து அதன்மேல் சங்கு சக்கர கதாபத்மக்களைத் தாங்கிநிரா நின்ற சதுர்ப்புஜத்தோடு கூடிய தேவி ரூபமாகவாவது, பதினெண் கரத்தோடிராநின்ற தேவி ரூபமாகவாவது திவ்யமாகிய வஸ்திரவகைகளாலும், ரத்ன முத்தார முதலிய ஆபரணவகைகளாலும், மலர்மாலைமுதலிய மாலை வகைகளாலும், அலங்காரஞ்செய்து எழுந்தருளச்செய்தல் வேண்டும். பின்னர் கும்ப பூஜை நிமித்தமாய்ச் சிங்காதனத்தின் பக்கத்தில் கலசஸ்தாபனஞ்செய்து அதின் புண்ணியதீர்த்தத்தை நிறைத்து சுவர்னம் இரத்ன முதலியவைகளையிட்டு மாவிலைமுதலிய ஐந்துவகைத் தளிர்களை மேலேவைத்து வேதமந்திரங்களாலேமந்திரித்து மங்கலவாத்தியங்கள் கோஷிக்கப் பூஜாத்திரவியங்களைக்கொண்டு பூஜித்தல் வேண்டும்.

அதன் பின்னர் ஹே அம்பா! சிரேஷ்டமாகிய நவராத்திரி

---

*அந்தணர்கள் மனமகிழ்ச்சியில்லாமல் எது செய்தாராயினும் அதனால் வரும்பயன் சித்தியாகாமற் போகுமாதலான் அவர் எவ்விதத்திலாவது மனமகிழ்ந்திருக்கச் செய்தல்வேண்டும்.

விரதத்தைச் செய்கிறேனென்றும், எனக்கு யாதொரு இடையூறும் வராமல் வேண்டியசகாயஞ் செய்யவேண்டுமென்றும், இந்தப்பூஜையை என்னுடைய சத்திபளவாகச் செய்கிறேனென்றுஞ் சங்கற்பித்துக்கொண்டு, சந்தனம் அகில் பச்சைகற்பூரங் கஸ்தூரி முதலிய வாசனைத்திரவ்யங்களாலும்,மந்தாரம் சண்பகம் சாதிமல்லிகைமுதலிய வாசனையுள்ள மலர் வகைகளாலும், வில்வ பத்திரங்களாலும், உலகமாதாவாகிய தேவியைத் தூப தீபங்களோடு மந்திர பூர்வகமாய் விதிப்படிபூஜித்து நவாவரண பூஜையுஞ்செய்து, நானாவிதமாகிய பழரசங்களால் அர்க்கியங்கொடுத்து, இளநீர் மாதுளை வாழை பலா மா முதலிய பழவகைகளை விசேஷமாகவைத்து மிகுந்த அன்போடு அன்ன நிவேதனஞ் செய்தல்வேண்டும். பூஜிப்பவர் மாம்ச போஜனஞ் செய்பவராயுருப்பின் மகிஷபலி, மேஷபலி வராக பலி, முதலியவைகளைத்தந்து அதன் பின்னர் ஹோ அதன் பின்னர் தஹாமார்த்தமாய் ஒருமுழ நீளமும் அகலமுள்ள திரிகோய் தல்வேண்டும்.

ஓ ஜனமேஜயனே மகாராஜனே! மஜேகரமாகிய நவ ராத்திரி பூஜையை அநேகத் திரவியங்களால் முன்சொல்லியவகறு நிர்த்த கீத வாத்தியத்தோடு சிறப்புடன் மூன்றுகாலமுஞ் செய்தல் வேண்டும். அந்த ஒன்பதுநாளும் விரதமிருப்போன் உபவாசியாயிருந்து பூஜித்தப் பின்னுண்டு சயனசுகாதிகளைவிட்டுத் தரையிற்படுத்தல்வேண்டும். பிரதமைதிதியில் அஸ்த நட்சத்திரங் கூடுமாயின் அது விசேடமென்றும், அத்தினத்தில் தேவியைப்பூசித்தால் சகலாபீஷ்டங்களையுங் கொடுப்பாளென்றும் பெரியோர் கூறுவர்.

ஓ அரசனே! தேவியையுத்தேசித்துப் பலிகொடுக்கும் மகிஷ முதலியவைகள் சுவர்க்கத்தை யடையுமேயன்றி நரகத்தையடையா. அதனைக்கொன்றவர்களும் அக்கொலையால் அடையத்தகும்நரகத்தையடையார். ஏனெனில் ஜீவபரமாக எதைச்செய்யினும் அது பாபத்தைவிளைவிக்குமென்றும், அருட்பரமாக எதைச்செய்யினும் அதுபுண்ணியத்தை விளைவிக்குமென்றும் பிரமாணங்கூறுகின்றது. அது அப்பிரமாணமோவெனின் ஆகா. ஜீவன் அஞ்ஞானியாதலால் அஞ்ஞானசம்மந்திக்குச் செய்வதெல்லாம் அஞ்ஞான விளைவாகிய பாவத்தைக்கொடுக்குமன்றிப் புண்ணியத்தைக் கொடுக்கமாட்டா, அருள் இரக்கமுடையதாதலால் அருட்சம்பந்தத்திற்குச் செய்வதெல்லாம் அருள்விளைவாகிய புண்ணியத்தைக்

கொடுக்குமேயன்றிப் பாபத்தைக் கொடுக்கமாட்டா. ஆகையால் அந்த அருட் சொரூபிணியாகிய தேவிக்குச்செய்வது அஹிம்சையாகிய பரமதருமமாமென்றும் இம்சையையடையும் அந்தவுயிர்களும் பரமபதத்தையே யடையுமென்றும் அறிவாயாக.

இதுநிற்க, கும்பபூஜைமுதல் ஹோமாந்தம்வரையில் செய்யத்தகுவனவெல்லாஞ் செய்துமுடித்துப் பின்னர் கன்னிகைகளைப்பூஜித்தல்வேண்டும். இந்த பூஜைக்குரிய கன்னிகைகள் யாவரெனின் சுகந்த முதலியவைகளை யறியத்தக்க இரண்டுவயதுமுதல் பத்துவயதளவுமுள்ள கன்னிகைகளாகும். இக்கன்னிகைகளுக்கு முறையே குமாரி திரிமூர்த்தி கல்யாணி ரோகிணி காளிகா சண்டிகா சாம்பவி துர்க்கா சுபத்திரா என்று ஒவ்வொரு கன்னிகைக்குப் பெயராகும். அப்பெயர்களால் அவர்களை ஸ்ரீரஸ்து, ஸ்ரீயுக்தம் என்கிற பதங்களை முதலாகவுடைய வேதமந்திரங்களாலும் அது அறியாதான் பீஜமந்திரங்களாலும் பூசித்தல்வேண்டும். இவர்களன்றி ஒரு கந்தமும் அறியப்பெறாத ஒருவயதுள்ள கன்னிகையும், பத்துவயதுக்கு மேற்பட்டவர்களும் பூஜைக்கு யோக்கியமாகார். குமாரி முதலாகச் சொல்லப்பட்ட ஒன்பதின்மரில் தினம் ஒவ்வொரு கன்னிகையாவது அல்லது முதல்நாள் ஒரு கன்னிகையும் இரண்டாநாள் இரண்டு கன்னிகையுமாக ஒவ்தொருநாளுக்கு ஒவ்வொரு கன்னிகையை அதிகமாக வருவித்துவைத்துப் பூஜையை நடத்தல்வேண்டும். ஓ ஜனமேஜயனே! இந்தப் பூஜையில் தனக்கமைந்திருக்குஞ் செல்வத்துக்கேற்ப விசேடமாகச் செய்யவேண்டுமேயன்றி லோபகுணத்தால் லோபமாகச் செய்தல்கூடாது.

(சச-சூஉ) இனி அந்த ஒன்பது கன்னிகைகளையும் பூசிப்பதால் வரும் பலனைக் கூறுகின்றேன். ஓ பூமண்டலாதிபனே! குமாரியைப் பூசித்தால் தரித்திரநாசமும், சத்துரு க்ஷயமும், ஆயுள் விருத்தி தனவிருத்தி முதலிய பலவிருத்திகளு முண்டாகும், திரிமூர்த்தியைப் பூஜித்தால் தர்மார்த்த காமியமும், தனதானிய விருத்தி புத்திரபௌத்திராதி விருத்தியு முண்டாகும். கல்யாணியைப் பூஜித்தால் வித்தை ஜயம் ராஜ்யசுகம் இவைகளுண்டாகும். ரோகயைப் பூசித்தால் ரோகநாசமுண்டாகும். காளியைப் பக்தியுடன் பூசித்தால் சத்துருநாச முண்டாகும். சண்டிகையைப்பூசித்தால் ஐஸ்வரியமுண்டாகும். சாம்பவியை நாடோறும் பூசித்தால் யுத்தத்தில் விஜயமும் துக்கஹேதுவாயிருக்கின்ற தரித்திரநிவர்த்தியும்

ராஜசம்மோகமுமுண்டாகும். துர்க்கையைப் பூஜித்தால் குரூரமாகிய சத்துருநாசமும், நடத்துவதற்குக்கூடாத கிருத்தியத்தை நடத்தும் ஆற்றலும், பரலோகசுகமு முண்டாகும். சுபத்திரையைப் பூசித்தால் மனோரத சித்தியுண்டாகும்.

இவ்வண்ணம் அவரவர்வேண்டும் பலன்களைக் கொடுக்கவல்ல குமாரிமுதலிய திருநாமங்களால் கன்னிகைகளைப் பூசித்தலென்றால் அந்த நாமஙகளுக்கு மூலகாரணியாயுள்ள பரதேவதையை அடியில்வரும் தியானசுலோகங்களால் தியானித்தலாகும்.

குமாரஸ்யச தத்வானி யாஸ்ருஜத்ய பிலீலய
காதீநபிச தேவாம்ஸ்தான் குமாரீம் பூஜயாம்யஹம். (க)
சத்யாதிபி ஸ்திரிமூர்த்திர்யாத் தர் ஹிநாநாஸ்வரூபிணீ
த்ரிகால வ்யாபிநீ சக்தி ஸ்திரிமூர்த்திம் பூஜயாம்யஹம். (உ)
கல்யாணகாரிணீ நித்யம் பக்தாநும் பூஜிதாநிசம்
பூஜையா மிசதாம்பக்தியா கல்யாணீம் சர்வகாமதாம். (ங)
ரோஹயந்தீச பீஜாநி பிராக்ஜன்ம சஞ்சிதாநிவை
யாதேவீ சர்வபூதாநும் ரோஹிணீம் பூஜையாம்யஹம். (ச)
காளிகாலயதே சர்வம் பிரஹ்மாண்டம்ஸ சராசரம்
கல்பாந்த சமயேயாதாம் காளிகாம் பூஜையாம்யஹம். (ரு)
சண்டிகாம் சண்டரூபாஞ்ச சண்டமுண்ட விநாசிநிம்
தாம்சண்ட பாபஹாரிணீம் சண்டிகாம் பூஜையாம்யஹம். (சு)
அகாரணுத் சமுத்பத்திர் யந்மயைஃ பரிகீர்த்திதா
யஸ்யாஸ்தாம் சுகதாந்தேவீம் சாம்பவீம் பூஜையாம்யஹம்()
துர்க்காத்ராயதி பக்தம்யா தாதுர்க்கதிநாசனீ
துர்ஜ்ஞேயா சர்வதேவாநும் தாம்துர்க்காம் பூஜையாம்யஹம்.
சுபத்திராணிச பக்தாநும் குருதேபூஜிதாசதா
அபத்ரநாசிநீம் தேவீம் சுபத்திராம் பூஜையாம்யஹம். (கூ)

(இ-ள்.) சிசுவினுடைய கிரீடா விநோதங்களைப்போலும் எவள் செய்கின்றனளோ, பிரமனுதிதேவர்களை எந்தச்சத்தியின் லீலையினுல் சிருஷ்டிக்கின்றனளோ அந்தக் குமாரியாகிய சத்தியை நான் பூசிக்கிறே னென்றும், சத்துவ முதலிய முக்குணங்களால் அநேகரூபிணியாய்ச் சிருஷ்டி திதி சங்காரமென்கிற மூன்றுகாலங்களிலும், அன்றிகாலை உச்சி மாலை என்கிறமூன்றுகாலங்களிலும் எந்த சத்தியினுல் வியாபித் திருக்கின்றனளோ அந்தத் திரிமூர்த்தியாகியசத்தியை நான் பூசிக்கின்றேனென்றும், பக்தகோடிகளால் எப்பொழுதும் பூசிக்கப்பட்டு அவர்களுக்கு எந்தச்சத்தியினுல் மங்க

ளத்தைச் செய்கின்றனளோ அந்தக்கலியாணியாகிய சத்தியை நான் பூசிக்கிறேனென்றும். எண்பத்துநான்குலக்ஷம் பேதமாயுள்ள சகலப்பிராணிகளுடைய பூர்வஜன்ம சஞ்சிதங்களாகிய பாபவித்துக்களை எந்தச் சத்தியினால் நிவர்த்தி செய்கின்றனளோ அந்த ரோகணியாகிய சத்தியை நான்பூசிக்கிறேனென்றும், பிரளயகாலத்தில் சராசராத்மகமாகிய சகலபிரமாண்டங்களையும் எந்தச்சத்தியினால் சங்கரிக்கின்றனளோ அந்தக்காளியாகிய சத்தியை நான் பூசிக்கிறேனென்றும், சண்டமுண்டர்களைச் சங்கரித்து மகாபாதகங்களை எந்தச்சத்தியினால் நிவர்த்திசெய்கின்றனளோ அந்தச்சண்டிகையாகிய சத்தியை நான் பூசிக்கிறேனென்றும், யாதொரு தேஜோரூபியாகிய பரமாத்மாவி னிச்சைவண்ணம் எந்தச்சத்தியினால் திருவுருவங்களைத் தருகின்றனளோ அந்தச் சாம்பவியாகிய சத்தியை நான் பூசிக்கிறேனென்றும், துர்க்கதியைப் போக்குகின்றவளாய்த் தேவசமூகங்களா லறியக்கூடாதவளாய்ப் பக்தர்களை ரக்ஷிக்கின்றவளாய் எந்தச்சத்திவிளங்குகின்றனளோ அந்தத்துர்க்காதேவியாகியசத்தியை நான்பூசிக்கிறேனென்றும், தன்னைப்பூசிக்கின்றவர்களுக்கு மங்களங்களைச் செய்து அமங்கலங்களை எந்தச் சத்தியினால் போக்கடிக்கின்றனளோ அந்தச் சுபத்திரையாகிய சத்தியை நான் பூசிக்கிறேனென்றுங் கூறுவதாகும். இவ்வாறுபண்டிதர்கள் கன்னிகைகளைத் தியானித்து கந்தபுஷ்ப வஸ்திராதிகளால் அதிக சிறப்பாகப் பூசித்து வருகின்றனர்.

இருபத்தாறும் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்காரயைநமஃ

இருபத்தேழாம் அத்தியாயம்.

## நவராத்திரி மகாத்மியகதனம்.

---

(க-ரு) அங்கஹீனனையும், குஷ்டம் பிடித்தவளையும், புண்ணுள்ளவளையும், துர்வாசனையுள்ளவளையும், கட்டுப்பாடில்லாத குலத்திற் பிறந்தவளையும், பிறவிக்குருடியையும், குரூபியையும், தேகத்தில் ரோமமுடையவளையும், சுகந்த புஷ்பங்களைத் தரித்தவளையும். குண்டகியையும், கோளகியையும், கானீனையையும், எல்லாப் பூஜைகளிலேயும் விலக்கல்வேண்டும்.

(௪-எ) ரோகமில்லாதவளாயும், நல்ல அழகுள்ளவளாயும், அவயவலக்ஷண முடையவளாயும், புண்ணில்லாதவளாயும், ஒரே வம்சத்திற் பிறந்தவளாயுமுள்ள கன்னிகையையே பூஜிக்கவேண்டும். எவ்விதமான இஷ்டசித்திகளுக்கும் பிராமண கன்னிகை விசேடமாகும். அன்றி ஜயத்தைவிரும்பினவர்களுக்கு க்ஷத்திரிய கன்னிகையும், லாபம் வேண்டியவர்களுக்கு வைசிய கன்னிகையும், சூத்திரகன்னிகையும் விசேடமாகும். ஆகையால் எவர்கள் எதனை விரும்புகிறார்களோ அவர்கள் அதற்குரிய கன்னிகையைப் பூஜித்தல்வேண்டும்.

அங்ஙனமாயின் ஒருவன் ஜய முதலியவற்றை விரும்புவானாயின் தனக்குக்கீழுள்ள குலத்தினரைப் பூஜித்த லடுக்குமோவெனின் அடாது. ஆகையால் பிராமணன் எதைவிரும்பினபோதிலும் பிராமண கன்னிகையையும், க்ஷத்திரியர் தன்னினத்திலுள்ள கன்னிகையையும், தனக்கு மேலுள்ள பிராமண கன்னிகையையும், வைசியர் தன்னினத்திலுள்ள கன்னிகையையும் தனக்குமேலுள்ள இரண்டு குலக் கன்னிகைகளையும், சூத்திரர் தன்னினத்திலுள்ள கன்னிகையையும் தனக்கு மேலுள்ள மூன்று குலக்கன்னிகைகளையும் பூஜித்தல்வேண்டும். அங்ஙனம் பூசிக்கப்படுவோர் நல்ல வம்சத்தி லுற்பத்தியானவர்களா யிருத்தல் வேண்டும்.

ஒருவன் நவராத்திரியில் நியமமாய்ப் பூசைபண்ணுவதற்கு அசக்தனாயிருப்பானாயின் அஷ்டமிதினம் அவசியம் பூசை செய்ய வேண்டும். ஏனெனின் பூர்வம் தக்ஷயாகத்தை அழித்தவளாகிய பத்ரகாளியானவள் அநேககோடி யோகினிகளோடும் தோன்றிய தினமாகையால் அன்று கந்தபுஷ்பங்களாற்பூஜித்து அநேகவிதமான அன்னங்களையும், பாயசமும்பழமுதலியவைகளையும்நிவேதனஞ் செய்து ஹோமாக்கினியில் ஓமமுநடத்திப் பின்னர் பிராமண சந்தர்ப்பணைசெய்வித்து தேவியைத் திருப்திசெய்தல் வேண்டும்.

(அ-உ௯) அசக்தர்களாயுள்ளார் நவராத்திரி விரதத்தில் சப்தமி அஷ்டமி நவமி ஆகிய இம்மூன்று தினங்களில் முன்சொல்லியவாறு உபவாசத்தோடிருந்து பூஜிப்பாராயின் அவர்களுக்கு ஒன்பது நாளுஞ்செய்த பலனுண்டாகும். ஓ அரசனே! அந்நவராத்திரியில் தேவிக்குப் பூசைகளாலேயும், ஹோமங்களாலேயும், கன்னிகா பூஜைகளாலேயும் பிராமணசந்தர்ப்பணைகளாலேயும். திருப்திசெய்தலேவிரதபூர்த்தி என்று சொல்லப்படும். இரதவிரதங்களும் அநேகவித தானங்களும், சகல சம்பத்தையுங் கொடுக்கும்படியான நவராத்திரி விரதத்துக்குச்சமானமாகமாட்டாது. எக்காலத்திலேயும் இவ்விரதமானது தனதானியங்களையும் நல்ல சந்தானங்களையும் ஆயுளையும் ஆரோக்கியத்தையும் வித்தையையும் அரசாட்சியையும் சுவர்க்க மோக்ஷங்களையும் கொடுப்பது.

இந்த மகிமையறிந்து எவரெவர் எதை எதை விரும்பிச்செய்கின்றனரோ அதை யதை அவர்களுக்குக் கொடுக்குந்தன்மையுடைய இவ்விரதத்தை நடத்தல் வேண்டும். எவர்கள் பூர்வ ஜன்மத்தில் உத்தமமாகிய இவ்விரதத்தைச் செய்யவில்லையோ அவர்கள் இந்தசன்மத்தில் வியாதியுடையவர்களாயும், தரித்திரர்களாயும், புத்திரனில்லாதவர்களாகவும் இருப்பர். அன்றியும் மலடியாகவும் விதவையாகவும் இருக்கின்ற ஸ்திரீகள் எவர்களோ அவர்களும், தனமில்லாதவர்களெவர்களோ அவர்களும் இந்தவிரதத்தைச் செய்யவில்லையென்று யூகிக்கவேண்டியவர். எவன் இவ்வுலகில் பிரசித்தமாகச் சொல்லப்பட்ட நவராத்திரி விரதஞ் செய்யவில்லையோ அவன் இம்மையில் சம்பத்தையடைந்து எப்படி சந்தோடத்தையடைந்துவாழ்வான். மறுமையிலும் எப்படி பரலோகத்தையடைவான். செங்நிறமுடைய சந்தனத்திற்றோய்த்தமிருதுவாகிய வில்வபத்திரங்களால் எவன் மகேஸ்வரியைப் பூசிக்கின்றானோ அவன் பூமியில் அரசனாகவாழ்ந்திருப்பான். உலகில் சிரேஷ்டையாயும், சர்வசித்திகளையுங் கொடுக்கின்றவளாயும், துக்கங்களையெல்லாம் போக்கடிக்கின்றவளாயும், ஆதியாகியுமிருக்கின்ற மகேஸ்வரியை எவன் ஆராதிக்கவில்லையோ அவன் இவ்வுலகில் துக்கமுடையவனாகவும் சத்ரு சம்பந்தமுள்ளவனாகவும் தரித்திரனாகவும் அலைந்துலாவுவன் இது நிச்சயம். தேவியைப் பிரமவிஷ்ணுருத்திரரும் இந்திராக்கினி குபேர வருண அரக்கருந்தியானஞ்செய்து சிருட்டியாதி சகல பாக்கியங்களையும் அடைந்து ஆனந்தித்திருக்கின்றாரென்றால் அந்த மகேஸ்வரியை மாநுடராயுள்ளார் என் உபாசிக்கமாட்டார்கள். தேவராயுள்ளாரும், பிதுர்த்தேவராயுள்ளாரும், சுவாஹாஸ்வதா என்கிற மந்திரப் பிரபாவங்களாலே திருப்தியடைகிறார்கள். யக்ஞங்களில் மகாருஷிகள் வேதோச்சாரணையோடு தேவியினுடைய அந்த இரண்டுநாமத்தை உபாசிக்கின்றார்கள். யாதொருதேவியி னிச்சையினால் பிரமதேவன் இச்சகத்தை சிருஷ்டிக்கின்றான், விஷ்ணுமூர்த்தி அநேக அவதாரங்களைச் செய்கின்றனர், ருத்திரமூர்த்தி சகத்தைபஸ்மமாகச் சங்கரிக்கின்றனர். அவ்வண்ணந்தன்தொழிலைத்தந்து அவரவர்க்குச் சுகத்தைக்கொடுக்கிற தேவியைமாநுடன் என் உபாசிக்கமாட்டான். எந்தபுவனங்களிலேயும் தேவமாநுடமிருக பக்ஷிசர்ப்பங்களாக எவனிருந்தாலும், கந்தர்வராக்ஷச பைசாச முதலிய யோனிபேதங்களா யெவனிருந்தாலும், அவனெல்லாம் அந்தச்சக்தி சம்பந்தமில்லாமல் தன்னிஷ்டப்படி சத்தியுள்ளவனாய்ச் சலிப்பதற்குமுடியாது. ஆகவே சர்வ காமியாத்தங்களையுங் கொடுக்கின்ற அந்த மகேஸ்வரியை எவன் சேவிக்கமாட்டான். தருமார்த்த காமமோக்ஷங்களை யிச்சித்தவன் அந்தத்தேவியின் நவராத்திரியி விரதாநுஷ்

டானத்தை என்செய்யமாட்டான். அந்தவிரதானுஷ்டான முடையவன் மகாபாதகமுடையவனுயினும், அவன்பாதங்களினின்றும் என் விடுபடமாட்டான், இதி லாலோசனையில்லை.

(ரு0-சரு) ஓ ஜனமேஜயனே! பூர்வத்தில் கோசதேசத்தில் சுசீலனென்கிற ஒருவைசியன் தனஹீனனுயும், அதனுல் துக்கமுடையவனுயும், சந்ததிவிருத்தி யுடையவனுயுமிருந்தான். அவனுடைய பிள்ளைகளெல்லாம் அன்னமில்லாமல் மிகுந்த பசியினுல் வாடி அந்திபொழுதிலேமேதனும் பிறாரந் கிடைக்கும் சிற்றுண்டிகளைப் புசித்துக் காலத்தைக் கழித்து வருவார்கள். அந்த வைசியனும் ஜீவிக்கு நிமித்தம் தனக்குக் கீழ்ப்பட்ட குலத்தவரிடத்து ஊழியஞ்செய்து தன் வயிற்றை வளர்த்துக்கொண்டு தன்னுலியன்றவளவில் குடும்பத்தையும் பாதுகாத்து வருவான். இவ்வளவு வறுமையுடையவனுயினும் தருமத்தி லாசை யுள்ளவனுயும், சதாசார முடையவனுயும், சத்தியவாக் குள்ளவனுயும், கோபமில்லாதவனுயும். வறுமையாலுண்டாகுஞ் சித்தசபல மில்லாதவனுயும், குரோதமில்லாதவனுயும், பொறுமை யில்லாதவனுயும், நாடோறும் தேவர்கடன் பிதுர்க்கடன்களைக் கழித்து அதிதி பூஜையை நடத்திப் பின் போஜனம் பண்ணுவதாகிய நியமத்திற் றவறாதவனுயு மிருந்தனன்.

குணசாலியாகிய அச் சுசீலன் அவ்வாறுவாழுநாளில் ஓர்நாள் ஒன்றுங்கிடையாமல் மிகவும் பசித்தனுய் தரித்திரித்தையெண்ணி வாட்டமுற் றிருக்கிறபொழுது சாந்தனுகிய ஓர் பிராமணர் அங்கு வந்தனர். அவரைக்கண்டு பணிந்துநின்று ஓ அந்தணரே! இத் ததித்திரம் எப்படிப்போகும் அவ் வுண்மையைத் தயவுசெய்து சொல்லும். ஆனுல் நான் பணக்காரனுக வேண்டுமென்பதுமன்று, திரவியத்தை யபேக்ஷித்து அதனையே தேடி என்னுடைய ஆயுளைக் கழிக்க வேண்டுமென்னு மெண்ணமுடையவனுமன்று, குடும்ப போஷணை நிமித்தம் அதனை வேண்டுகின்றேனே யல்லாமல் வேறல்ல. இன்று எனது பாலியனுகிய பிள்ளையும் பெண்ணும் புசிப்பதற் கொன்றுமில்லையே யென்று ஓயாம லழுகின்றனர். அன்னம் இருக்கிறபக்ஷத்தில் ஒருபிடி யன்னமாவது கொடுப்பேனல்லவா? அவ்வளவு கூடவில்லை. இப்படியே மற்றொரு குழந்தையழ அவனைத் துறத்திவிட்டேன். அவனழுதுகொண்டே போயினுன். இவைகளை எண்ணியெண்ணி என்மனம் மிகவும் வாட்டமடைகின்றது. இதற்கெல்லாம் பணமில்லாமல் என்னசெய்வேன். மற்றொரு பெண்ணுக்கோ கலியாணஞ் செய்யுஞ் சமயம் வந்திருக்கின்றது பணமோவில்லை. என்செய்வேன். எங்கள் குலத்தில் பத்து வயதுக்கு மேற்பட்டால் கலியாணத்துக்கு யோக்கியமில்லை. காலம் தவறிப்போகிறது. ஓ பிராமணரே! இவைகளான் மிகவுந் துக்கிக்

கிறேன். நீரெல்லாந் தெரிந்தவராகையால் இவ்வறுமை விட்டொழியத்தவமாவது தானமாவது விரதானுஷ்டானமாவது மந்திர செபமாவது சொல்லும், என்னுல் போஷிக்க வேண்டிய குடும்பத்தை நான் போஷிக்க வேண்டும். அது மேற்கூறியவற்றுள் எது செய்தாலாகும்? தனத்தை யதிகமாக அபேக்ஷிக்கவில்லை. குடும்ப போஷணைக்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவே நான் விரும்புவது. ஆகையால் எதையாவது சொல்லுவீராளுல் உம்முடைய அநுக்கிரகத்தால் என் குடும்பம் சுகத்தை யடைந்ததாக வேற்படும் நன்ருயோசித்து நானெது நடத்தத் தக்கதோ அதைச் சொல்லுமென்று பலவாறு இரங்கிக் கேட்டனன்.

(சச-௫எ) இவ்வாறு அந்தவைசியன் சொல்லக்கேட்டவராகிய பிராமணோத்தமர் மிகவுஞ் சந்துஷ்டராய் அந்த வைசியனைப் பார்த்து ஓ வைசிய சிரேஷ்டனே! நீ தவமுதலியவற்றி லொன்றுஞ் செய்யவேண்டாம். மங்களப் பிரதமாகிய நவராத்தி விரதத்தை யநுட்டித்து தேவியினுடைய பூஜையும், ஹோமமும், பிராமண போஜனமும், தேவிமந்திர ஜபமும், அந்த ஜபம் சித்தியாவதற்கு ஹோமமும் தர்ப்பணமும் உன் சத்தியளமாக நடத்துவையேயாயின் நீ உத்தேசித்த காரியமாகிய தனலாபமுண்டாகின்றது ஜனமேஜயனே இதைக்காட்டிலும் வேறு விரதம் இப்பூமண்டலத்திலில்லை. இந்த விரதம் மகிமையுடையதுஞ் சுகத்தைக்கொடுப்பதுமாயுள்ளது எவனுவது நவராத்திரி விரதத்தை விடாது அநுட்டிப்பானுனல் அவன் ஞானத்தை விரும்பினுலும் சத்துரு நாசத்தை விரும்பினுலுங் கொடுக்கும் பெருமையுடையது.

முன் ராமமூர்த்தி ராஜ்யத்தை யிழந்து ஆரணியஞ்சென்று அவ்விடத்திற் சீதையையுந் தொலைத்துக் கிஷ்கிந்தையையடைந்து காமபீடிதராய் அவ்வக்கினியால் கொளுத்தப்பட்டு மகா துக்கத்தை யடைந்திருக்குஞ் சமயத்தில் நவராத்திரி விரதத்தை யநுட்டித்து விதிவழியாகத்தேவியைப் பூசித்து அவளுடைய அநுக்கிரகத்தைப் பெற்றுத் தீரமுடையவராய்ச் சேதுபந்தனஞ்செய்து மண்டோதரித் தலைவனுகிய ராவணனையும், மகாபலிஷ்டனுகிய கும்பகர்ணனையும் அவர்களுடைய மக்கள் முதலிய யாவரையுஞ் சங்கரித்து விபீஷணனை ரக்ஷித்து அயோத்தியை வந்தடைந்து அகண்ட ராஜ்யாதிபதியாய் இவ்வுலகைச் சுகமாக ஆண்டுவந்தனர். ஓ வைசியனே! ராமமூர்த்திக்கு நேரிட்ட மகா துக்கத்தைப்போக்கி மிக்க சந்தோஷத்தைக் கொடுத்ததாகும் இந்த நவராத்திரி விரதமென்றும் சொல்ல, அதைக்கேட்டவைசியன் அவரையே தன்னுடைய குருவாகக்கொண்டு மாயாபீஜ சகிதமாகிய தேவிமந்திரத்தை யுபதேசஞ் செய்யப்பெற்று மிகுந்த பத்தியோடும் நவராத்திர விரதத்தை மேற்கொண்டு தேவிபூஜையை நானுவித திரவியங்களால் திருப்தி

யாகச் செய்யத்தொடங்கி ஒன்பது வருடம் அந்த மாயாபீஜ ஜபத்தோடு செய்துவந்தனன். ஒன்பதாவது வருடம் மஹாஷ்டமி திதியில் அர்த்தராத்திரியில். மகேஸ்வர் வெளிப்பட்டுத் தரிசனங் கொடுத்து அவன் வேண்டிய வரங்களெல்லாந்தந்து அவனை என்றும் வருமை யணுகாவண்ணங் கிருதகிருத்தியனாக்கிச்சென்றனன்.

இருபத்தேழாம் அத்தியாயம் முற்றிற்று.

---

உ

ஹ்ரீங்காராஸ்தானநர்த்தக்யை நமஃ

இருபத்தெட்டாம் அத்தியாயம்.

## ஸ்ரீராமசரிதம்

---

ஓ மகருஷிகாள்! இதுகாறும் நவராத்திரி விரதபூஜையில் கன்னிகைகளைத் தியானித்து வழிபடுதலாதியாகிய விரதபூர்த்தியின் விதிமுறைகளையும், சுசீலனென்கிற வைசியன் ஸ்ரீராமமூர்த்தி நவராத்திரி விரதத்தை யநுஷ்டித்த பின்னரே இழந்த சீதையையும், ஒழிந்த ராஜ்யத்தையும் பெற்று அகண்டமண்டலாதிபதியாய் வாழ்ந்திருந்தாரென்கிற சரித்திரத்தை ஓரந்தணரால் கேள்வியுற்றுத் தானும் அவ்விரதத்தை யனுஷ்டித்துத் தன்னைவிட்டுப் பிரியாதிருந்த வறுமைக்கு விடைகொடுத்துத் தன்னிடம் வருவதற் கஞ்சியிருந்த செல்வந் தன்னைவிட்டு நீங்காதிருக்கத் தேவி யனுக்கிரகம் வரப்பெற்றுய்ந்த வரலாற்றினைச்சொல்லி வந்தோம். இனி, ஸ்ரீராமமூர்த்தி இந்த விரதத்தை யனுஷ்டித்ததற்குக் காரணமும், அனுஷ்டித்தபின்னர் அவர்சீதையையும் ராஜ்யசெல்வத்தையும் பெற்றவரலாறும்கூறுகிறோமென்று சூதபகவான்சொல்லத்தொடங்கினர்.

(க-கஅ) ஜனமேஜயன் வியாசமுநிவரை நோக்கிச் சுகத்தைக் கொடுப்பதாகிய தேவீவிரதத்தை ஸ்ரீராமமூர்த்தி எவ்வாறு அநுட்டித்தார்? எவ்விதமாக ராஜ்யத்தை இழந்தார்? என்ன காரணத்தால் மனைவியாகிய சீதையை இழந்தார் இவ்வற்றைச் சொல்லவேண்டுமென்று கேட்க வியாசமுநிவர் சொல்லத்தொடங்கினர்.

பூர்வம் சூரியவம்சத்திற் பிறந்தவனும், தெய்வபக்தி பிராமண விசுவாச முதலியவற்றில் மறவாத அறிவுடையவனும், அயோத்தியாபுர வசேியாயும், ஸ்ரீமானுமுள்ள தசரதனென்னும் ஓரரசனிருந்தான். அவ்வரசனுக்கு உலகமெல்லாம் பிரசித்தியாய்ப் புகழ ராமலக்ஷ்மண பரத சத்ருக்னர்களென்று நான்கு குமாரர்கள் பிறந்தார்கள். அவர்களில் கௌசலை குமாரன் ஸ்ரீராமமூர்த்தி கைகேயி குமாரன் பரதன், சுமித்திரை குமாரர்கள் இரட்டைப்பிள்ளைகளாகிய லக்ஷ்மண சத்ருக்கனர்கள். அந்நால்வருங் குணத்திலும் ரூபத்திலும் சமானர்களாய்த் தனுர்வித்தை முதலிய

நாளுவித்தைகளில் தந்தை மகிழத்தக்க. சமர்த்தர்களாய் உபநயன சலஸ்காரம் பெற்றவர்களாய் வாழும்நாளில் விஸ்வாமித்திர முனிவர்வந்து தசரதனைப் பார்த்து உன்னுடைய மூத்த குமாரனாகிய ராமனை என்னுட னனுப்பவேண்டுமென்று காரணத்துடன் சொல்லத் தசரதன் அவரை யனுப்புவதத் குடன்படாது மனம் நொந்து பின்ன ரவருக்கஞ்சி அவர் வேண்டியபடியே பதினாறு வயதுள்ள ராமனை லக்ஷ்மணருடன் கூட்டி விஸ்வாமித்திரர் வசம் ஒப்புவித்து விடைகொடுத்தனர். முனிவரும் இவர்களை யழைத்துக்கொண்டு போகும்போது மார்க்கத்தில் கோரரூபிணியாயும் ருஷிகளுக்குத் துக்கத்தை விளைவிக்கின்றவளாயுமுள்ள தாடகை என்கிற ராக்ஷசியை ஸ்ரீராமமூர்த்தி ஒரே பாணத்தால் சங்கரித்துச் சுபாகு என்னும் ராக்ஷசனை யடித்து மாரீசனைத் தன் பாணவேகத்தினால் இறந்துபோனவனைப்போ லாக்கினர்.

இங்ஙனமான பெரிய கிருத்தியங்களை ராமலக்ஷ்மணர்கள்செய்து யாகத்துக்கோ ரிடையூறில்லாம னடத்தி விஸ்வாமித்திரரோடு மிதுலைக்குப் போகும்போது ராமர் மார்க்கத்திலிருந்த முனிபத்தினியாகிய அகலிகையைச் சாபத்தினின்று விடுவித்து அவளைப் புனிதமாகிய மங்கையாக்கி மிதுலாநகரத்திற்குப்போய் சனக மகாராஜாவினால் பந்தயமாக நியமிக்கப்பட்டதும் ருத்திர மூர்த்தியினா லெறியப்பட்டதுமான தனுசைமுறித்து இலக்குமி அம்சமாகியும் ஜனக புத்திரியாகியுள்ள சீதையை விவாகஞ் செய்துகொண்டனர் பின்னர் ஜனகமகாராஜன் தான்பெற்ற பெண்ணாகிய ஊர்மிளையை லக்ஷ்மணருக்கும், தன்சகோதரனாகிய குசத்துவனுடைய இரண்டுபெண்களை அழகுள்ளவர்களாகிய பரதர் சத்ருக்னர்களுக்குங் கொடுத்துக்கலியாணஞ் செய்துவைத்தான். பின்னர் தசரதன் ஸ்ரீராமருக்கு பட்டாபிஷேகஞ்செய்ய வசிஷ்டர் முதலியோரிடம் ஆலோசித்து அதற்குரிய சம்பாரங்களைச் சேகரிக்கின்றபொழுது கைகேசி அவைகளைப் பார்த்துத் தன் சுவாதீனத்திலிருக்கின்ற தசரதனை நோக்கி முன் உம்மால் எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள இரண்டு வரங்களை இப்போது கொடுக்கவேண்டும் அவை யென்னையெனில், என் குமாரனாகிய பரதனுக்கு ராஜ்யமும், ராமனுக்குப் பதினான்கு வருடகாலம்வரை வனவாசமுமா மென்றாள்.

(கசு-உஅ) அச்செய்தியறிந்த ராமமூர்த்தி சீதாலக்ஷ்மணரோடு அரக்கர்கள் சஞ்சரிக்கின்ற தண்டகாரணியத்தை யடைந்து வனசஞ்சரியா யிருநதனன். தசரதன் புத்திரனை விட்டுப் பிரிந்ததனால் துக்கித்து முன் தனககு நேரிட்டசாபத்தையுஞ் சிந்தித்துப் பிராணனைவிட்டான். இச்செய்தி அறிந்த பரதன் தாயாரால் இவ்வளவு தீங்குநேரிட்டதென்று தந்தையைப் பார்த்து மனநொந்து பின்தன் தமையனாகிய ஸ்ரீராமமூர்த்தியிடஞ்சென்று அவர் சந்

தோஷிக்கும்வண்ணம் அரசாங்கத்தைத் தானாள வெண்ணாத குறிப்பை நன்றாய்க் காட்டிப் பின்னரவராணையால் அயோத்தியை யடைந்து அரசாண்டுவந்தனன். பரதன் செய்தி யிங்ஙனமிருக்க, வனவாசியாய்ப் பஞ்சவடியில் வசித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீராம மூர்த்தியினிடத்தில் ராவணன் தங்கையாகிய சூர்ப்பனகை காம மிகுதிகொண்டுவர, அவளை மூக்கறுத்து அங்கஹீனையாக்கித் துறத்த, அவளங்கங் குலைந் திருப்பதைக் கரன் முதலானவர்கள் பார்த்து அளவிறந்த தேஜஸோடும் விளங்குகின்ற மகாவீரராகிய ஸ்ரீராமமூர்த்தியோடு யுத்தஞ்செய்யத்தலைப்பட்டார்கள். அது கண்ட சத்தியபராக்கிரமசாலியாகிய ராமமூர்த்தி, மகருஷிகளுக்கு க்ஷேமத்தை யுண்டுபண்ணு மெண்ண முடையவராய் மகா பலசாலி களாகிய அவர்களைக் கொன்று சூர்ப்பனகையையும் அங்கிரா வண்ண மோட்டினர். அவளோடி இலங்கையை யடைந்து கரதூஷணனை ராமன்கொன்றானென்றுஇராவணனிடஞ்சொல்ல அவர்க ளிறந்தாரென்று கேட்ட மாத்திரத்தில் அடங்காத குரோதமுடை யவனாய் ரதத்திலேறி மாரீசனிடஞ்சென்று ஓ மாரீசனே! நி உன் மாயையினால் சீதைக்கு ஆசைவிளையும் வண்ணம் ஓர் பொன்மா னாகப் போவாயென்று சொல்லியனுப்ப, அதுபோலவே அம்மாரீ சன் பொன்மானா யுருவங்கொண்டு மகா மாயனாய் ஆச்சரியப்படத் தக்க அவயவத்தோடும் சீதை கண்களாற் காணுமாறு அவள் முன் வந்து சமீபத்தி லுலாவினன்.

(உகூ-சச) சீதை யூழாற் றூண்டப் பட்டு நாயகனைப்பார்த்து ஓ என்னாயகனே! அந்த மானினுடைய தோல் என்ன காந்தியா யிருக்கிறது, அதனை நீ என் சுவாதீனப்படுத்த வேண்டுமென்று மிகுந்த ஆசையுடன் கேட்க, இராமரும் ஆலோசனையற்றுத் தன் தம்பியாகிய லக்ஷ்மணரைச் சீதைக்குகாவலாக வைத்து வில்லை யும் பாணத்தையு மெடுத்துக்கொண்டு அந்த மானை நோக்கிச் செல்ல, அது அவரது கண்ணுக்குத் தோன்றுவதுபோற் காட்டிப் பின் மறைதலும், மறைந்துபோயிற்றே என்று பார்க்கும்போது தோன்றுதலுமான மாயவித்தைகளைக்காட்டி நெடுந்தூரம்போய் அங்கு இவர் கைக்கு அகப்படுவதுபோல் நின்றது. உடனே ராம மூர்த்தி கோபங்கொண்டு தன் கைவசப்பட்டதுபோல் நினைத்துக் கபடமாகிய அந்தமானைக் குரூரமாகிய பாணத்தாலடிக்க மாயாவி யாயும் இறக்கத்தக்கவனாயும துஷ்டனாயுமுள்ள மானுருவங் கொண்ட மாரீசன் அந்த ராமர் அடித்த அடியால் நொந்து அதிக துக்கத்தோடு ஹா! லக்ஷ்மணா!! நானிறக்கிறேன். ஹே! சீதா!! நானிறக்கிறேனென்று இராமர் கூச்சலிடுவதுபோல் ஹீனஸ்வரத் தோடும் பெருங் கூச்சலிட்டான்.

அவ்வோசை சீதையினுடைய காதிற்புக, அவள் அவ்வோசையைத் தன்னுயகனேசையே யாமென நினைத்து மனவருத்தமுற்றவளாய் இலக்ஷ்மணனைப் பார்த்து ஒ லக்ஷ்மணு! உன் தமையன் உன்னை யழைக்கும் ஈனஸ்வரத்தோடு கூச்சலிட்டு இறக்கின்ற செய்தி யறிந்தனையா! சீக்கிரத்திற் போவாய் அதோ கேட்டாயா, இனி நில்லாதே, நீ அவருக்குத் தம்பியல்லவா! அதிவேகமாகச் சென்று வேண்டிய சகாயஞ்செய்வாயென்றுமனங்கலங்கிச்சொல்ல லக்ஷ்மணர் ஒ அம்மணீ! இவ்வுலகில் ராமனை அடிக்கும் புருஷனுமிருக்கின்றனு! அவன் ஒருவ னடிக்க இறப்பானு! நானெண்ணவில்லை. நீ தயிரியத்தைவிடாதே, இது இங்குவந்த பொன் மணிமானினுடைய மாயவஞ்சனையென் றெண்ணுகிறேன். அன்றியும் இந்த ஆச்சிரவத்தில் சகாயமில்லாம லிருக்கின்ற வுன்னைவிட்டு நான் போகக்கூடாது. என்னுடைய அண்ணனும் இவ்விடத்திலேயே இருவென்று ஆக்ஞைசெய்திருக்கின்றுர் நானவ ராஞ்ஞையைக்கடக்க அஞ்சுகிறேன். அந்த மாயமானுல் நேரிட்ட வஞ்சனையைப் பெரிதாகவெண்ணி உன்னைத் தனியாகவிட்டுப்போகேன். உன்னுடைய சமீபஸ்தானத்திலேயே யிருப்பேன், இதைவிட்டு ஓரடியேனும் எடுத்து வைக்கமாட்டேன். அவரிருவென்ற ஆணையைக் கடக்கேன் கடக்கே னென்றனன். சர்வ லக்ஷணத்தோடுங் கூடியிருக்கின்ற சீதை சாந்த குணமுடை யவளாயிருந்தபோதிலும் ஊழினுடைய பிரேரேபணையால் அழுது புலம்பி ஏங்கி லக்ஷ்மணரை நோக்கி அடியில் வருமாறு சில குரூரமானவார்த்தைகளைச் சொல்லத்தொடங்கினுள்.

ஒ லக்ஷ்மணு! இவ்விடத்திற் காவலிருக்கிறதுபோல் இருக்கின்ற வுன்னை உன் தமையனுக்குத் துணையாக வந்தவனென்றும், பரதனும் அவ்வண்ணமாக அனுப்பினுனென்றும் எண்ணவில்லை. வேறென்ன வெண்ணுகிறேனென்றுல், என்னிமித்தமாகவே அந்தப் பரதனு மனுப்பினுனென்றும், நீயுமதுபோலவே என்னிடத்திலாசையுள்ளவனுய் வந்திருக்கிறுயென்றும் எண்ணுகிறேன். ஒ துர்ப்புத்தியுடையவனே! நான் அப்படிப்பட்ட விபசாரியல்லள். இராமமூர்த்தி யிறந்திருப்பாரானுல் பிராணனை விடுவேனேயல்லாது அவரிறப்பை எதிர்பார்த்திருக்கின்ற வுன்னைக் காமத்தினுற் பர்த்தாவாகக்கொள்ள அபேக்ஷிப்பேனே! ஒருக்காலும் அபேக்ஷிக்கமாட்டேன். நான் சீவித்திருப்பேனு? இரேன்! என்று விதிர் விதிர்த்து மிகவுந் துக்கித்து மீண்டும் ஒ லக்ஷ்மணு! நீபோனுற்போ இருந்தாலிரு உன்னுடைய அபிப்பிராயம் எதுவோ தெரியவில்லை தருமாத்மாவாகிய தமையனுரிடத்தில் நீ வைத்திருந்த சிநேகம் எப்படிப் போய்விட்டதோ அறியேனென்று வாய் பேசாதிருந்தனள்.

மறந்து அநேக வருஷகாலம் ஸ்திரீயாகவேயிருந்து புத்திரசோகத்தி னுண்டாகுஞ் சுகதுக்கங்களெல்லாம் அனுபவித்துப்பின்னரந்த விஷ்ணுமூர்த்தியால் நல்லுபதேசமும் பெற்றுத் தடாகத்தில் மூழ்கியெழுந்து புருஷனாயினேன். ஓ ஐயா! நானிவ்வாறு மோகமடைந்ததற்கு காரணம் யாது? மாயையின் வன்மையைக் கடத்தல் மிக்கவரிதென்று நானிதுவரையில் தெரிந்துகொள்ளாம லிருந்தேனாகையால், இந்த மோகோத்பத்தியானது என்னுடைய ஞானத்தைக் கெடுதிசெய்துவிட்டது. இப்பொழுது அந்த மாயையால் விளையும் சுபாசுபங்களெல்லாம் நான் நன்றாயனுபவித்துத்தெரிந்து கொண்டேன். ஓ என்றந்தையே! நீரெப்படி மாயாபலத்தைச் செயித்திருக்கிறீர்? அந்த உபாயத்தை யெனக்குச் சொல்லுமென்றேன். அவரென்னைநோக்கிச் சிரித்து, அப்பா! இம்மாயை சகல தேவர்களாலும் மகாமகிமையுள்ள முனிவர்களாலும் பிரமஞ்ஞானமுள்ள தபசிகளாலும் காற்றையே புசிக்கிற யோகிகளாலும் முக்குணத்தான் மும்மூர்த்திகளாகிய எங்கள் மூவராலும் வெல்லத்தக்கதல்ல. சிருஷ்டித் திதி லயமென்கிற முத்தொழிலையுஞ் செய்விக்கவல்ல அந்த மகாமாயையையறியும் வன்மையுள்ளார் யாவர்? ஓ புத்திமானே! காலம் கர்மம் சுபாவம் இவைமுதலான நிமித்த காரணங்களால் மகாபலமுள்ள அந்த மாயையெங்கும் வியாபித்துச் சுகதுக்கங்களை விளைவிக்கின்றபடியால் அவைகளில் உன்னறிவைச் செலுத்தாமலும் அவைகளுடைய அனுபவங்களி லாச்சரியம் வைக்காமலு மிருப்பாயாக. நாங்களெல்லோரும் மாயையினால் மோகிக்கப்பட் டிருக்கிறோமென்று அதனுண்மையைச் சொல்லவும், நான் அவ்வுண்மையைக்கேட்டுமனந்தெளிந்து மாயாகாரியங்களில் தலைப்பட்டுழலவரும் அவ்வக்காலங்களில் ஆச்சரியப்படுவதைவிட்டு நித்தியானந்த சுகத்தை நாடினவனாயினேன். ஓ வியாசமுனிவரே! பின்னரவரிடத்தில் விடைபெற்றுத் திவ்ய தீர்த்தங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டே வந்தேன். ஆதலால் நீரும் கௌரவபுத்திரை நாசஞ்செய்த மோகமொழிந்து காலகர்ம சுபாவத்துக்கீனமைக்கப்பட்ட இவ்விடத்திலேயேயிருந்து சுகமாய் காலத்தைக் கழித்திவாரும். அவனவனால் செய்யப்பட்ட சுபாசுபகர்மங்கள் கட்டாயமாய் அனுபவிக்கத்தக்கதேயென்று மனதில் நிச்சயித்துக் கொண்டு சுகமாய் சஞ்சரித்திருமென்று சொல்லி என்னிடம் விடைபெற்றுப்போயினர்.

ஓ அரசனே! நானப்பொழுது நாரதமுனிவரால் சொல்லப் பட்டவுண்மையான அனுபவ வார்த்தைகளை மனதில் சிந்தித்துக் கொண்டு அன்றுமுதல் சரஸ்வதி நதிக்கரையில் வாசஞ்செய்துகொ ண்டு அச்சிந்தனையில் என்னுள்ளம் நிலைபெற்று காலத்தைக்கழிக்கு நிமித்தம் உத்தமபுராணமாயும் சர்வசம்சயத்தையுமறவே வொழிப் பதாயும் நானாவித சரித்திரங்களுடன் வேதப் பிரமாணத்தோடு கூடியதாயுமிருக்கிற இந்தத் தேவீபாகவதத்தை நிர்மித்தேன். ஓ அரச ஸ்ரேஷ்டனே! நீயுமப்படியே இம்மாயா விஷயத்தில் சந்தே கப்பட வேண்டியதில்லை. இந்திரஜாலவித்தை செய்கின்றவனொரு வன் மரத்தினால் பாவைகளை நிர்மாணஞ்செய்துகொண்டு அவைக ளைத் தன்னிஷ்டப்படி எப்படிக் கூத்தாட்டிவைக்கின்றனனோ அப் படி மாயாதேவியே தாவரசங்கமரூபமான இப்பிரபஞ்சத்தையெல் லாமுண்டாக்கி ஆட்டிவைக்கின்றாள். பிரம்மாதி ஸ்தம்பபரியந்த மான தேவாசுரர் மானுடர்முதலிய யாவரும் பஞ்சேந்திரியசம்பந்த மான மனமுதலிய அந்தக்கரண வசப்பட்டுழல்கின்றவரே யன்றி வேறில்லையாகலான் அரசனே! யாருக்கும் மூன்றுகுணங்களும் அக் குணங்களோடுகூடிய க்ாரியங்களு முண்டாகிறதென்பது நிச்சயம். மாயையில்பிறந்த மூன்றுகுணங்களும் வெவ்வேறு சுபாவமுள்ள வைகள். சத்துவகுணம் சாந்தமாயும் இரஜோகுணம் கோரமாயும் தமோகுணம் மூடமாயுமுள்ளன. மாயாசம்பந்தமுள்ள இம்முக்கு ணங்களோடு எப்போதும் புருஷன்கூடி இருக்கிறானாதலால் அந்த மாயையைவிட்டிருக்க எப்படிமுடியும்? உலகில் நூலில்லாமல் வஸ் திரமெப்படியாகும். அதுபோல் அம்மூன்றுகுணங்களைவிட்டு மனி தனாவது திரியக்சாதியாவது கிடையாவென்பது நிச்சயம். மண் ணில்லாமல் கடமெப்படியில்லையோ அப்படியே முக்குணங்களை விட்டு மும்மூர்த்திகள் முதலிய யாவருமில்லை. முக்குண வசத்த ராகிய மூவரும் சில சமயத்தில் சந்தோஷமாயும் சில சமயத்தில் சந்தோஷ மில்லாமலும் சில சமயத்தில் துக்கமாயும் சில சமயத் தில் துக்கமில்லாமலு மிருக்கின்றனர். ஓ ஜனமேஜயனே! பிரமன் ஒருவேளையில் சத்துவகுணத்தை யாஸ்ரயித் திருக்குங்காலத்தில் சாந்தனாய்த் தியானமுள்ளவனாய் சர்வ பிராணிகளிடத்தும் பிரீதி யுள்ளவனாய் நல்ல ஞானத்தோடுங் கூடினவனா யிருக்கின்றான். அச் சத்துவகுணத்தைவிட்டு இரஜோகுணத்தை யாஸ்ரயித்திருக் குஞ் சமயத்தில் எல்லா வஸ்துக்களிடத்தும் பிரீதியற்று கோர னாயும், தமோகுணத்தை யாஸ்ரயித் திருக்குங் காலத்தில்

துக்கமடைந்து மூடனுயுமாகின்றான். இப்படியே எனையருமென்பதிற் சந்தேகமில்லை. ஓ அரசனே! பிரமன் முதலானவர்களே முக்குணவசப்பட்டிருப்பார்களானால் சூரிய சந்திரவம்சத்து இராஜாக்களுக்கும் இன்னுஞ் சில மகான்களுக்கும் மாயா விஷயத்தைப்பற்றி நாமென்னவார்த்தை சொல்லலாம். இவ்வுலகில் தேவாசுரர்முதலான எல்லாப் பிரபஞ்சமும் மாயைக்கு ஆதீனமாகையால் நீ இவ்விஷயத்தில் சந்தேகிக்கவேண்டாம். சகலப்பிராணிகளும் மாயாதீனர்களா யம்மாயையினிஷ்டப்படி யலைந்துழல்கின்றனர். அம்மாயை எப்பொழுதும் சம்வித்ரூபமான பராசத்தியினிடமிருந்து அவ்வக்காலத்துக் கேற்றவாறு அப்பராசத்தியினாலே வசப்பட்டு ஜீவர்களிடத்தில் வசித்துக்கொண் டிருக்கிறது. ஆதலால் மாயையோடுகூடின சம்வித்ரூபமாயும் பரமேஸ்வரியாயும் சச்சிதானந்த ரூபியாயுமிருக்கிற தேவியைத் தியானிக்கவேண்டும். பூஜிக்கவேண்டும். நமஸ்கரிக்கவேண்டும். தேவி மந்திரத்தைச் செபிக்கவேண்டும். இத்தியானாதிகளால் தேவி சந்துஷ்டி யடைந்து பிராணிகளைச் சம்சாரத்திலிருந்து விடுவித்துத் தன் மாயையுமடக்கித் தன் னனுபவத்தைக் கொடுக்கிறாள். லோகமெல்லாம் மாயா சொரூபமாக விருக்கிறது. பரமேஸ்வரி அம்மாயா சொரூபமான லோகத்திற்கு எஜமானியாயிருக்கிறாள். ஆதலால் மூன்றுலோகத்தாராலும் சுந்தரமான தேவியே புவனேஸ்வரியென்று சொல்லப்படுகிறாள். ஓ அரசனே! மனம் புவனேஸ்வரி ரூபத்தில் சம்பந்தித்திருக்குமாயின் இச் சம்சாரத்தில் சதசத்ரூபமான மாயை என்னசெய்யும்? ஆதலால் மாயையை யொழிப்பதற்குச் சதானந்தரூபியான தேவியைத்தவிர வேறொரு தேவதாந்தரங்கள் சக்தியுள்ளனவல்ல. தமோராசியை நாசஞ்செய்வதற்குத் தமசே காரணமாகமாட்டாது. சூரியன் சந்திரன் அக்னி மின்னல் இவைகளுடைய காந்தியல்லவோ இருளைப்போக்கடிக்க வல்லமையுள்ளவை. ஆதலால் சம்வித்ரூபமாய்த் தானே பிரகாசித்துக்கொண் டிருக்கிற மாயேஸ்வரியான அம்பிகாதேவியை மாயையைக் கழிப்பதற்காக மிகப் பக்தியோடு பூஜிக்கவேண்டும்.

ஓ அரசனே! உனக்கு விருத்திராசுரவத முதலான பல சரிதங்களைச் சொல்லிவந்தேன். அவைகளை நீயும் பக்திசிரத்தையோடு கேட்டுவந்தனை. இன்னும் வேறெதைக்கேட்க இச்சிக்கிறாய்? தேவியின் மகிமையை விஸ்தாரமாய்ச் சொல்லுகிற இந்தப்புராணத்தின் பூர்வபாகம் உனக்கு என்னாலிதுவரையிற் சொல்லப்பட்டது.

இந்த ரகசியமான பாகவதத்தைச் சாதாரணமான மனிதனுக்குச் சொல்லக்கூடாது. பக்தனையும் சாந்தனையும் தேவியினிடத்தில் பிரீதியுள்ளவனையும் சிஷ்யனையும் அல்லது ஜ்யேஷ்ட புத்திரனையும் அதி பக்தியோடு கூடினவனையு மிருப்பவனுக்கே சொல்லவேண்டும். வேதத்திற்குச் சமானமாயும் நல்ல பிரமாணத்தோடு கூடினதாயும் கதைகளுக்குள் ஸ்ரேஷ்டமாயுமிருக்கும் இப்புராணத்தை மிக்க பக்தியோடு எவன் படிக்கிறானோ எவன் கேழ்க்கிறானோ அவன் இவ்வுலகில் தநவானையும் ஞானவானையுமிருப்பன்.

முப்பத்தோராம் அத்தியாயம்

முற்றிற்று.

ஆ அத்தியாயம் ங்க - க்குச் சுலோகம். (கஅஅசஉ)

ஆறாவது ஸ்கந்தம் முற்றிற்று.

ஸ்கந்தம் சு - க்கு அத்தியாயம் - கடுங.

ஆ ஸ்கந்தம் சு - க்குச் சுலோகம். (அகடு0உ)

## திருப்போரூர்ச் சந்நிதிமுறை. மூலமும்-உரையும்

ஸ்ரீ சிதம்பர சுவாமிகளால் திருப்போரூர் முருகப்பெருமான் மீது பாடியுள்ளது. டிம்மி 8-பக்கங்கள் கொண்டது. இரண்டாம் பதிப்பாக அலங்காரம் வரையில் அச்சிட்டுள்ளது. விலை ரூ- 1 8 0

## காமாக்ஷிலீலாப்பிரபாவம் அல்லது காமாக்ஷி விலாசம்.

இது மார்க்கண்டேயபுராணத்திலுள்ளது -தமிழில் நூதனமாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. காஞ்சி க்ஷேத்திரத்திலுள்ள ஒவ்வொரு க்ஷேத்திரத்தின் மகிமைகளையும் இடங்களையும் தெரிந்துக்கொள்வதற்கு ஓர் கண்ணாடிபோன்றது -வசனரூபமாக எளியதமிழ்மொழியில் எழுதிவுள்ளது- விலை ரூ- 0 6 0

| | | | |
|---|---|---|---|
| பார்வதியார் பனுவல் திரட்டு | 0 | 2 | 0 |
| முருகர்தோத்திரப்பாக்கள் 108-சிவஸ்தல புராணங்களி விருந்து திரட்டியது | 0 | 2 | 0 |
| தணிகை அநுபூதி | 0 | 0 | 6 |
| வள்ளி காந்தன் தோத்திரமஞ்சரி | 0 | 8 | 0 |
| காஞ்சி தேவாரப்பதிகங்கள் | 0 | 2 | 0 |
| ஸ்ரீ தாயுமானவர் பாடலில் „வேதமுடனாகமம்'' என்ற திருப்பாசுரத்திற்கு உரை | 0 | 1 | 0 |
| காஞ்சிபுரம் திருநெறிக்காரைக்காட்டுப் புராண வசனம் | 0 | 1 | 0 |
| கந்தப்புராணக்கதைகளும் அவைகளுணர்த்தும் உண்மைநூற்கருத்தும் (விரிவான) வசனரூபமானது. விலை ரூப. | 0 | 8 | 0 |

## கிறிஸ்தவமும் தமிழும்

திரு. மயிலை, சீனி, வெங்கடசாமி அவர்கள் எழுதிய புதிய நூல்கள்.

இந்நூல் தமிழ்மொழிச் சரித்திரத்தின் ஒரு பகுதி, இதுவரை எழுதப்படாதது. முதல் முதலாக இப்பொழுது வெளி வருகிறது ஒவ்வொருவரும் அவசியம் வாசிக்க வேண்டிவை. பலபடங்களுடன் கூடியது.

கிறிஸ்தவ உலகம் தமிழ் மொழியில் செய்துள்ள மாறுதல்களையும் அபிவிருத்திகளையும் தொகுத்தும் விரித்தும் கூறுவது இந்நூல்.

விலை. ரூ. 1 0 0

## பௌத்தமும் தமிழும்

இதில் எழுதப்பட்டுள்ள பற்பல விஷயங்களில், தமிழ் நாட்டிவிருந்த பௌத்தப் பெரியார்களின் வரலாறுகளும் புத்த தேவர்மீது பண்டைத் தமிழாசிரியர் இயற்றிய சுவை ததும்பும் பாக்களும், மணிமேகலைத் தெய்வத்தின் பண்டையவரலாறுகளும், தமிழ் நாட்டிவிருந்த பௌத்த திருப்பதிகளின் வரலாறுகளும், பௌத்தர் தமிழ் மொழிக்குச்செய்த தொண்டுகளும், ஒவ்வொருவரும் அவசியம் படித்தின்புற வேண்டிய பாகங்கள் அடங்கியுள்ளது. படங்களுடன் ரூ. 1 8 0

விலாசம் :—

சுந்தர விலாஸ்புத்தக சாலை.

3/19, ரண்டால்ஸ் ரோட், வேப்பேரி, சென்னை.

IMPERIAL PRINTING HOUSE, PERIAMET MADRAS.

## சுந்தரவிலாஸ் புத்தகசாலை,

19, ரண்டால்ஸ் ரோட், வேப்பேரி, சென்னை.

| | | | |
|---|---|---|---|
| தேவீ பாகவதம் (வசனம்) 2 வால்யம் | 9 | 0 | 0 |
| காமாக்ஷி விலாசம் ,, | 0 | 6 | 0 |

### பிரஹ்மஸ்ரீ G. V. கணேசய்யர் B. A. B. L. எழுதிய தமிழ்மொழி பெயர்ப்புகள்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் சுமார் 1000 பக்கங்கள் கொண்டது முழு காலிகோ பயிண்டு | 4 | 0 | 0 |
| ஸ்ரீமத்சங்கரபகவத்பாதாளுடைய ஸௌந்தர்ய லஹரி 320 பக்கங்களடங்கியது | 1 | 8 | 0 |
| மூகபஞ்சசதீயின் முதல்பாகம் ஆர்யாசதகம் | 0 | 8 | 0 |
| ,, இரண்டாம்பாகம் கடாக்ஷசதகம் | 0 | 8 | 0 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் (நாகர லிபியில் மூலம்மட்டும்,) | 0 | 5 | 0 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதீ (நாகரலிபியில் மூலமும், நாமாவளியும்) | 0 | 3 | 0 |

### பிரஹ்மஸ்ரீ ந. சுப்ரமணிய அய்யர் அவர்கள் எழுதிய புத்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ நகர விமர்சம் (மூலமும் தமிழுரையும்.) படங்களோடு கூடியது. | 0 | 12 | 0 |
| ஸ்ரீகுரு தத்வ விமர்சம். (தமிழ்) | 0 | 5 | 0 |
| ஸ்ரீவரிவஸ்யாரஹஸ்யம். மூலமும் தமிழ் விரிவுரையும் | 1 | 0 | 0 |
| ஸ்ரீசக்ரபூஜாவிதி சுமார் 20 படங்களோடு கூடியது சாதா பயிண்டு | 2 | 0 | 0 |
| ஷை காலிகோ பயிண்டு | 2 | 8 | 0 |
| ஒருபக்கம் மாத்திரம் அச்சிடப்பட்டது ,, | 3 | 0 | 0 |
| மனீஷாபஞ்சகம் (மூலமும் தமிழ் விருத்தி யுரையும்.) ... | 0 | 5 | 0 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதீ ஸ்தோத்திரம் மூலமும், தமிழ் உரையும். ... | 1 | 0 | 0 |
| ஸ்ரீ காமாக்ஷி படம். Tri-colour Big size | 0 | 3 | 0 |

## உயர்திரு. கா ஆலாலசுந்தரம் பிள்ளை அவர்கள் பதிப்பு மற்றவர்கள் பதிப்பும்.

### தேவி பாகவதம்.

இது டிம்மி 8-பக்கங் கொண்டது 200-பாரத்திற்கு மேற்பட்டுள்ளது. பூர்வபாகம், உத்தரபாகம் என இரண்டுபுத்தகமாக காலிகோ பயிண்டு செய்துள்ளது. விலை ரூபா. 9—0—

### பெரிய புராணம் மூலமும் சித்தாந்த போத ரத்நாகரமென்னும் பொழிப்புரை விசேட உரையும்.

| | | |
|---|---|---|
| ,, 1 2. 3. 4. 5. சருக்கங்கள் | 6 | 8 |
| பத்தராய்ப் பணிவார் சருக்கம் | 0 | 4 |
| காரைக்காலம்மையார்புராணம் மூலமும்உரையும் | 0 | 4 |
| திருஞான சம்பந்தர் புராணம் மூலமும்-உரையும் | 1 | 0 |
| குலச்சிறைய நாயனார் புராணம் ,, ,, | 0 | 2 |
| திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் சித்தாந்த போதரத்நாகர உரையும் ராயல் 8-பக்கங்கொண்டது | 2 | 0 |

### காஞ்சிப்புராணம். மூலமும்-உரையும்.

இது பதவுரை, பொழிப்புரை, விசேட வுரையாகவும் அச்சிட்டுள்ளது. ராயல் 8-பக்கங்கள் கொண்டது.

| | | |
|---|---|---|
| நாட்டுநகரப் படலம் மட்டும் விலை | 1 | 8 |
| 3-ம் பாகம் விலை | 1 | 8 |
| திருப்போரூர்ச் சந்நிதிமுறை மூலமும்-உரையும் | 1 | 8 |

### காமாக்ஷிலீலாப் பிரபாவம். அல்லது காமாக்ஷி விலாசம்

| | | |
|---|---|---|
| வசனரூபமாக எளியதமிழ் மொழியில் எழுதியது. | 0 | 6 |
| பார்வதியார் பனுவல் திரட்டு | 0 | 2 |
| முருகர்தோத்திரப்பாக்கள் 108-சிவஸ்தல திரட்டு | 0 | 2 |
| தணிகை அநுபூதி | 0 | 0 |
| வள்ளி காந்தன் தோத்திர மஞ்சரி | 0 | 8 |
| காஞ்சி தேவாரப்பதிகங்கள் | 0 | 2 |
| ஸ்ரீ தாயுமானவர் பாடலில் "வேதமுடனாகமம்" என்ற திருப்பாசுரத்திற்கு உரை | 0 | 1 |
| காஞ்சிப்புரம் திருநெறிக்காரைக்காட்டுப் புராண வசனம் | 0 | 1 |
| சிவஞானபோதக்கருத்துரை விளக்கம் | 0 | 3 |
| பொன்வண்ணத்தந்தாதி மூலமும்-உரையும் | 0 | 4 |
| கந்தபுராணச் சுருக்கம் | 0 | 8 |
| தேவார திருமுறைத் திரட்டு. | 1 | 8 |
| சிவாலய பிரதக்ஷண விதி | 0 | 4 |
| யுகதருமம் வசனம் | 0 | 2 |
| பௌத்தமும் தமிழும் ,, | 1 | 8 |
| கிறிஸ்தவமும் தமிழும் ,, | 1 | 0 |
| ஜின்னாஹ்ஜீவிய சரித்திரம் | 0 | 8 |

**சுந்தரவிலாஸ் புத்தகசாலை.**

நெ. 19 ரெண்டால்ஸ் ரோட் வேப்பேரி, சென்னை,